# நன்னூல் உரை வளம்

1

## பாயிரம் - I

இரா. கண்ணன்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies

நன்னூல் உரைவளம் (தொகுதி-1)

# பாயிரம் - 1

பதிப்பாசிரியர்

முனைவர் இரா. கண்ணன்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்

இரண்டாம் முதன்மைச் சாலை,

தரமணி, சென்னை-600 113

பேசி 22542992, 22542781

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | **Nannūl uraivalam (Vol. I)**<br>**Pāyiram - 1** |
| Author | : | Dr. R. Kannan<br>Associate Professor<br>Dept. of Tamil Language<br>Presidency College, Chennai - 5 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus, Tharamani<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 681 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2010 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 11 Point |
| No. of Pages | : | xii + 180 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 85/- (Rupees Eighty five only) |
| Printed by | : | Sri Venkateswara Offset<br>New No. 47, Rajanga Mathya Street<br>Vadapalani, Chennai - 600 026.<br>Phone : 23621409 |
| Subject | : | Tamil Grammar |

முனைவர் கரு.அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை – 113

# அணிந்துரை

வாழ்வை இலகுவாக்க மனிதன் படைத்துக் கொண்ட கருவிகள் பற்பல. அவற்றுள் மொழியும் ஒன்று. ஆயினும் பிற கருவிகள் யாவற்றுள்ளும் தலையாயதும் தனிச் சிறப்புடையதும் மொழியே. மொழி இன்றேல் வேறு எக்கருவியும் தோன்றியிராது. மொழி, மனத்தின் உயிர்; பிறபிற கலைகளுக்கும் கருவிகளுக்கும் தாய். மாந்தரின வாழ்விற்கு இத்துணை இன்றியமையாக் கருவியாய்த் திகழும் மொழி, உலகம் யாண்டும் பரவிக் கிடக்கும் மக்களினக் குழுக்களிடையே பலவாகக் காணக் கிடக்கிறது. அம் மொழிக்கூட்டத்திடையே பன்மீன் நாப்பண் விளங்கு பால்மதி போல் இலங்குவது தமிழ்.வரலாற்றுக்காலந் தொடங்கி இன்றளவும் தன்னேரிலாத் தகைசால் சீர்மை யுடன் திகழும் இத் தமிழ்மொழியின் இலக்கிய இலக்கணப் பரப்பு அளந்திட்டுக் கூற ஒண்ணா விரிவினை உடையது. காலமும் கடும்புனலும் கொண்டது போக எஞ்சியன சிலவே யாயினும், மறைந்து போனவற்றிற்கு மாற்றாகக் காலந்தோறும் தோன்றிய பனுவல்களோ பற்பல. அழகு தமிழில் அமைந்த அந்நூல்களின் பொதிபொருளைப் பழகு தமிழில் விளக்க எழுந்த உரைகளும் மிகப் பல.

ஒல்காப் புகழுடைய தொல்காப்பியத்திற்குப் பின் ஏறத்தாழ பன்னிரண்டு நூற்றாண்டுகள் கழித்துத் தோன்றி இன்றளவும் தனிச் சிறப்புடன் வாழ்வது நன்னூல். பெயருக்கு ஒப்பவே தமிழின் இலக்கணத்தை நலம்படவும் நயம்படவும் இயம்பும் இந்நூலிற்கு உரைவிளக்கம் கண்டோர் பலர். அவ்வுரைகளுள் பல, தம் பெயரை மட்டுமே நிறுத்தி தாம் மாய்ந்தன. வேறுபலவோ, அச்சேறியபோதும் இன்று காணுதற்கும் அரியனவாய் உள்ளன. இவ்வாறு காலச் செலவால் அருகி உள்ள உரைகளை அரிதின் முயன்று திரட்டி இருபத்திரண்டு தொகுதிகளாக உருவாக்கப் பெற்றுள்ள இவ்வுரைவளத்தினை எம் நிறுவனத்தின் வழி வெளியிடுவதில் பெருமிதம் கொள்கிறோம்.

மயிலை நாதர், சங்கர நமச்சிவாயர்,சிவஞான முனிவர், கூழங்கைத் தம்பிரான், விசாகப் பெருமாளையர், ஆ.முத்துத் தம்பிப்பிள்ளை, இராமானுச கவிராயர், கா.கோபாலாசாரியார், தி.கோ.ரங்காசாரியார், ஆறுமுக நாவலர், வ.குமாரசாமிப்புலவர், வை.மு.சடகோபராமானுசாசாரியார், சே.கிருட்டிணமாசாரியார்,

பவானந்தம் பிள்ளை, கொ.இராமலிங்கத் தம்பிரான், கா.நமச்சிவாய முதலியார், மோசகு பொன்னையா ஆகியோரின் உரைகளும், என்றி பவர் செய்த பாயிரப் பகுதிக்கான ஆங்கில மொழிபெயர்ப்பும், இலாசரசு செய்த எழுத்ததிகாரம் மற்றும் சொல்லதிகாரத்திற்கான ஆங்கில மொழிபெயர்ப்பும் இவ்வுரை வளத்தில் திரட்டப் பெற்றுள்ளன. நன்னூலைத் தழுவி இயற்றப் பெற்று ஒரு நூற்றாண்டு காலத்திற்கும் மேல் மீள்பதிப்புக் காணாத திருப்பாற்கடல்நாதன் கவிராயரின் தமிழிலக்கணம், சி.அருணாசலம் பிள்ளையின் TAMIL GRAMMAR, இ.சாமுவேல் பிள்ளையின் தொல்காப்பிய நன்னூல், G.U.போப்பின் காண்டிகையுரை, ஆ.முத்துத் தம்பிப்பிள்ளையின் நன்னூல் இலகுபோதம் ஆகியன இவ்வுரைவளத் திரட்டில் தனித்தனி நூல்களாக வெளியிடப் பெற்றுள்ளன. இவ்வுரைவளம் தமிழன்னைக்கு அணி சேர்க்கும் என்பதில் ஐயமில்லை.

நன்னூல் உரைவளத்தின் பதிப்பாசிரியரான **முனைவர் இரா.கண்ணன்**, சென்னை மாநிலக் கல்லூரித் தமிழ்த் துறையில் இணைப்பேராசிரியராகப் பணியாற்றுகிறார். இவர் அறுபதிற்கும் மேற்பட்ட நூல்களின் ஆசிரியர். இவ் உரைவளத்தின் பதிப்புப் பணியோடு எழுத்துக் கோர்த்தல், மெய்ப்புத் திருத்தல், வடிவமைத்தல் உள்ளிட்ட அனைத்துப் பணிகளையும் தனியொருவராக இருந்து சிறப்புடன் செய்துள்ள இப்பதிப்பாசிரியரை மனதார வாழ்த்துவதுடன் நன்றி நவிலுங் கடப்பாடுமுடையேன்.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் **தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறை அரசுச் செயலாளர் திரு. இரா. சிவக்குமார் இ.ஆ.ப.** அவர்களுக்கு நன்றி.

இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த ஸ்ரீவெங்கடேஸ்வரா ஆப்செட் அச்சகத்தாருக்கு எம் பாராட்டுகள்.

**கரு.அழ. குணசேகரன்**

# முன்னுரை

தமிழிலக்கணம் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி ஆகிய ஐம்பெரும் பிரிவுகளை உடையது என்பர். இது பொது வழக்கே யாயினும் பிற்காலத்தில் பாட்டியல் அனைய புதுப்புது இலக்கணப் பிரிவுகள் தமிழில் தோன்றி நன்கு செழித்து வளர்ந்துள்ளன. அவ்வாறே எழுத்து, சொல் முதலான ஒவ்வொரு பிரிவினிலும் தோன்றிய இலக்கண நூல்களும் பல உள. தொல்காப்பியம், எழுத்து, சொல், பொருள் ஆகிய மூன்று அதிகாரங்களை உடையதாதலான் அது மூன்றிலக்கணம் கூறும் நூல் என்பது போதரும். ஆயினும் பொருளதிகாரத்துள் அமைந்து கிடக்கும் உவமவியலும், செய்யுளியலும் முறையே அணியிலக்கணத்தையும், யாப்பிலக்கணத்தையும் வேண்டுமளவிற்கு விளக்கிக் கூறுதலான், அந்நூல் ஐந்திலக்கண நூலுமாம். தொல்காப்பியத்திற்குப் பின் பல்வேறு இலக்கண நூல்கள் எழுந்தன. பழங்காலத்தில் பெருவழக்காய் வழங்கிய அவ்விலக்கண நூல்கள் இன்று வீழ்ந்து போயின. இன்று வழங்கப் பெறும் இலக்கண நூல்களுள் வீரசோழியம், தொல்காப்பியத்திற்குப் பின் எழுந்த முதல் ஐந்திலக்கண நூலாகும். ஆயினும் அந்நூல் வடமொழி சார்பினைப் பெரும்பான்மை தழுவிச் செல்வதால் அது அவ்வளவாகப் போற்றப்படுவதில்லை. வீரசோழியத்திற்குப் பின் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டளவில் பவணந்தி முனிவரால் நன்னூல் இயற்றப்பட்டது. நன்னூல் ஐந்திலக்கணம் கூறிய நூல் என்றும், இன்று எழுத்து மற்றும் சொல்லிலக்கணம் உரைக்கும் பகுதி மட்டுமே கிடைக்கப் பெறுகிறது என்றும் எஞ்சிய பகுதிகள் காலச் செலவால் அழிந்திருக்கக் கூடும் என்றும் கருதுவாரும் உண்டு. இன்று வழக்கில் உள்ள நன்னூலின் மொத்த நூற்பாத் தொகை நானூற்று அறுபத்திரண்டு. பாயிரம், எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் என மூன்று பகுதிகளாய் அமைந்துள்ள இந்நூலின்கண் பாயிரம் 55 நூற்பாக்களையும், எழுத்ததிகாரம் 202 நூற்பாக்களையும் சொல்லதிகாரம் 205 நூற்பாக்களையும் பெற்றுள்ளன. பாயிரம், பவணந்தியால் இயற்றப்பட்டதன்று என்பர்.

நன்னூலிற்கு இன்றுகாறும் எழுந்துள்ள உரைகள் பல. ஆயினும் மயிலைநாதரின் உரையே முதலில் எழுந்த உரையாகும். மயிலைநாதர் நன்னூல் ஆசிரியர் பவணந்தியின் சமகாலத்தவர். மயிலைநாதரின் உரை நன்னூலிற்கு இன்று வரை எழுந்துள்ள உரைகள் யாவற்றிலும் தலைமை யானது, தனிச் சிறப்புடையது. இவ்வுரைக்குப் பின் பல உரைகள் எழுந்தன. அவற்றுள் சில அச்சேறாமலேயே இறந்தன.வேறுசில அச்சேறிய பின்னும் இன்று அருகியுள்ளன.இவ்வாறு காலச்செலவான் அருகி வரும் உரைகளைக் காத்தற் பொருட்டும், தமிழாய்விற்குத் தக்க கருவி நூலாய் அமையும் திறம் நோக்கியும் இவ்வுரைவளம் உருவாக்கப் பெற்றுள்ளது.இதில் நன்னூலின் சிறந்த உரைகள் அனைத்தும் திரட்டப் பெற்றுள்ளன.

நூற்பா அதன்கீழ் சீர் பிரிக்கப் பெற்ற நிலையில் நூற்பா,ஆங்கில எழுத்துப் பெயர்ப்பு, இலாசரசு செய்த மூல நூலின் ஆங்கில மொழிபெயர்ப்பு, தொல்காப்பியம் முதல் சுவாமிநாதம் வரையிலான இலக்கண நூல்களில் இருந்து தரப்பெற்றுள்ள ஒப்புமைப் பகுதி,நன்னூல் உரைகள் ஆகியன இவ்வுரைவளத்தில் நிரல்படுத்தப்பட்டுள்ளன. மூலநூலின் பாட வேறுபாடும், மயிலைநாதர் உரையின் பாடவேறுபாடும் காட்டப் பெற்றுள்ளன.

நன்னூலிற்கு விருத்த யாப்பில் எழுந்த ஆண்டிப்புலவர் உரை அழிந்து போனது. அச்சேறிய உரைகளுள் பல இன்று அருகி பெயரளவில் மட்டுமே அறியப் பெறுபவையாக உள்ளன. அச்சேறிய அரிய உரைகளையேனும் காக்கும் வகையில் இவ்வுரைவளம் இருபத்திரண்டு தொகுதிகளாக வெளியிடப் பெறுகின்றது. தமிழ் உலகம் ஏற்றுப் போற்றும் என நம்புகிறேன்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர், பேராசிரியர் முனைவர் ***கரு.அழ.குணசேகரன்*** அவர்களும், துணை இயக்குநர் **திரு.க.ந.வீரபாகு சுப்பிரமணியன்** அவர்களும் நன்னூல் உரைவள நூல்கள் அனைத்தையும் விரைந்து வெளிக் கொணர்ந்தனர். அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

இவ்வுரைவளத் திரட்டுப் பணியின்போது பல்லாற்றான் உதவிய சென்னை இராணிமேரி கல்லூரிப் பேராசிரியை **முனைவர் ந.கலைவாணி** அவர்களுக்கும், உற்றுழி உதவிய அனைவர்க்கும் உளமார்ந்த நன்றியினை உரித்தாக்கிக் கொள்வதோடு, தோன்றாத் துணையாய் இருந்து எம்மை இயக்கி வரும் தில்லைக் கூத்தனின் பொன்னார் திருவடிகளைப் போற்றிப் பணிந்து அமைகிறேன்.

10.11.2010 **இரா.கண்ணன்.**
சென்னை–55

# சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| அவி | – | அவிநயம் |
| இ-ள் | – | இதன் பொருள் |
| இல, விள | – | இலக்கண விளக்கம் |
| உ-ம் | – | உதாரணம் |
| உணர்-ற்று | – | உணர்த்துதல் நுதலிற்று |
| எ-டு | – | எடுத்துக்காட்டு |
| எ-று | – | என்றவாறு |
| எ-னின் | – | என் நுதலிற்றோ எனின் |
| சுவாமி | – | சுவாமிநாதம் |
| சூ-ம் | – | சூத்திரம் |
| தொல், எழு | – | தொல்காப்பியம் எழுத்ததிகாரம் |
| தொல், சொல் | – | தொல்காப்பியம் சொல்லதிகாரம் |
| தொல், பொருள் | – | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| தொன் | – | தொன்னூல் விளக்கம் |
| நச் | – | நச்சினார்க்கினியர் |
| ந.பா | – | நவநீதப் பாட்டியல் |
| நேமி | – | நேமிநாதம் |
| பா-டு | – | பாட வேறுபாடு |
| பொ-ரை | – | பொழிப்புரை |
| மா.அலங் | – | மாறனலங்காரம் |
| மு.வீ | – | முத்துவீரியம் |
| வீர | – | வீரசோழியம் |
| வெண், பாட் | – | வெண்பாப் பாட்டியல் |

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ ,ஒ, ஓ, ஔ,
ஃ - இவ்வெழுத்துக்கள் முறையே

a , ā , i , ī ,u ,ū ,e, ē ,ai ,o, ō, au, kh

எனவும்,

க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல்,
வ், ழ், ள், ற், ன் - இவ்வெழுத்துக்கள் முறையே

k, ṅ, s, ñ, t, ṇ, ṭ, n, p,
m, y, r, l, v, ḷ ,l̲, ṛ, n̲, kh

எனவும் ஆங்கில எழுத்துப்பெயர்ப்பில் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

# பொருளடக்கம்

# சிறப்புப்பாயிரம்

மலர்தலை யுலகின் மல்கிரு ளகல
இலகொளி பரப்பி யாவையும் விளக்கும்
[1]பருதியி னொருதா னாகி முதலீறு
ஒப்பள வாசை முனிவிகந் துயர்ந்த
அற்புத மூர்த்திதன் னலர்தரு தன்மையின்
மனவிரு ளிரிய மாண்பொருண் முழுவதும்
முனிவற வருளிய மூவறு மொழியுளும்
குணகடல் குமரி குடகம் வேங்கடம்
எனுநான் கெல்லையி னிருந்தமிழ்க் கடலுள்
அரும்பொரு ளைந்தையும் யாவரு முணரத்
தொகைவகை விரியிற் றருகெனத் துன்னார்
இகலற நூறி யிருநில [2]முழுவதும்
தனதெனக் கோலித் தன்மத வாரணம்
திசைதொறு நிறுவிய திறலுறு தொல்சீர்க்
கருங்கழல் வெண்குடைக் கார்நிகர் வண்கைத்
திருந்திய செங்கோற் சீய கங்கன்
அருங்கலை வினோத னமரா பரணன்
மொழிந்தன னாக முன்னோர் நூலின்
வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்
பொன்மதிற் சனகைச் சன்மதி முனியருள்
பன்னருஞ் சிறப்பிற் பவணந்தி
என்னு நாமத் திருந்தவத் தோனே.

மலர் தலை உலகின் மல்கு இருள் அகல
இலகு ஒளி பரப்பி யாவையும் விளக்கும்
பருதியின் ஒரு தான் ஆகி முதல் ஈறு
ஒப்பு அளவு ஆசை முனிவு இகந்து உயர்ந்த
அற்புத மூர்த்தி தன் அலர் தரு தன்மையின்
மன இருள் இரிய மாண் பொருள் முழுவதும்
முனிவு அற அருளிய மூ அறு மொழியுளும்

---

பாட வேறுபாடு -

1.பரிதி 2.முழுதும்

குண கடல் குமரி குடகம் வேங்கடம்
எனும் நான்கு எல்லையின் இரும் தமிழ்க் கடலுள்
அரும் பொருள் ஐந்தையும் யாவரும் உணரத்
தொகை வகை விரியின் தருக என துன்னார்
இகல் அற நூறி இரு நிலம் முழுவதும்
தனது எனக் கோலித் தன் மத வாரணம்
திசை தொறு நிறுவிய திறல் உறு தொல் சீர்க்
கரும் கழல் வெண்குடைக் கார் நிகர் வண் கைத்
திருந்திய செங்கோல் சீய கங்கன்
அருங் கலை விநோதன் அமர் ஆபரணன்
மொழிந்தனன் ஆக முன்னோர் நூலின்
வழியே நன்னூல் பெயரின் வகுத்தனன்
பொன் மதில் சனகைச் சன்மதி முனி அருள்
பன் அரும் சிறப்பின் பவணந்தி
என்னும் நாமத்து இரும் தவத்தோன் ஏ.

malar ṭalai ulakiṉ malku iruḷ akala
ilaku oḷi parappi yāvaiyum viḷakkum
paruṭiyiṉ oru ṭāṉ āki muṭal īṛu
oppu aḷavu āsai muṉivu ikanṭu uyarnṭa
aṛpuṭa mūrṭṭi ṭaṉ alar ṭaru ṭaṉmaiyiṉ
maṉa iruḷ iriya māṇ poruḷ muḷuvaṭum
muṉivu aṛa aruḷiya mū aṛu moḷiyuḷum
kuṇa katal kumari kutakam vēṅkatam
eṉum nāṉku ellaiyiṉ irum ṭamiḷk kataluḷ
arum poruḷ ainṭaiyum yāvarum uṇarat
ṭokai vakai viriyiṉ ṭaruka eṉa ṭuṉṉār
ikal aṛa nūṛi iru nilam muḷuvaṭum
ṭaṉaṭu eṉak kōliṭ ṭaṉ maṭa vāraṇam
ṭisai ṭoṛu niṛuviya ṭiṛal uṛu ṭol sīrk
karum kaḷal veṇkutaik kār nikar vaṇ kaiṭ
ṭirunṭiya seṅkōl sīya kaṅkaṉ
aruṅ kalai vinōṭaṉ amar āparaṇaṉ
moḷinṭaṉaṉ āka muṉṉōr nūliṉ
vaḷiyē naṉṉūl peyariṉ vakuṭṭaṉaṉ
poṉ maṭil saṉakais saṉmaṭi muṉi aruḷ
paṉ arum siṛappiṉ pavaṇanṭi
eṉṉum nāmaṭṭu irum ṭavaṭṭōṉ ē.

## என்றி பவர் -ஆங்கில மொழிபெயர்ப்பு

## SPECIAL PREFACE

At the request of the lion-like Gangan who by destroying his foes annihilates their hatred ; who monopolizes the whose earth; whole elephants stand as props on the eight points. Of it; who is the illustratious conqueror both in himself and in his ancestors; whose legs are encircled with the insignia of Victory who is privileged to use the white umbrella (the sign of sovereignty); who, like the dark clouds, which seek no return for their munificence, has hands which diffuse gifts; who sways the sceptre of righteousness; who delights in the arts and sciences; who is clothed with victorious wounds as armour; -(at the request of such a Patron,) that a work should be produced in Tamil, one of the eighteen languages current in India, the geographical boundaries of which are the sea to the east; Cape Comorin to the south, Koorg to the west and Vengadam (Tirupati) to the north; - a language which is an ocean in itself, and is divided into prose, poetic and dramatic Tamil; with the understanding that the work should be executed on a plan that may be appreciated by, and be of advantage to all (both learned and unlearned); and also with the understanding that the whole work should be constructed on the plan of ancient writers, embracing the five grand subjects, Viz. letters words, subject-matter, poetry and rhetoric considering each subject in reference to genus, species and individual kind; and moreover with the understanding that the work should have reference to the four grand objects of human existence, viz. the attainment of virtue, wealth, pleasure and heaven, which the Divine Self-existing. Being has been pleased to confer upon man, that being who is incarnation of wisdom, who is without beginning, end, comparison, form, desire or aversion; and who from the graciousness of his benignant disposition, is willing to dispel the darkness of the human mind, even as the sun which diffussing light[1] dispels the darkness of the wide world around; - (with these objects in view) an individual named Pavananti, of profound learning and indescribable excellence and devotion, the son of Sanmadamuni, an inhabitant of the golden walled-city Sanagapuram, wrote the work named Nannul.

## மயிலை நாதர்

என்பது சிறப்புப்பாயிரம். இதற்குப் பொருள் மேலே சொல்லுதும்.

இனித் 'தமிழினது தன்மையும் இந்நூற்குச் சிறப்புப்பாயிரமும் சொல்லுதும்.

'மலர்தலை யுலகின் இருந்தவத் தோனே.' என்பது, தமிழினது தன்மையும் இந்நூற்குச் சிறப்புப்பாயிரமும் உணர்த்துத லுதலிற்று.

**இ–ள்.: மலர் தலை உலகின்** – பரந்த இடத்தையுடைய பூமியின்கண், **மல்கு இருள் அகல** – செறிந்த இருள் நீங்க, **இலகு ஒளி பரப்பி** – விளங்காநின்ற கதிரை விரித்து, **யாவையும் விளக்கும்** – நிலம் நீர் [2]முதலாகிய எல்லாப் பொருள்களையும் விளங்கக் காட்டும், **பருதியின்** – ஆதித்தனைப் போல, **ஒருதானாகி** – [3]உலகிற்கெல்லாம் தான் ஒருவனேயாகி, **முதல் ஈறு ஒப்பு அளவு ஆசை முனிவு இகந்து உயர்ந்த** – பிறப்பும் இறப்பும் உவமையும் அளவும் [4]ஆர்வமும் செற்றமு மின்றி ஞானகுணங்களான் மிக்க, **அற்புதமூர்த்தி** – ஆச்சரியத்தை யுடைய இறைவனானவன், **தன் அலர்தரு தன்மையின்** – தன்னுடைய பரவாநின்ற ஆற்றலானே (தன்னுடைய விரிந்த தன்மையாகிய கருணை யெனினு மமையும்), **மன இருள் இரிய** – உலகத்துள்ள உயிர்களினுடைய மனங்களிலுண்டான அறியாமையாகிய இருள் நீங்க, **மாண் பொருள் முழுவதும்**–மாட்சிமைப்பட்ட [5]அற முதற் பொருள் அனைத்தினையும், **முனிவு அற அருளிய** – ([6]பதினெண் ணிலத்திலுள்ளார் எல்லாரும்) விரும்ப அருளிச் செய்த, **மூவறு மொழியுளும்** – பதினெட்டு மொழிகளுள்ளும், **குணகடல் குமரி குடகம் வேங்கடம் எனும் நான்கு எல்லையின் இரு தமிழ் கடலுள்** – இச் சொன்ன நான்கு [7]கரைக்கும் உட்பட்டு வழங்காநின்ற பெரிய [8]தமிழாகிய கடலிலுள்ள, **அரு பொருள் ஐந்தையும்** – எழுத்துச் சொற் பொருள் யாப்பு அணியென்னும் [9]அரிய பொருளைந்தையும், **யாவரும் உணர** – எல்லாரும் உணரும்படி, **தொகை வகை விரியின் தருக என** – இம் மும்மையானும் விளங்கச் சொல்லுக என, **துன்னார் இகல் அற நூறி** – பொருந்தாதாருடைய மாறுபாடெல்லாம் மாயும்படி கெடுத்து, **இரு நிலம் முழுவதும்** – பெரிதாகிய பூமி அனைத்தினையும், **தனதென கோலி** – தன தென்றே பற்றிக் கொண்டு, **தன் மத வாரணம்** – தனக்கே யுரிய மத யானையை, **திசைதொறும் நிறுவிய** – எட்டுத் திக்கிலும் எல்லைக்குறியாக நிறுத்திய, **திறல் உறு தொல் சீர்** – வலியோடு

---

**பாட வேறுபாடு:–**

**1. தமிழது**
**2. முதலிய**
**3. உலகெல்லாம்தான் ஒருவனுமேயாகி,**
**4. ஆர்வும், ஆசையும்.**
**5. அறம்பொருளின்ப மனைத்தையும்,**
**6. பதினெண்ணிலத் துள்ளாரும்.**
**7. எல்லைக்கும். 8. தமிழென்னும். 9. பெரிய.**

பொருந்திய உலகுள்ளதான அன்று [1]தொடங்கி இடையறாது வாராநின்ற புகழினையும், **கரு கழல்** – கூடாதாரைக் கொன்று கட்டின குரைகழலினையும், **வெண்குடை** – பற்றலர் பகரும் பழிமாசறுத்து [2]மற்றுலகளிக்கும் மணிமுத்தக் குடையினையும், **கார்நிகர் வண்கை** – [3]விழைபயன் கருதாது மேதினியவர்க்கு மழைபோலுதவும் மாமலர்க்கையினையும், **திருந்திய செங்கோல்** – குற்றமற்றுலகிற் கொடுங்கலிதுரந்து செப்பம் வளர்க்கும் செய்ய கோலினை யுமுடையவனான, **சீய கங்கன்** – தங்கலர்குலமாம் [4]வெங்கயமனுங்கும் சிங்கமாகிய கங்கனென்பான், **அரு கலை விநோதன்** – அரியநூல்களை ஆராய்தலே தனக்கு இன்பமாகவுடையான், **அமராபரணன்** – பொரும் போரினையே புனைகலனாக வுடையானென்னும் அழகமை பெயரினை யுடையான், **மொழிந்தனனாக** –[5]ஏவ, **முன்னோர் நூலின் வழியே** – பழையோர்சொன்ன நூல்களின் படியே, **நன்னூற்பெயரின்** – நன்னூலென்னும் [6]பெயரினானே, **வகுத்தனன்** – செய்தனன்; அவன் யாவனெனின், **பொன் மதில் சனகை** –பொன்மதில் புடைசூழ்ந்த [7]சனநாதபுரத்து, **சன்மதி முனியருள்** – சன்மதியென்னும் நன்முனியளித்த, **பன் அரு சிறப்பின்** – சொல்லுதற்கரிய [8]பெருந்தன்மையையும், **பவணந்தி என்னும் நாமத்து** – பவணந்தியென்னும் பெரிய பெயரினையும், **இருதவத்தோன்** – பெரிய தவத்தினையுமுடையோன், எ – று.

**'மலர்தலை.... மொழியுளும்'** எனவே இயம்பலுறும் தமிழ் தான், இடையே சிலரான் இயற்றப்பட்டதன்றி வரம்பிலறிவனால் ஏனைப் பதினேழு நிலத்து மொழிகளோடு ஒருங்கு விளங்கச் செய்யப்பட்டதென்று இதன் உண்மைச்சிறப்பு உரைக்கப்பட்டது.

**'குணகடல்.... எல்லையின்:'** இஃது இவ்வெல்லையுள் நடக்குமென எல்லை போந்தது. **'இருந்தமிழ்.... ஐந்தையும்'** என [9]நுதலிய பொருள் போந்தது.

---

**பாட வேறுபாடு:–**

1. துடங்கி,
2. முற்றுலகு,
3. விளைபயன், வினைப்பயன்,
4. வெங்கய நுங்குஞ்,
5. அவனேவ,
6. பெரிய பெயரினானே,
7. சனநாகபுரத்து,சனகாபுரத்து,
8. பெருந்தன்மையையுடைய,
9. தமிழுப்பொருள் நுதலிற்றென்பது.

**'யாவரு முணர:'** எல்லாருமுணர்தல் பயனாகவெனப் பயன் போந்தது.

**'தொகைவகை விரி'** என யாப்புப் போந்தது.

**'தருகென.... மொழிந்தனனாக:'** அருங்கலை விநோதனாகையாலே தமிழின் அருமைபெருமைகளை யறிந்து எல்லாரும் இனிதறிய விளங்கச் செய்கவென்று இவன் ஏவுதலாலே யெனக் காரணம் போந்தது.

**'முன்னோர் நூலின் வழியே'** என வழி போந்தது.

**'நன்னூற் பெயரின் வகுத்தனன்'** என நூற்பெயர் போந்தது.

**'பொன்மதில்.... தவத்தோனே'** என ஆக்கியோன் பெயர் போந்தது.

**'துன்னாரிகலறநூறி.... மொழிந்தனனாக'** எனவே இவன் காலத்தெனவும் இவன் அவைக்களத்தெனவும் இவன் அவையிலுள்ளார் கேட்டாரெனவும் காலமும் களனும் கேட்டாரொடும் போந்தன.

இவ்வாற்றான் இதற்குப் பதினொரு பாயிரமும் போந்தவாறு இதனகத்தே கண்டுகொள்க.

## *சங்கர நமச்சிவாயர் – சிவஞான முனிவர்*

என்பது பாயிரம்.

இப்பாயிரம் என்னுதலிற்றோவெனின்:

**"வலம்புரி முத்தின் குலம்புரி பிறப்பும்
வான்யா றன்ன தூய்மையும் வான்யாறு
நிலம்படர்ந் தன்ன நலம்படர் ஒழுக்கமும்
திங்க ளன்ன கல்வியும் திங்களொடு
ஞாயி றன்ன வாய்மையும் யாவதும்
அஃகா வன்பும் வெஃகா உள்ளமும்
துலைநா அன்ன சமநிலை யுளப்பட
எண்வகை உறுப்பின ராகித் திண்ணிதின்
வேளாண் வாழ்க்கையும் தாஅ ளாண்மையும்
உலகியல் அறிதலும் நிலைஇய தோற்றமும்
பொறையும் நிறையும் பொச்சாப் பின்மையும்
அறிவும் உருவும் ஆற்றலும் புகழும்**

சொற்பொருள் உணர்த்துஞ் சொல்வன் மையும்
கற்போர் நெஞ்சம் காமுறப் படுதலும்
இன்னோ ரன்ன தொன்னெறி மரபினர்
பன்னருஞ் சிறப்பின் நல்லா சிரியர்
அறனே பொருட்பயன் இன்பெனும் மூன்றின்
திறனறி பனுவல் செப்புங் காலை
முன்னர்க் கூறிய எண்வகை யுறுப்பினுள்
ஏற்பன வுடைய ராகிப் பாற்படச்
சொல்லிய பொருண்மை சொல்லியாங் குணர்தலும்
சொல்லிய பொருளொடு சூழ்ந்துநன் குணர்தலும்
தன்னோ ரன்னோர்க்குத் தான்பயப் படுதலும்
செய்ந்நன்றி யறிதலும் தீச்சார் பின்மையும்
மடிதடு மாற்றம் மானம்பொச் சாப்புக்
கடுநோய் சீற்றம் களவே காமம்
என்றிவை இன்மையும் சென்றுவழி படுதலும்
அறத்துறை வழாமையும் குறிப்பறிந் தொழுகலும்
கேட்டவை நினைத்தலும் பாடம் போற்றலும்
மீட்டவை வினவலும் விடுத்தலும் உரைத்தலும்
உடைய ராகி நடையறிந் தியலுநர்
நன்மா ணாக்கர் என்ப மண்மிசைத்
தொன்னூற் புலமைத் துணிபுணர் வோரே."

என *ஆத்திரையன்* பேராசிரியன் கூறிய பொதுப்பாயிரத் தானே பன்னருஞ் சிறப்பின் நல்லாசிரியனை யுணர்ந்து வழிபட்டு ஒருநூல் கேட்பான் புகுந்த நன்மாணாக்கர்க்கு, அந்நூலான் நுவலப்படும் பொருளும், அந்நூல் கேட்டலாற் பெறப்படும் பயனும், கேட்டற்குரிய அதிகாரிகளாவார் இவரென்பதூஉம், இன்னது முற்றியபின்னர் இந்நூல் கேட்கற்பாற்று என்னும் இயைபும் உணர்ந்தன்றி, நூல் கேட்டற்கண் மனவூக்கஞ் செல்லாமையின், இன்றியமையாச் சிறப்பினவாய இந்நான்கும் ஒருதலையாக முன்னர் உணர்த்தல் வேண்டும்; இந்நான்கும் உணர்ந்தவழியும் கற்றுவல்ல சான்றோரல்லாராற் செய்யப்பட்ட நூலாயின் கூறியதுகூறல் முதலிய குற்றமுடைத்தாமன்றே யெனவும், கற்றுவல்ல சான்றோரும் மற்றோர் கோட்பாடு பற்றிச் செய்யின் முனைவனூலொடு முரணுமன்றே யெனவும் ஐயுற்று ஊக்கஞ் செல்லாமையின், அவ் ஐயம் நீக்குதற் பொருட்டு ஆக்கி யோன் பெருமையும், நூற்பெருமையும், அந்நூல் வழங்கும் நிலமும், அதன் முதனூலும் இவையென்பது தோன்ற ஆக்கியோன் பெயரும் வழியும் எல்லையும் நூற்பெயரும் உணர்த்தல் வேண்டும். ஆகலின், இவ்வெட்டும், இவ் வெட்டுடனே காலம் களன் காரணமென்னும் மூன்றும் கூட்டிப் பதினொன்றும் தெரிப்பதே சிறப்புப்பாயிரத்தின் இலக்கணமென மேல் வகுக்கப்படும் ஆக்கியோன்பெயர் முதலியன உணர்த்துதல் நுதலிற்று.

**இ–ள்: மலர் தலை உலகின்** – பரந்த இடத்தையுடைய உலகத்தின்கண்ணே, **மல்கு இருள் அகல** – நிறைந்த கண்ணிருள் கெட, **இலகு ஒளி பரப்பி** – விளங்கும் கதிரை விரித்து, **யாவையும் விளக்கும்** – கட்பொறிக்கு விடயமாகிய உருவம் அனைத்தினையும் காட்டும், **பரிதியின்** – சூரியனைப்போல, **ஒரு தான் ஆகி** – உலகுக்கெல்லாம் தான் ஒருமுதலேயாகி, **முதல் ஈறு ஒப்பு அளவு ஆசை முனிவு இகந்து உயர்ந்த** – தோற்றமும் ஒடுக்கமும் உவமையும் அளவும் விருப்பும் வெறுப்பு மாகியவற்றை இயல்பாகவே நீங்கி நிற்றலால் தலைவனாகிய, **அற்புத மூர்த்தி** – ஞானமே திருமேனியாகவுடையான், **தன் அலர் தரு தன்மையின்** – தனது விரிந்த தன்மையாகிய கருணையினாலே, **மன இருள் இரிய** – உயிர்களின் மனத்திருளாகிய அவித்தை கெட, **மாண் பொருள் முழுவதும்** – மாட்சிமைப்பட்ட அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்குபொருளையும், **முனிவு அற அருளிய** – விருப்புடன் அருளிச்செய்த, **மூவறு மொழியுளும்** – பதினெண்ணிலத்து மொழிகளுள்ளும், **குணகடல் குமரி குடகம் வேங்கடம் எனும் நான்கு எல்லையின் இருந்தமிழ்க் கடலுள்** – இந்நான்கு எல்லையினை யுடைய நிலத்து மொழியாகி இயல் இசை நாடகம் என்று பெயர்பெற்ற பெரிய தமிழென்னுங் கடலுள், **அரும் பொருள் ஐந்தையும்** – அவ்வறமுதற் பொருள் நான்கையும் உணர்தற்குக் கருவியாய் அருமையவாகிய இயற்றமிழின் பாகுபாடான எழுத்துச் சொற் பொருள் யாப்பு அணி யென்னும் ஐந்து பொருளையும், **யாவரும் உணர** – அவ்வியற் றமிழுணர்தற்கு முன்னரே உயர்ந்தோர் செய்யுளிடத் தாராய்ச்சி யுடையராய் அவ் வாராய்ச்சியான் வலியோரேயன்றி எளியோரு முணர, **தொகை வகை விரியின் தருக என** – வழியின் நெறியாகிய நால்வகையுள் தொகுத்தும் வகுத்தும் விரித்துமாக்கப்படும் யாப்பினால் பாடித் தருக என, **துன்னார் இகல் அற நூறி** – பகைவரது பகைமை கெட அவரைத் துணித்து, **இருநிலம் முழுவதும் தனது எனக் கோலி** – பெரிய பூமி யனைத்தினையும் தன்னுடையதாகப் பற்றிக்கொண்டு, **தன் மத வாரணம் திசைதொறும் நிறுவிய திறல் உறு தொல் சீர்** – தன் மத யானைகளை எட்டுத் திக்கினும் திசைக்களிறுகள்போல நிறுத்திய வெற்றி மிகுந்து தன்னளவேயன்றித் தன்தாதை மூதாதை முதலியோரைத் தொட்டுவரும் கீர்த்தியினையும், **கருங்கழல்** – பெருமை பொருந்திய வீரக்கழலினையும், **வெண் குடை** – வெண்கொற்றக் குடையினையும், **கார் நிகர் வண்கை** – மேகம்போலக் கைம்மாறு கருதாது கொடுக்கும் கையினையும், **திருந்திய செங்கோல்** – கெடாத செங்கோலினையு முடைய, **சீயகங்கன்** – சிங்கம் போன்ற கங்கன், **அருங்கலை வினோதன்** – அரிய நூல்களை ஆராய்தலே பொழுது போக்கும் விளையாட்டாக வுடையான், **அமர் ஆபரணன்** – தன் னகத்து விழுப்புண்பட அமர் செய்தலையே ஆபரணமாகவுடையான், **மொழிந்தனன் ஆக** – சொன்னானாக, **முன்னோர் நூலின் வழியே** – தொல்லாசிரியர் நூலின்வழியே, **நன்னூற் பெயரின் வகுத்தனன்** – நன்னூலென்னும் பெயரினாற் செய்தனன், **பொன் மதில் சனகை**

– பொன்மதில் சூழ்ந்த சனகாபுரத்துள் இருக்கும், **சன்மதிமுனி அருள்** – சன்மதிமுனிவன் பெற்ற, **பன்னருஞ் சிறப்பின் பவணந்தி என்னும் நாமத்து** – சொல்லுதற்கு அரிய ஞானவொழுக்கச் சிறப்பினையும் பவணந்தி என்னும் பெயரினையும் உடைய, **இருந்தவத்தோன்** – பெரிய தவத்தினையுடையோன், எ–று.

இதனுள், '**பவணந்தி**'யெனவே **ஆக்கியோன் பெயரும்**, 'முன்னோர் நூலின்வழி' யெனவே **வழியும்**, 'நான்கு எல்லை' யெனவே எல்லையும், 'நன்னூலெ'னவே **நூற்பெயரும்**, 'அரும்பொருள் ஐந்து' எனவே **நுதலிய பொருளும்**, அவற்றை 'யாவரும் உணர' எனவே முன்னர் நிகண்டு கற்றுச் செய்யுள் ஆராய்ச்சி உடையார்க்கே அவற்றை யாராய்வுழி அவற்றின்கண் உளவாகிய செய்கை வேறுபாடுகளுஞ் சொல்முடிவு பொருள்முடிவு வேறுபாடுகளும் இன்னவென்று துணியப்படாமையின், அவற்றைத் துணிந்து அறியவேண்டி இவ்வியற்றமிழ்நூல் கேட்டறிதலின்கண்ணே ஊக்கஞ் செல்லுமாகலின் அவை ஆராய்ந்த பின்னர் 'இது கேட்கற்பாற்றென்னும் '**யாப்பும்**', அவை ஆராய்ந்தோர்

> இனி, இவற்றுள் காலம் முதலிய மூன்றும் நூல் செய்தார் காலத்து நிகழ்ந்தன; ஆக்கியோன் பெயர் முதலிய எட்டும் நூல்செய்தார் காலத்தும் நூல் வழங்குங் காலத்தும் ஒப்ப நிகழ்வன; இவை தம்முள் வேற்றுமை. கழிந்தவற்றை உணர்தலால் பெரும் பயனின்மையின் அவை ஒரு சாராராற் கொள்ளப் பட்டன; ஆக்கியோன் பெயர் முதலியன ஒருதலை யான் உணர வேண்டுதலின் அவை எல்லா ஆசிரிய ரானும் கொள்ளப்பட்டன.
>
> வடநூலார், யாப்பை ஆனந்தரியம் என்றும், நுதலிய பொருளை விடயம் என்றும், கேட்போரை அதிகாரிகள் என்றும், பயனைப் பிரயோசனம் என்றும் கூறுப. அவருள் ஒருசாரார், ஆனந்தரியப்பொருள் நூலைப் பயப்பித்தற்குக் காரணமாய்க் கேட்போரை விசேடித்து நிற்றலின் வேறு கூறவேண்டா என்னும் கருத்தால் ஆனந்தரியம் நீக்கிச் சம்பந்த மொன்றும் கூட்டி நான்கென்பாராயினர்.
>
> சம்பந்தம் என்பதூஉம் யாப்பு என்னும் பொதுச்சொல்லால் கொள்ளப்படும். அது, நன்னூற் பெயரின் வகுத்தனன் எனவே நூற்கும் நூல் நுதலிய பொருட்கும் வகுப்பதூஉம் வகுக்கப்படுவதூஉ மாகிய சம்பந்தம் என்பது பெறப்பட்டது. யாப்பு, இயைபு, தொடர்ச்சி என்பன ஒருபொருட்கிளவி.
>
> ஈண்டுக் கேட்டல் பாடங்கேட்டல்; அது "கேள்வி விமரிசம் பாவனை" என்பதனானும், 'கேட்டவை நினைத்தலும்

பாடம் போற்றலும்' என்பதனானும், 'ஒருகுறி கேட்போன் இருகால் கேட்பின்' என்பதனா னும் உணர்க.

இவ்வெட்டும் உணர்ந்தற்குப் பயன் நூல் பயிலுதற் கண் ஊக்கம் உண்டாதல். ஊக்கம் – உள்ளக் கிளர்ச்சி.

இனி வாய்ப்பக்காட்டல் என்பதனானே இத்துணைச் சிறப்பிலவாய், அவ்வவற்றிற்கு இனமாய்க் காட்டப் படுவனவுமுள என்பது பெற்றாம். அவை ஆக்கியோன் பெயரே யன்றி ஆக்குவித்தோன் பெயர் கூறுதலும், வழியே யன்றி அதன்வகையாகிய தொகுத்தல் முதலிய நான்கினுள் ஒன்றாமாறு கூறுதலும், தன் முதனூலுக்கு வழிகூறுதலும், அதுவந்த மரபுவழி கூறுதலும், பொதுவெல்லை கூறுதலே யன்றிச் செந்தமிழ் முதலியவற்றின் சிறப்பெல்லை கூறுதலும், நூற்பெயரே யன்றிப் படலப்பெயர் ஒத்தின்பெயர் கூறுதலும், நூற்கு இயைபு கூறுதலே யன்றி நூலினுள் படலம் முதலிய வற்றிற்கு இயைபு கூறுதலும், சம்பந்தங் காட்டுவார் மதத்தின் நூற்கும் நூனுதலிய பொருட்கும் கிழமை கூறுதலேயன்றி நூல்நுதலிய பொருட்கும் பயனுக்கும் கிழமை கூறுதலும், நூற்கும் நூல் செய்தோனுக்கும் கிழமை கூறுதலும், நூனுதலிய பொருளே யன்றிப் படலம் நுதலியதூஉம் ஒத்து நுதலியதூஉம் சூத்திரம் நுதலியதூஉம் கூறுதலும், கேட்போரே யன்றிக் கேட்பிப்போரைக் கூறுதலும், பயனே யன்றிப் பயனுக்குப் பயன் கூறுதலுமாம்.

இவ்வெட்டனுள் 'சீயகங்கன்' எனவே ஆக்குவித் தோன் பெயரும், 'தொகை வகை விரி' எனவே வழியின் வகையும், 'மாண் பொருள் முழுவதும்' எனவே பயனுக்குப் பயனும் பெறப்பட்டன. ஏனைய இந்நூலுள் வந்துழி வந்துழிக் காண்க.

பயனுக்குப் பயனாவது, வெண்பா:

"எழுத்தறியத் தீரும் இழிதகைமை தீர்ந்தான் மொழித்
திறத்தின் முட்டறுப்பா னாகும்– மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்."

என்பதனால் காண்க. எனவே முதல்நூற்பொருள் உணர்தற்கு முறையானே இது கருவி நூல் என்பது

பெறப்பட்டது. முதல் நூல் என்றது அறம் முதலிய நான்கினையும் உணர்த்தும் நூலையென அறிக. எழுத்து என்றது இயற்றமிழை. அது, "எண்ணென்ப ஏனை எழுத்தென்ப" என்பதனானும் உணர்க. இசைத்தமிழும் நாடகத்தமிழும் இவ்வியற்றமிழ் போல முதல்நூற் பொருளுணர்தற்குக் கருவியன் மையின், இயற் றமிழொன்றுமே கூறினார்; ஆயின் இயற்றமிழை அரும் பொருளைந்து எனக் கூறினமையின், இந்நூலுட் கூறிய, பொருள் யாப்பு அணிகள் என்னும் மூன்று அதிகாரங்களும் அக்காலத்துள்ளன போலும்.

ஈண்டுக் கே ட்பிப்போர் இயற்றமிழ்வல்ல ஆசிரியர். படலம் நுதலியது இவ்வதிகாரம் என்னுதலிற்றோ வெனின் என்பது. ஒத்து நுதலியது இவ்வோத்து என்னுதலிற்றோ வெனின் என்பது. சூத்திரம் நுதலியது இச்சூத்திரம் என்னுத லிற்றே வெனின் என்பது. படலத்திற்கு இயைபு மேலை யதிகாரத்தோடு இயைபுடைத் தாயிற்று என்பது. ஒத்திற்கு இயைபு மேலை யோத்தினோடு இயைபுடைத்தாயிற்று என்பது. சூத்திரத்திற்கு இயைபு மேலைச் சூத்திரத்தோடு இயை புடைத்தாயிற்றென்பது. இவை, நூன்முகத்துக் காட்டப்படுதலே யன்றிப் படலமுகத்தும், ஒத்து முகத்தும், சூத்திர முகத்தும் காட்டப்படும். இவை யெல்லாம் பாயிரமேயாம். பிறவும் இவ்வாறே கண்டு கொள்க.

அற்றேல், கேட்போர் மாணாக்கரும் கேட்பிப்போர் ஆசிரியரு மாகலான், இவ்விரண்டும் பொதுப் பாயிரத்தால் பெறப்படுமாலோ வெனின்; அற்றன்று: பொதுவகையான் ஆசிரியர்க்கும் மாணாக்கர்க்கும் இலக்கணம் பெறப்பட்டன அல்லது, இந்நூற்கு இன்னாரென்னும் சிறப்புவகை ஆண்டுப் பெறப்படா மையின், இஃது ஈண்டுக் காட்டப்படும். இது காட்டாக்கால், சிற்றறிவோர் பெருநூலும், பேரறிவோர் சிறுநூலும், முத்தமிழுள் ஒருநூற் குரியார் ஏனை இரண்டு நூலும், அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கனுள் ஒன்றற்கு உரியார் ஏனை மூன்று நூலும் கேட்பான் புக்கு இடர்ப்பட்டு மயங்குப ஆகலின், இஃது ஒருதலையாற் காட்டல் வேண்டும் என்பது. இதுபற்றியன்றே, பொது எனவும் சிறப்பு எனவும் பாயிரம் இருபகுதிப்பட்டதூஉம் என்க.

**இக் கருத்தறியாத உரையாசிரியரை உள்ளிட்டோ ரெல்லாரும், நூலரங்கேறும் அவைக்களத்துக் கேட்டாரைக் கேட்போர் என்றும், தொகுத்தல் முதலிய வழியின் வகையினை யாப்பு என்றும் கூறினார். ஆக்கியோன் பெயர் நுதலியபொருள் என்பன போல இறந்தகாலத்தால் கூறாது கேட்போர் என எதிர்காலத்தால் கூறியதே அஃது உரையன்மைக்குச் சான்றாம் ஆகலானும், காலம் களத்துள் அடங்குதலின் வேறு கூறவேண்டாமையானும், ஆக்கியோன் பெயர் முதலியனபோல நூல் வழங்குங் காலத்து நிகழ்வதன் றாகலின் அவற்றோடு ஒருங்கு வைத்து எண்ணல் பொருந்தாமையானும், கேட்டதற்கு உரிய அதிகாரிகளாவாரை ஒருதலையாக உணர்த்தல் வேண்டும் ஆகலானும், தொகுத்தல் முதலியன வழியுள் அடங்குதலானும், இயைபும் ஒருதலையான் உணர்தற்பாலது ஆகலானும், யாம் கூறியதே வடநூலார்க்கும் உடன்பாடு ஆகலானும் அவருரை போலியுரை என்க.**

வழியின் வகையாகிய நால்வகை யாப்பினுள் தொகை விரி யாப்பு என ஒன்று போந்ததன்றித் தொகை வகை விரி எனப் போந்ததில்லையாலோ எனின்: நடுநின்ற வகை, பின் நின்ற விரியை நோக்கின் தொகையாகவும், முன்னின்ற தொகையை நோக்கின் விரியாகவும் அடங்குதலின், இது தொகை விரி யாப்பு என்றதன்பாற்படும் என்க; எனவே, தொகை விரி என இரண்டாய் வரினும், மரத்தினது பராரையினின்றும் கவடு கோடு கொம்பு வளார் பலவாய் ஒன்றோடு ஒன்று தொடர்பட்டெழுந்து நிற்றல்போல் தொகையினின்றும் ஒன்றோடொன்று தொடர்படப் பகுக்கப்பட்டுப் பலவாய் வரினும் தொகை விரி யாப்பேயாம் என்க.

இப்பாயிரம் ஒரு நூற்கு உரித்தாகலின் சிறப்புப்பாயிரமாம் என்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூத்திரம், இஃது தமிழினது தன்மையும் இந்நூற்குச் சிறப்புப் பாயிரமும் கூறியது.

**(இதன் பொருள்) மலர்தலை உலகின்** – பரந்த இடத்தை யுடைய பூமியின் கண்ணே, **மல்கிருள் அகல** – நிறைந்த இருள் நீங்க, **இலகொளி பரப்பி** – விளங்கா நின்ற ஒளியை விரித்து, **யாவையும் விளக்கும்** – நிலநீர் முதலிய எல்லாப் பொருளையும் காட்டும், **பரிதியின்** – ஆதித்தியனைப் போல,

**ஒரு தானாகி** – உலகுக்கெல்லாம் தானொரு முதலேயாகி, **முதலீறு ஒப்பளவு** – தோற்றமும் நாசமும் உவமையும் பிரமாணமும், **ஆசை முனிவிகந்து உயர்ந்த** – விருப்பும் வெறுப்புமின்றி ஞான குணங்களான் மிக்க, **அற்புத மூர்த்தி** – ஆச்சரியத்தையுடைய இறைவனானவன், **தன்னலர்தரு தன்மையின்** – தன்னுடைய விரிந்த தன்மையாகிய கருணையினாலே, **மனவிருள் இரிய** – பூவுலகத்தினுள்ள உயிர்களுடைய மனங்களினுண்டான அறியாமையான இருள் நீங்க, **மாண்பொருள் முழுவதும்** – மாட்சிமைப்பட்ட அறமுதற் பொருளனைத்தையும், **முனிவற அருளிய** – பதினெண் நிலத்துள்ளார் எல்லாரும் விரும்ப அருளிச் செய்த, **மூவறு மொழியுளும்** – பதினெண் நிலத்து வழங்கும் பதினெட்டுப் படையினுள்ளும், **குணகடல் குமரி குடகம் வேங்கடம்** – கீழ்கடல் தென்குமரி மேல்கடல் வடவேங்கடம், **எனுநான்கு எல்லையின்** – இச்சொன்ன நான்கு கரைக்கு முட்பட்டு வழங்காநின்ற, **இருந்தமிழ்க் கடலின்** – பெரிய தமிழெனும் கடலினுள், **அரும்பொருள் ஐந்தையும்** – எழுத்துச் சொல் பொருள் யாப்பு அலங்காரம் என்னும் அரிய பொருள் ஐந்தையும், **யாவரும் உணரத்** – கற்றவர் கல்லாதவர் யாவரும் உணரும்படி, **தொகை வகை விரியிற் றருகென** – தொகையும் வகையும் விரிவும்படி இம்மும்மை யானும் விளங்கச் சொல்லுகவென, **துன்னார் இகலற நூறி** – சத்துருக்களுடைய மாறுபாடெல்லாம் மாயும்படி கெடுத்து, **இருநில முழுவதும் தனதெனக்கோலித்** – பெரிய பூமி யனைத்தினையும் தனதென்று ஏற்றிக் கொண்டு, **தன்மத வாரணம்** – தனக்கே யுரிய மத யானைகளை, **திசைதொறு நிறுவிய** – எட்டுத் திக்கிலும் எல்லைக் களிறாக நிறுத்திய, **திறலுறு தொல்சீர்** – வலியொடு பொருந்தி உலகுளதான அன்று தொடங்கி இடையறாது வாரா நின்ற புகழினையும், **கருங்கழல்** – கூடாதாரைக் கொன்று கட்டிய வீரக்கழலினையும், **வெண்குடை** – பற்றலர் பகரும் பழி மாசறுத்து மற்றுலகளிக்கும் மணிமுத்தக் குடையினையும், **கார் நிகர் வண்கை** – வினைப்பயன் கருதாது மேதினியோர்க்கு மழை போலுதவும் மாமலர்க் கையினையும், **திருந்திய செங்கோல்** – குற்றமற்று உலகிற் கொடுங்கலி துரந்து செப்பம் வளர்க்கும் செய்ய கோலினையும் உடையனான, **சீயகங்கன்** – தங்கலாகுமாம் வெங்கயம் நுங்கும் சிங்கமாகும் கங்க னென்பான், **அருங் கலை வினோதன்** – அரிய கலை நூல்களிலே பொழுதுபோக்கும் விளையாட்டாக உடையான், **அமரா பரணன்** – பெரும் போரினையே புனைகலனாக உடையானென்னும் அழகமை பேரினை உடையான், **மொழிந்தனனாக** – சொன்னானாக, **முன்னோர் நூலின் வழியே** – பழையோர் சொன்ன நூல்களின் வழியே, **நன்னூற் பெயரின் வகுத்தனன்** – நன்னூலென்னும் பெரிய பெயரினாலே செய்தனன் அவன் யாரோ வென்னில், **பொன்மதிற் சனகைச்** – பொன் மதில் புடைசூழ்ந்த சனகாபுரத்து, **சன்மதி முனியருள்** – சன்மதியென்னும் நன்முனி அளித்த, **பன்னருஞ் சிறப்பிற்** – சொல்லுதற்கரிதாகிய பெருந்தன்மை யினை யுடைய, **பவணந்தி யென்னு நாமத்து** – பவணந்தி யென்னும் பெயரினை யுடைய, **இருந் தவத்தோனே** – பெரிய தவத்தினை உடையவனாம், **எ–று.**

# விசாகப் பெருமாளையர்

இது நூல்செய்தவன் பெயர் முதலாகிய பதினொன்றையுஞ் சொல்லுகின்றது.

இதனது பதப்பொருள்: **மலர்தலை யுலகில்** – பரந்தவிடத்தை யுடைய வுலகத்தில், **மல்கிருளகல** – நிறைந்த விருள் கெட, **இலகொளி பரப்பி**– விளங்குங் கிரணத்தை விரித்து, **யாவையும் விளக்கும்** – கண்களுக்குத் தெரியத்தக்க உருவங்களை யெல்லாங் காட்டுகின்ற, **பரிதியின்** – சூரியனைப் போல, **ஒருதானாகி** – உலகங்களுக் கெல்லாந் தானொரு முதலாகி, **முதலீ றொப்பள வாசை முனி விகந் துயர்ந்த** – பிறப்பும் இறப்பும் உபமானமும் அளவும் விருப்பமும் வெறுப்பும் ஆகிய விவைகளிற் சுபாவமாக நீங்கி நிற்கையினாலே தலைவனாகிய, **அற்புத மூர்த்தி** – ஞானமே திருமேனியாக வுடையவன், **தன்னலர்தரு தன்மையின்**–தனது மலர்ந்த குணமாகிய வருளினாலே, **மனவிரு ளிரிய**–உயிர்களின் மனத்திருளாகிய வஞ்ஞானங் கெட, **மாண் பொருண் முழுவதும்** – சிறந்த அறம் பொருள் இன்பம் வீடு என்கிற நான்கு பொருளையும், **முனிவற வருளிய** – ஆசையுட னருளிச் செய்த, **மூவறு மொழியுளும்** – பதினெட்டு நிலத்து மொழிகளுள்ளும், **குணகடல் குமரி குடகம் வேங்கட மெனு நான் கெல்லையின்** – கிழக்கே கடலும் தெற்கே குமரி யாறும் மேற்கே குடகநாடும் வடக்கே திருவேங்கடமும் ஆகிய நான்கெல்லையினை யுடைய நிலத்து மொழியாகிய, **இருந்தமிழ்க் கடலுள்** – இயல் இசை நாடகம் எனப் பெயர்பெற்ற பெரிய தமிழென்னுங் கடலுள், **அரும் பொருளைந்தையும்** – அவ்வற முதலாகிய நான்கு பொருளையும் அறிதற்குக் காரணமாகிய அருமையாகிய இயற் றமிழென்னு மிலக்கணத்தின் கூறான எழுத்துச் சொற் பொருள் யாப்பணி என்னு மைந்து பொருளையும், **யாவருமுணர** – இலக்கியப் பழக்கத்தில் மாத்திரமல்லாமல் எளியவரு மறிய, **தொகை வகை விரியிற் றருகென** – தொகுத்தும் வகுத்தும் விரித்தும் செய்யப்படும் யாப்பினாலே பாடித் தருக வென, **துன்னாரிகலற நூறி** – பகைவரது பகைமை கெட அவரை யழித்து, **இருநில முழுவதுந் தனதெனக் கோலி** – பெரிய பூமி முழுவதையுந் தன்னுடையதாகப் பற்றிக் கொண்டு, **தன் மத வாரணந் திசைதொறு நிறுவிய** – தன் மதயானைகளை எட்டுத் திக்கிலுந் திக்கி யானைகளைப் போல நிறுத்திய, **திறலுறு தொல்சீர்** – தன்னைப் பற்றி மாத்திரமல்லாமல் தன்னுடைய தகப்பன் பாட்டன் முதலானவரைப் பற்றி வரும் வெற்றி மிகுந்த கீர்த்தியையும், **கருங்கழல்** – பெருமை பொருந்திய வீரக் கழலை யும், **வெண்குடை** – வெள்ளைக்குடையையும், **கார்நிகர் வண்கை** – மேகம்போலப் பிரதியுபகாரத்தை நினையாது கொடுக்குங் கையினையும், **திருந்திய செங்கோல்** – கோணாத செங்கோலையும் உடைய, **சீயகங்கன்**–சிங்கம் போன்ற கங்கன், **அருங்கலை விநோதன்**–அரியநூல்களை யாராய்தலே பொழுதுபோக்கும் விளையாட்டாக வுடையவன், **அமரா பரணன்** – தன் மேலே பெரிய காயம்படப் போர் செய்தலையே ஆபரணமாக வுடையவன், **மொழிந்தனனாக** – சொன்னானாக, **முன்னோர்**

**நூலின் வழியே** – முன்னோ ரிலக்கண நூலின் வழியே, **நன்னூற் பெயரின் வகுத்தனன்** – நன்னூலென்னும் பெயரினாற் செய்தனன், **பொன்மதிற் சனகை** – பொன்மதில் சூழ்ந்த சனகாபுரத்துளிருக்கும், **சனமதி முனி யருள்** – சன்மதி முனிவன் பெற்ற, **பன்னருஞ் சிறப்பிற் பவணந்தி யென்னு நாமத்து** – சொல்லுதற்கரிய ஞான வொழுக்கச் சிறப்பினையும் பவணந்தி யென்னும் பெயரினையு முடைய, **இருந் தவத்தோன்** – பெரிய தவத்தினை யுடையோன், **எ–று.**

பவணந்தி யெனவே– **நூல் செய்தோன் பெயரும்,**

முன்னோர் நூலின்வழி யெனவே – நூல் வந்த **வழியும்,**

நான் கெல்லை யெனவே – நூல் வழங்கு **நிலமும்,**

நன்னூலெனவே–**நூலினது பெயரும்,**

அரும் பொருளைந்தெனவே – நூலிற் சொல்லப்பட்ட **பொருளும்,**

யாவரு முணர வெனவே – நிகண்டு கற்று இலக்கிய

வாராய்ச்சி செய்த பின்பு இந்த நூல் கேட்கத்தகு மென்னு **மியைபும்,**

அவை யாராய்ந்தோர் இந்நூல் கேட்டற் குரியா ரென்னும் **அதிகாரிகளும்,**

அவர் அப் பொருளைந்தையும் அறிந்து சொல்லுகளின் முட்டுப்பாட்டை நீக்குதலாலே மொழித் திறத்தின் முட்டறுத்தலென்னும் **பிரயோசனமும்,**

சீயகங்கன் மொழிந்தனனாக நன்னூற்பெயரின் வகுத்தனனெனவே–அவன் காலத்திலே பாடப்பட்டு அவனது அவையிலே அரங்கேற்றிய தெனச் செய்த **காலமும்,** அரங்கேற்றிய **விடமும்,**

சீயகங்கன் சொன்னதினாலும் யாவரிடத்து முண்டாகிய விரக்கத்தினாலும் வகுத்தமையால் **காரணமும்** பெறப்பட்டன.

## முகவை இராமானுச கவிராயர்

என்பது சிறப்புப்பாயிரம்.

இது, நூல்செய்தோன் பெயர் முதலிய பதினொன்றையும் விளக்கி நின்றது.

**தேசிகர் சேவடிமனக்கு–மாசறு மணிமுடி யெனக்கு**
**கடல்புடை சூழ்தரூஉங் காசினி யதனிடை**
**வடதிசைக் கண்மரீஇ வளனெலாஞ் சுரந்து**
**முனிமுன நடந்துறூஉ மூங்கிலிற் படர்ந்து**
**குனிதிரை வைகையின் கொடுந்திற லழித்தாங்**

கடைந்ததென் குமரி யகநெகிழ்ந் தன்பி
னுடைந்துதன் வசப்படா துடல்சல சலத்து
நீராழ மாமெய் நிலைதடு மாறித்
தீரா நீர்மையிற் றிரைக்கடல் படிந்து
மதிமுக மலரிடை மலர்க்கணீர் மல்கத்
துதிசெய வெனவாய் தூக்கி யாங்கே
யெழுத்திய றழாஅ தெழுமொழி குளறி
வழுத்தியு மாரா வவாவலை வளைக்கையாற்
பொன்மணி மலர்தூய்ப் புரிந்துநன் கிறைஞ்சுறூஉந்
தென்மலை மாமுனி தேத்திய லுணர்ந்தோ
ரோர்பன் னிருவர்பா லொண்டமி ழுணர்ந்தோர்
சீர்பெற வெண்ணிலர் தேரினாங் கவருழைச்
சிவக்கொழுந் தென்னுமோர் தேசிக ரவருழைத்
தவக்கொழுந் தென்னமா தவத்தினர் துதித்துறூஉஞ்
சிவஞான தேசிகன் சேவடிக் கன்புபூண்
டவனூ லுணர்ந்திய வைந்திய லோர்ந்தனன்
சோமசுந் தரனெனுந் தொன்னூற் குரவன்
காமர்செஞ் சேவடி கண்ணிணை யாக்கொண்
டியல்பல வுணர்ந்தோ ரெண்ணில ரவருழைத்
துயல்வரு கீழ்மையிற் றொடர்கீழ் நிலையினே
னில்லையாந் தன்னிக ரெனவுல கோதுறூஉ
முல்லையாந் துருவெனு மொளிகொள் போதகனு
மேமசன் மார்க்கத் தியனிலை வழாஅத்
தாமசன் கிளார்க்கெனுந் தகைப்புர வலனுந்
துராசையி னீங்கித் தொன்னெறி வழாஅ
விராச லெனும்பெய ரியற்கோ மகனு
மிந்நூற் குரையீங் ஙனமியற் றுகவென
நன்னூற் குரைசெய நாடின னாவலர்
முகநகை நாணா முழுமக னாயினூஉந்
தகைகெழு சோமசுந் தரகுரு வருளுக்
கென்னா லெனுமகத் தினைப்பலி யீந்து
பின்னாவ தன்வழி பிழையா நிலைநின்
றியன்றவை யியற்றுமிந் நூலுள்',

இத் தலைச்சூத்திரம் யாதுணர்த்திற்றோ வெனின் சிறப்புப் பாயிரத் திலக்கணமாக வெடுத்தோதப்பட்ட நூல்செய்தோன் பெயர் முதலிய பதினொன்றையு முணர்த்திற் றென்க.

**இ–ள்.: மலர் தலை யுலகில் –** விரிந்த இடத்தை யுடைய இவ்வுலகத்திலே, **மல்கு–**நிறைந்த, **இருளகல –** வெளியிரு ளொழிய, **இலகு –** விளங்குகின்ற,

**ஒளி** – ஒளியை யுடைய கதிரை, **பரப்பி**–விரித்து, **யாவையும்** – (கண்ணுக்குத் தோன்றப்படும்) எல்லா வுருவங்களையும், **விளக்கும்** – காட்டுகின்ற, **பரிதியின்**– சூரியனைப் போல, **ஒரு தானாகி** – (உலகுக்கெல்லாம்) தானொரு முதல்வனாகி, **முதல்**–பிறப்பும், **ஈறு** – இறப்பும், **ஒப்பு** – உவமையும், **அளவு**– பிரமாணமும், **ஆசை** – இச்சையும், **முனிவு** – வெறுப்பும், **இகந்து** – (ஆகிய இவற்றை யெல்லாம் இயல்பாகவே) கடந்து, **உயர்ந்த** – மேலான, **அற்புத மூர்த்தி** – ஞானமே திருமேனியாகிய கடவுள், **தன்** – தன்னுடைய, **அலர்தரு** – மலர்ந்த, **தன்மையின்** – குணத்தினாலே, (கிருபை யினாலே); **மனவிருள்** – மனத்திலிருக்கின்ற அஞ்ஞானமானது, **இரிய** – நீங்க, **மாண்** – பெருமை பொருந்திய, **பொருள் முழுவதும்** – அறம் பொருள் இன்பம் வீடு என்கின்ற நான்கு பொருளையும், **முனிவற**–வெறுப்பில்லாமல், **அருளிய** – அருளிச் செய்த (தந்த); **மூவறுமொழியுளும்**–பதினெண் பாடை களுள்ளும், **குணகடல்**–கீழ்க்கடலும், **குமரி**–தென்குமரி யாறும், **குடகம்** – குடகமென்னும் மேல்நாடும், **வேங்கடம்** – வடவேங்கட மென்னும் மலையும், **எனுநான் கெல்லையின்** – என்று சொல்லப்படும் இந்த நான்கெல்லைக்குட்பட்ட, **இருந்தமிழ்க் கடலுள்** – பெருமை பொருந்திய தமிழாகிய கடலுளிருக்கின்ற, **அரும்பொருளைந்தையும்** – அருமையாகிய எழுத்துச் சொல் பொருள் யாப்பு அலங்காரம் என்கின்ற ஐந்து பொருளையும், **யாவரு முணர**–எல்லாருஞ் சந்தேகப்படாமலே தெளியும்படியாக, **தொகை வகை விரியில்** – தொகுத்துச் சொல்லுதலும் வகுத்துச் சொல்லுதலும் விரித்துச் சொல்லுதலுமாகிய மூவகை நூல் யாப்பினாலே, **தருகவென** – பாடித்தருக வென்று, **துன்னார்** – பகைவரது, **இகலற** – பகைகெட, **நூறி** – அவரைத் துணித்து, (வாளினாலே துண்டிட்டு) **இருநில முழுவதும்** – பெருமை பொருந்திய பூமி முழுதையும், **தனதென** – தன்ன தென்று சொல்லும்படியாக, **கோலி** – கைப்பற்றிக் கொண்டு, **தன்மத வாரணம்** – தன் மதயானைகளை, **திசைதொறும்** – எட்டுத் திக்கிலும், **நிறுவிய** – நிறுத்தி வைத்த, **திறல்** – வெற்றியையும், **உறு** – மிக்க, **தொல்சீர்** – தொன்றுதொட்டு வந்த கீர்த்தியையும், **கருங்கழல்** – பெருமை பொருந்திய வீரகண்டாமணியையும், **வெண்குடை** – வெள்ளைக் குடையையும், **கார்நிகர்** – மேகம் போன்ற, **வண்கை** – கொடைக்கையையும், (மேகத்தைப் போலக் கைமாறுதவி வேண்டாது கொடுக்குங் கையினையும்) **திருந்திய செங்கோல்**–கோணாத செங்கோலையு முடைய, **அருங்கலை விநோதன்** – அரிய நூல்களைக் (கற்பதுங் கேட்பதுமே) பொழுதுபோக்கும் விளையாட்டாக வுடையவனாகிய, **அமரா பரணன்** –போர் செய்தலினாலே தன்மேற்படும் வடுக்களையே ஆபரணமாக வுடையவனாகிய, **சீயகங்கன்** – சீயகங்க னென்னும் இயற்பெயரினை யுடையவன், **மொழிந்தனனாக** – சொன்னவனாக, **முன்னோர் நூலின் வழியே** – பழைய நூலாசிரியருடைய நூலின் வழிப்பற்றியே, **நன்னூல் பெயரின் வகுத்தனன்** – நன்னூலென்கிற பெயரை யிட்டுச் செய்தனன், (அவன் யாரெனின்) **பொன்மதில் சனகை** – பொன்மதில் சூழ்ந்த சனகாபுரியென்னு நகரிலுள்ள, **சன்மதி**

**முனியருள்** – சன்மதி முனியென்பவன் பெற்ற, **பன்னருஞ் சிறப்பின்** – சொல்லுதற்கு அருமையாகிய நன்மைகளையுடைய, **பவணந்தி யென்னு நாமத்து** – பவணந்தி யென்கிற இயற்பெயரை யுடைய, **இருந் தவத்தோன்** – பெரிய தவத்தையுடையவன், **எ–று.**

இதனுள், சூரியன் வெளியிருளகலத் தன் கதிரொளியைத் தந்தது போல, அற்புதமூர்த்தி தன் அருளினாலே யுள்ளிருளகலத் தந்த பதினெண்மொழி யெனக் கூட்டிப் பொருளறிக. ஆனால் நான்குபொருளையுந் தந்த மொழியெனக் கூறியது மலைவா மெனின், இல்லையென்க:– என்னை? நான்குபொருளையுந் தருதற்கு இடமாகிய மொழியென நிற்பதினாலும் – ஒளியுங் கதிரும் ஒருமைப்பட்டு நிற்பதுபோல மொழியும் பொருளும் ஒருமைப்பட்டு நிற்பதினாலுமென்க. இனி, தந்தது பொருளும் மொழியும் என வேற்றுமைப்படக் கொளினும் அமையும். இது, **ஒப்புமைக்கூட்ட உவமை** யலங்காரம்.

**'கடல்விளிம் புடுத்த கண்ணகன் ஞாலத்**
**தடரும்வல் லிருடுரந் தனைத்தையும் விளக்கும்**
**பல்கதிர்ப் பரிதியிற்பரம்பர னருளா**
**லுள்ளகத் திருள்கடிந் துறு பொரு ளெவற்றையும்**
**பாற்படத் தொகுத்த பதினெண் மொழி'**

எனப் பிறர் கூறுதலுங் காண்க; மற்றைய வெல்லாம் பொருள்விளங்கிக் கிடந்தன.

இதனுள், பவணந்தியெனவே – நூல்செய்தோன் பெயரும், முன்னோர் நூலின் வழியே யெனவே – வழியும், எனுநான் கெல்லையினெனவே எல்லையும், நன்னூற் பெயரினெனவே – நூற்பெயரும், தொகைவகை விரியி னெனவே–யாப்பும், அரும் பொருளைந்தையுமெனவே–நூல் குறித்த பொருளும், சீயகங்கன் தருகெனமொழிந்தனனெனவே – கேட்போனும், மாண் பொருண் முழுவதுமெனவே – நூற் பயனும், சீயகங்கன் கேட்கவெனவே – அவன்காலத்திற்பாடி அவன் அவைக் களத்தில் அரங்கேற்றியதெனக் காலமும், அவைக்களமும், யாவருமுணர எனவே – காரணமும் ஆகிய பதினொன்றும் வந்தவாறுகண்க. யாப்பு என்பது, நூலைத் தொகுத்து முடிப்பதும் விரித்து முடிப்பதும் தொகுத்து விரித்து முடிப்பதும் மொழிபெயர்த்து முடிப்பது மாகிய நூற்கட்டு. இதனுள் அரும் பொருளைந்தையும் வகுத்தனனென்றதனால் எழுத்திலக்கணம்

சொல்லிலக்கணந் தவிர – மற்ற மூன்றிலக் கணங்களும் அக்காலத்திலிருந்தன போலும். இப்பாயிரம் இந்த நூலுக்கே யுரித்தாதலால் பொதுமையில் நீங்கிச் சிறப்புப்பாயிர மெனப்பட்டது. வகுத்தனன் பவணந்தி என முற்றுப் பயனிலை கொண்டதாக இச்சூத்திரத்தை முடித்துக்கொள்க. சீயகங்கன் கேட்டுக் கொண்டபடியே பவணந்தி இந்நூலைச் செய்தன னென்பது கருத்து.

இனி, இன்னானென் றெடுத்துச் சொல்லப்பட்டுச் சிறப்பு பாயிரத்து ளடங்கிப் பொதுமையி னீங்கி நிற்குங் கேட்போனை இன்னானெனக் கூறப்படாது பொதுப்பாயிரத்து ளடங்கிப் பொதுமை யினிற்குங் கொள்வோனாகிய கேட்போனாகவும் **'அறம்பொரு ளின்பம் வீட டைதனூற் பயனே'** எனவும், **'நாற்பொருட்பயத்தோ'** டெனவும், **'மொழித்திறத்தின் முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து, கட்டறுத்து வீடுபெறும்'** எனவுங் கூறுவ தறிந்திருந்தும் யாவருமுணர்தலைப் பயனெனவும், மொழித் திறத்தின் முட்டறுத் தலைப்பயனெனவுங் கூறுவர். 'திருவேங்கட நாத னோதினனாக வுரைத்தனன் வைத்தியநாத தேசிகன்' எனவும், 'ஊற்றுமலை மருதப்பன் பகர்தியென் றியம்பலின்' எனவும், 'தென்னூற்று மலைமருதப் பன்புகலப் பொருள் விளங்கச் செய்தான்' எனவும் செய்வித்தோன் பெயர் பற்றி நூற்குப் பெயர் வருமெனவும் வழங்குகின்ற வழக்கிற்குப் புகலிடமின்றாய் முடிவதன்றியும், நூல் செய்தோனுக்குச் செய்வித்தோன் செய்நன்றி மறத்தலென்னுங் குற்ற நேரிடு மாதலாலும், சிறப்புப் பாயிரத்துளடங்கிய கேட்போனும் பொதுப் பாயிரத்துளடங்கிய கேட்போனும் வேறாதலாலும், உணர்தலும் மொழித்திறத்தின் முட்டறுத்தலும் வீடுபெறுதற் பொருட்டாதலாலு மதுபொருந்தா தென்க. நால்வகை யாப்பினுள், தொகை விரி யாப்பென ஒன்று வந்ததே தவிரத் தொகை வகை விரியென வந்ததில்லையே யெனின், நடுநின்ற வகை பின்னின்ற விரியை நோக்கத் தொகையாகவும், முன்னின்ற தொகையை நோக்க விரியாகவும் அடங்குதலால், தொகை விரியென விரண்டாய் வரினும் மரத்தினதுபருத்த அரையிலே நின்றுங் கவடு கோடு கொம்பு வளார் எனப் பலவாயொன்றோடொன்று தொடர்ப் பட்டெழுந்து நிற்பதுபோலத் தொகையினின்றும் ஒன்றோடொன்று தொடர்படப் பகுக்கப் பட்டு வகை விரியெனப் பலவாய் வரினுந் தொகைவிரி யாப்பென்ற தன்பாற்படு மென்க.

## கா.கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

அஃதாவது இந் நன்னூலொன்றற்கே உரித்தாய முகவுரை யென்க. இதனுள் ஆக்கியோன் பெயர் முதலிய பதினொன்றும் பெறப்படும்.

**உரை :– மலர்தலை உலகில்** – பரந்த இடத்தையுடைய இவ்வுலகத்திலே, **மல்கு இருள் அகல** – நிறைந்த வெளி இருட்டு நீங்கும்படி, **இலகு ஒளிபரப்பி** – விளங்குகின்ற கிரணங்களை விரித்து, **யாவையும் விளக்கும்** – (கண்களுக்குத் தெரியத்தக்க) எல்லாப் பொருள்களையும் காட்டுகின்ற, **பரிதியின்** – சூரியன் போல, **ஒரு தான் ஆகி** – (எல்லா வுலகுக்கும்) தான் ஒரு முதலாகி, **முதல்ஈறு ஒப்பு அளவு ஆசை முனிவு இகந்து** – பிறப்பும் இறப்பும் ஒப்பும் அளவும் விருப்பும் வெறுப்பும் (ஆகிய இவற்றை சுபாவத்தில்) கடந்து நிற்கையாலே, **உயர்ந்த –, அற்புத மூர்த்தி** – ஆச்சரியகரமாகிய (அறிவே) உருவாகவுடைய கடவுள், **தன் அலர்தரு** தன்மையின் – தனது பரந்த குணமாகிய கருணை யினாலே, **மனம் இருள் இரிய** – (பிராணிகளின்) மனத்திலுள்ள அஞ்ஞானவிருள் ஒழியும்படி, **மாண்பொருள் முழுவதும்** – சிறந்த (அறம்பொருள் இன்பம் வீடு என்னும்) நான்கு பொருள்களையும், **முனிவு அற அருளிய** – வெறுப்பின்றி அருளிய (அன்போடு தந்த), **மூ அறுமொழியுளும்** – பதினெட்டுப் பாஷைக ளுள்ளும், **குணகடல் குமரி குடகம் வேங்கடம் எனும் நான்கு எல்லையின்** – கிழக்கில் கீழ்கடலும் தெற்கில் கன்னியாகுமரியும் மேற்கில் குடகுதேசமும் வடக்கில் திருவேங்கடமும் ஆகிய நான்கு எல்லைகட்கு உட்பட்ட தேசத்தில் (வழங்குகிற), **இரு தமிழ்கடலுள்** – பெரிய தமிழ்ப்பாஷை என்னும் கடலிலுள்ள, **அரு பொருள் ஐந்தையும்** – (அறிதற்கு) அரிய (எழுத்து சொல் பொருள் யாப்பு அணி என்னும்) ஐந்து பொருள்களையும், **யாவரும் உணர** – இலக்கியங் கற்றவரே யன்றி மற்றவரும் (எளிதில்) உணரும்படி, **தொகைவகை விரியின் தருக என** – தொகுத்தும் வகுத்தும் விரித்தும் செய்யப்படும் யாப்பினாலே இயற்றித் தருக என்று, **துன்னார் இகல் அற நூறி** – சத்துருக்களது பகைமைகெட (அவரை) அழித்து, **இருநிலம் முழுவதும் தனது என கோலி** – பெரிய பூமி முழுவதையும் தன்னுடையதாகக் கைவசப்படுத்திக் கொண்டு, **தன் மதம்வாரணம் திசைதொறும் நிறுவிய** – தன் மதயானைகளை எல்லாத் திசையிலும் அஷ்டதிக்கயங்களைப் போல நிறுத்திய, **திறல் உறு** – வெற்றி பொருந்திய, **தொல்சீர்** – பழமையான (பரம்பரையால் வாராநின்ற) பெரும்புகழையும், **கருகழல்** – சிறந்த வீரக்கழலையும், **வெண்குடை** – வெண் கொற்றக் குடையையும், **கார்நிகர் வண்கை** – மேகத்தையொத்த (கைம்மாறு கருதாமல்) கொடுக்கின்ற கையையும், **திருந்திய செங்கோல்** – ஒழுங்கான (நீதி தவறாத) அரசாட்சியையும் உடைய, **அருகலை வினோதன்** – அருமையான நூல்களை (ஆராய்தலையே) விளையாட்டாக உடையவனும், **அமர் ஆபரணன்** – போர் செய்தலையே (தனக்கு) அணியாகப் பூண்டவனும் ஆகிய, **சீயகங்கன்** – சீயகங்கன் என்னும் அரசன், **மொழிந்தனன் ஆக** – சொல்ல, **பொன்மதில்**

**சனகை** – பொன் மதில்கள் சூழ்ந்த சனகாபுரத்திலுள்ள, **சன்மதி முனிஅருள்** – சன்மதி என்னும் முனிவன் பெற்ற, **பன் அருசிறப்பின்** – சொல்லுதற்கு அரிய பெருமையையும், **பவணந்தி என்னும் நாமத்து** – பவணந்தி என்னும் பெயரினையும் உடைய, **இருதவத்தோன்** – பெரிய தவத்தையுடைய முனிவர், **முன்னோர் நூலின் வழியே** – (தொல்காப்பியம் முதலிய) முன்னோர்செய்த இலக்கண நூலின் வழியாகவே, **நன்னூல் பெயரின் வகுத்தனன்** – நன்னூல் என்னும் பெயரிட்டு இந்நூலைச் செய்தனர்.

**குறிப்பு :–**

"தமிழ்க்கடலுள், அரும்பொருளைந்தையும், யாவருமுணர, தொகைவகை விரியிற்றருகெனச் சீயகங்கன் மொழிந்தனனாக, பவணந்தியென்னுநாமத் திருந்தவத் தோன் முன்னோர் நூலின்வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்" எனக் கூட்டி முடித்துக் கொள்க.

இதனுள், 'பவணந்தி' என்றதனால் நூல் **செய்தவர் பெயரும்,** 'முன்னோர் நூலின்வழி' என்றதனால் நூல் வந்த **வழியும்,** 'நான்கெல்லை' என்றதனால் நூல் வழங்கும் **எல்லையும்,** ' நன்னூல்' என்றதனால் **நூலின் பெயரும்** 'தொகை வகை விரியின்' என்றதனால்"

**நூல்யாப்பும்,** 'அரும்பொருளைந்து' என்றதனால்" நூலிற் **கூறப்பட்ட பொருளும்,** அவற்றை ஆராய்ந்தோர் இந்நூல் கேட்டற்குரியார் என்னும் **கேட்போரும்,** அவர் அப் பொருளைந்தையும் அறிந்து சொற்களின் முட்டுப்பாட்டை (வருத்தத்தை) ஒழித்தலால் 'மொழித்திறத்தின் முட்டறுத்தல்' என்னும் **பயனும்,** 'சீயகங்கன் மொழிந்தன னாக வகுத்தனன்' என்றதனால், அவ்வரசன் காலத்துச் செய்யப்பட்டு அவனது அவைக் கண்ணே அரங் கேற்றப்பட்டதென நூல் செய்த **காலமும்** அரங்கேறிய **இடமும்,** சீயகங்கன் வேண்டினதனாலும், யாவரிடத்தும் உண்டான கருணையாலும் இயற்றினமையால் **காரணமும்** ஆகிய பதினொன்றும் பெறப்பட்டன.

இனி, 'யாவருமுணர' என்றதனால் நிகண்டு கற்று இலக்கிய ஆராய்ச்சி செய்தபின்னரே இந்நூல் கேட்கத்தகும் என்னும் யாப்பும், 'சீயகங்கன் தருகென மொழிந்தனனாக' என்றதனால் கேட்போனும், 'மாண்பொருண் முழுவதும்' என்றதனால் பயனும் பெறப் பட்டன எனக் கூறுவாருமுளர்.

## ஆறுமுக நாவலர்

இ–ள்.: **மலர் தலை உலகின்** – பரந்த விடத்தை யுடைய உலகத்தின்கண்ணே, **மல்கு இருள் அகல** – நிறைந்த கண்ணிருள் கெட, **இலகு ஒளி பரப்பி** – விளங்குங் கிரணத்தை விரித்து, **யாவையும் விளக்கும் பரிதியின்** – கட்பொறிக்கு விடயமாகிய உருவங்க ளெல்லாவற்றையும் காட்டுஞ் சூரியனைப் போல, **ஒரு தான் ஆகி** – உலகங்களுக் கெல்லாந் தானொரு முதலே யாகி, **முதல் ஈறு ஒப்பு அளவு ஆசை முனிவு இகந்து உயர்ந்த** – தோற்றமும் ஒடுக்கமும் உவமையும் அளவும் விருப்பும் வெறுப்புமாகிய இவைகளின் இயல்பாகவே நீங்கி நிற்றலினாலே தலைவனாகிய, **அற்புத மூர்த்தி** – ஞானமே திருமேனியாக உடையவன், **தன் அலர்தரு தன்மையின்** – தனது மலர்ந்த குணமாகிய கருணையினாலே, **மன இருள் இரிய** – உயிர்களின் மனத்திருளாகிய அஞ்ஞானங் கெட, **மாண்பொருள் முழுவதும்** – மாட்சிமைப்பட்ட அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு பொருளையும், **முனிவு அற அருளிய** – விருப்புடன் அருளிச் செய்த, **மூவறு மொழியுளும்** – பதினெண் ணிலத்து மொழிகளுள்ளும், **குணகடல் குமரி குடகம் வேங்கடம் எனும் நான்கு எல்லையின்** – கிழக்கே கீழ்கடலுந் தெற்கே கன்னியாகுமரியும் மேற்கே குடகநாடும் வடக்கே திருவேங்கடமும் என்று சொல்லப்படும் நான்கெல்லையினை யுடைய நிலத்து மொழியாகிய, **இருந் தமிழ்க்கடலுள்**– பெரிய தமிழென்னுங் கடலுள், **அரும் பொருள் ஐந்தையும்** – அருமையாகிய எழுத்துச் சொற் பொருள் யாப்பணி யென்னும் ஐந்து பொருளையும், **யாவரும் உணர** – இலக்கியப் பயிற்சியில் வலியவரே யன்றி எளியவரும் அறியும் பொருட்டு, **தொகை வகை விரியின் தருக என** – தொகுத்தும் வகுத்தும் விரித்துஞ் செய்யப்படும் யாப்பினாலே பாடித் தருக வென, **துன்னார் இகல் அற நூறி** – பகைவரது பகைமை கெட அவரை யழித்து, **இரு நிலம் முழுவதும் தனது எனக் கோலி** – பெரிய பூமி முழுதையும் தன்னுடையதாகப் பற்றிக் கொண்டு, **தன் மத வாரணம் திசை தொறும் நிறுவிய திறல் உறு** – தன் மதயானைகளை எட்டுத் திக்கிலுந் திக்கியானைகள் போல நிறுத்திய வெற்றி மிகுந்த, **தொல்சீர்** – தொன்றுதொட்டு வருங் கீர்த்தியையும், **கருங்கழல்** – பெருமை பொருந்திய வீரக் கழலையும், **வெண் குடை** – வெண்கொற்றக் குடையையும், **கார் நிகர் வண்கை** – மேகம் போலுங் கொடையை யுடைய கையையும், **திருந்திய செங்கோல்** – கோடாத செங்கோலையு முடைய, **சீயகங்கன்** – சிங்கம் போன்ற கங்கன், **அருங்கலை வினோதன்** – அருமையாகிய நூல்களை ஆராய்தலே பொழுதுபோக்கும் விளையாட்டாக உடையவன், **அமர் ஆபரணன்** – போர்செய்தலினாலே தன்மேற் படும் பெரிய காயங்களையே ஆபரணமாக உடையவன், **மொழிந்தனன் ஆக** – சொன்னானாக, **முன்னோர் நூலின் வழியே** – தொல்லாசிரியருடைய இலக்கண நூலின் வழியே, **நன்னூற் பெயரின் வகுத்தனன்** – நன்னூலென்னும் பெயரினாற் செய்தனன், **பொன் மதிற் சனகை** – பொன்மதிலினாலே சூழப்பட்ட சனகாபுரத்துளிருக்கும், **சன்மதி முனி அருள்**

– **சன்மதி முனிவன் பெற்ற, பன்னருஞ் சிறப்பிற் பவணந்தி என்னும் நாமத்து** –சொல்லுதற்கரிய ஞானவொழுக்கச் சிறப்பையும் பவணந்தி யென்னும் பெயரையு முடைய, **இருந் தவத்தோன்** – பெரிய தவத்தினை யுடையோன், **எ–று.**

**இதனது தாற்பரியம்.:** சூரியன் தன் கிரணத்தினாலே புற விருளை அகற்றிக் கட்பொறிக்கு விடயமாகிய உருவங்களை விளக்குதல் போலக், கடவுள் தன் கருணையினாலே அகவிருளை அகற்றி அறம், பொருள், இன்பம், வீடு என்னு நான்கு உறுதிப்பொருளையும் விளக்கப் பெற்ற பதினென் பாடைகளுள்ளும், கிழக்கே கீழ்கடலுந் தெற்கே கன்னியா குமரியும் மேற்கே குடகநாடும் வடக்கே திருவேங்கடமும் எல்லையாகவுடைய நிலத்து மொழியாகிய தமிழ்ப் பாடையினுள் எழுத்துச் சொற் பொருள் யாப்பு அணி என்னும் ஐந்திலக்கணத்தையும், இலக்கியப் பயிற்சியின் வலியவரே யன்றி எளியவரும் அறியும் பொருட்டுத், தொகுத்தும் வகுத்தும் விரித்துஞ் செய்யப்படும் யாப்பினாற் செய்து தருக எனச் சீயகங்கன் சொல்லத், தொல்லாசிரியர் நூலின் வழியே நன்னூல் என்னும் பெயரினாற் செய்தனன் பவணந்தி முனிவன் என்பதாம்.

ஆக்கியோன்பெயர் –பவணந்திமுனிவன்,வழி–முன்னோர் நூலின்வழி, எல்லை – குணகடல் குமரி குடகம் வேங்கடமெனு நான்கெல்லை, நூற்பெயர் – நன்னூல், யாப்பு –நிகண்டு கற்று இலக்கியப் பயிற்சி செய்தபின் இந்நூல் கேட்கத் தக்கது, நுதலியபொருள் –அரும் பொருளைந்து, கேட்போர் – இலக்கியப்பயிற்சி செய்தவர், பயன் –மொழித்திறத்தின் முட்டறுத்தல், காலம் – சீயகங்கன் காலம், களன்–சீயகங்கன் சபை, காரணம் – சீயகங்கன் சொன்னமையும், யாவரிடத்தும் இரக்கமுடைமையும்.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.: மலர் தலை உலகின்** – பரந்தவிடத்தையுடைய உலகத்தின்கண்ணே, – **மல்கு இருள் அகல** – நிறைந்த கண்ணிருள் கெட, – **இலகு ஒளி பரப்பி** – விளங்குங் கிரணத்தை விரித்து, – **யாவையும் விளக்கும் பரிதியின்** – கட்பொறிக்கு விடயமாகிய உருவங்களெல்லாவற்றையுங் காட்டுஞ் சூரியனைப் போல, **ஒரு தான் ஆகி** – உலகங்களுக் கெல்லாந் தானொரு முத்லேயாகி, – **முதல் ஈறு ஒப்பு அளவு ஆசை முனிவு இகந்து உயர்ந்த** – தோற்றமும் ஒடுக்கமும் உவமையும் அளவும் விருப்பும் வெறுப்புமாகிய இவைகளின் இயல்பாகவே நீங்கி நிற்றலினாலே தலைவனாகிய, **அற்புத மூர்த்தி** – ஞானமே திருமேனியாகவுடையவன், **தன் அலர்தரு தன்மையின் தனது**

**மலர்ந்த** குணமாகிய கருணையினாலே, – **மன இருள் இனிய** – உயிர்களின் மனத்திருளாகிய அஞ்ஞானங்கெட, **மாண் பொருள் முழுவதும்** – மாட்சிமைப்பட்ட அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு பொருளையும் ,**முனிவு அற அருளிய** – விருப்புடன் அருளிச் செய்த, **மூவறு மொழியுளும்** – பதினெண்ணிலத்து மொழிகநெள்ளும், **குண கடல் குமரி குடகம் வேங்கடம் எனும் நான்கு எல்லையின்** – கிழக்கே கடலுந் தெற்கே கன்னியாகுமரியும், மேற்கே குடகநாடும் வடக்கே திருவேங்கடமும் என்று சொல்லப்படும் நான்கெல்லை யினையுடைய நிலத்து மொழியாகிய, **இருந் தமிழ்க்கடலுள்** – பெரிய தமிழென்னுங் கடலுள், **அரும் பொருள் ஐந்தையும்** –அருமையாகிய எழுத்துச் சொற் பொருள் யாப்பு அணி யென்னும் ஐந்துபொருளையும், **யாவரும் உணர** – இலக்கியப் பயிற்சியில் வலியவரேயன்றி எளியவரும் அறியும்பொருட்டு, **தொகை வகை விரியின் தருக என** – தொகுத்தும் வகுத்தும் விரித்துஞ் செய்யப்படும் யாப்பினாலே பாடித் தருகவென, **துன்னார் இகல் அற நூறி** – பகைவரது பகைமைகெட அவரை யழித்து, **இரு நிலம் முழுவதும் தனது எனக் கோலி,** – பெரியபூமி முழுவதை யுந் தன்னுடையதாகப் பற்றிக்கொண்டு, – **தன் மத வாரணம் திசை தோறும் நிறுவிய திறல் உறு** – தன் மதயானைகளை எட்டுத் திக்கிலுந் திக்கியானைகள் போல நிறுத்திய வெற்றிமிகுந்த, **தொல் சீர்** – தொன்றுதொட்டு வருங் கீர்த்தியையும், **கருங்கழல்** – பெருமை பொருந்திய வீரக்கழலையும், **வெண் குடை**– வெண் கொற்றக் குடையை யும் , **கார் நிகர் வண்கை** – மேகம் போலுங் கொடையையுடைய கையையும், **திருந்திய செங்கோல்** – கோடாத செங்கோலையு முடைய, **சீயகங்கன்** – சிங்கம்போன்ற கங்கன், **அருங்கலை வினோதன்** – அருமையாகிய நூல்களை ஆராய்தலே பொழுதுபோக்கும் விளையாட்டாகவுடையவன், **அமர் ஆபரணன்** – போர் செய்தலினாலே தன்மேற்படும் பெரிய காயங்களையே ஆபரணமாக உடையவன், **மொழிந்தனன் ஆக** – சொன்னனாக, **முன்னோர் நூலின் வழியே** – தொல் லாசிரியருடைய இலக்கண நூலின் வழியே, – **நன்னூற் பெயரின் வகுத்தனன்** – நன்னூலென்னும் பெயரினாற் செய்தனன், – **பொன் மதிற் சனைகை** – பொன் மதிலினாலே சூழப்பட்ட சனகாபுரத்துளிருக்கும், – **சன்மதிமுனி அருள்** – சன்மதி முனிவன் பெற்ற, – **பன்னருஞ் சிறப்பிற் பவணந்தி என்னும் நாமத்து** – சொல்லுதற்கரிய ஞானவொழுக்கச் சிறப்பையும் பவணந்தி யென்னும் பெயரையு முடைய, – **இருந்தவத்தோன்** – பெரிய தவத்தினையுடையோன். **என்றவாறு.**

**இதனது தாற்பரியம்.:**– சூரியன் தன் கிரணத்தினாலே புறவிருளை அகற்றிச் கட்பொறிக்கு விடயமாகிய உருவங்களை விளக்குதல் போலக், கடவுள் தன் கருணையினாலே அகவிருளை அகற்றி அறம் பொருள் இன்பம் வீடு என்னு நான்கு உறுதிப் பொருளையும் விளக்கப்பெற்ற பதினெண்பாடை களுள்ளும், கிழக்கே கடலுந் தெற்கே கன்னியாகுமரியும் மேற்கே குடகநாடும் வடக்கே

திருவேங்கடமும் எல்லையாகவுடைய நிலத்து மொழியாகிய தமிழ்ப் பாடையினுள், எழுத்து சொல் பொருள் யாப்பு அணி என்னும் ஐந்திலக்கணத்தையும், இலக்கியப் பயிற்சியின் வலியவரேயன்றி எளியவரும் அறியும் பொருட்டுத் தொகுத்தும் வகுத்தும் விரித்துஞ் செய்யப்படும் யாப்பினாற் செய்து தருக எனச் சீயங்கன் சொல்லத் தொல்லாசிரியர் நூலின்வழியே நன்னூல் என்றும் பெயரினாற் செய்தனன் பவணந்தி முனிவன் **என்பதாம்.**

அமர் என்பது ஆகுபெயராய் அமரில் ஆயுதந்தைத்த புண்ணை யுணர்த்திற்று.

| | |
|---|---|
| **ஆக்கியோன் பெயர்** | பவணந்திமுனிவன் |
| **வழி** | முன்னோர் நூலின் வழி. |
| **எல்லை** | குணகடல் குமரி குடகம் வேங்கடமெனு (நான்கெல்லை) |
| **நூற்பெயர்** | நன்னூல் |
| **யாப்பு** | நிகண்டு கற்று இலக்கியப் பயிற்சி செய்த பின் இந்நூல் கேட்கத்தக்கது. |
| **நுதலிய பொருள்** | அரும்பொருளைந்து |
| **கேட்போர்** | இலக்கியப்பயிற்சி செய்தவர் |
| **பயன்** | மொழித்திறத்தின் முட்டறுத்தல் |
| **காலம்** | சீயங்கன்காலம் |
| **களன்** | சீயங்கன் சபை |
| **காரணம்** | சீயங்கன் சொன்னமையும், யாவரிடத்தும் இரக்கமுடைமையும் |

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இது, நூலாசிரியர் பெயர் முதலிய பதினொன்றையும் விளக்குகின்றது.

**இ—ள்.: மலர் தலை உலகில்** — பரந்த இடத்தை யுடைய இவ் வுலகத்திலே, **மல்கு இருள் அகல** — நிறைந்த வெளியிருள் ஒழியும்படி, **இலகு ஒளி பரப்பி** — விளங்குகின்ற (தனது ஆயிரம்) கிரணங்களை விரித்து, **யாவையும் விளக்கும்** — (கண்ணுக்குத் தெரியத்தக்க உருவங்கள்) எல்லாவற்றையும் காட்டுகின்ற, **பரிதியின்** — சூரியன் போல, **ஒரு தான் ஆகி** — (உலகங்கட் கெல்லாம்) தான் ஒரு முதல்வனேயாகி, **முதல் ஈறு ஒப்பு அளவு ஆசை முனிவு இகந்து உயர்ந்த** —

பிறப்பும் இறப்பும் உவமையும் அளவும் விருப்பும் வெறுப்பும் (ஆகிய இவற்றை இயல்பாகவே) நீங்கி நிற்றலினாலே தலைவனாகிய, **அற்புதமூர்த்தி** – வியக்கத் தக்க திருமேனியை யுடைய கடவுள், **தன் அலர்தரு தன்மையின்** – தனது பரவிய குணமாகிய அருளினாலே, **மனம் இருள் இரிய** – (உயிர்களின்) மனத்தினி ருளாகிய அஞ்ஞானம் ஒழியும்படி, **மாண் பொருள் முழுவதும்** – சிறந்த (அறம், பொருள், இன்பம், வீடு என்னும்) நான்கு உறுதிப்பொருள்களையும், **முனிவு அற அருளிய** – வெறுப்பில்லா மல் அருளிச் செய்த (விருப்பத்தோடு தந்த), **மூ அறு மொழி யுளும்** – பதினெட்டுத் தேச பாஷைகளுள்ளும், **குண கடல் குமரி குடகம் வேங்கடம் எனும் நான்கு எல்லையின்** – (கிழக்கே) கீழ்கடலும் (தெற்கே) கன்னியாகுமரியும் (மேற்கே) குடகநாடும் (வடக்கே) திருவேங்கடமலையும் என்கிற நான்கு எல்லைக்கு உட்பட்ட தேசத்து (வழங்குகின்ற), **இருந்தமிழ் கடலுள்** – பெரிய தமிழ்ப்பாஷை யென்னும் கடலில் உள்ள, **அரும் பொருள் ஐந்தையும்** – (அறிதற்கு) அரியனவான (எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும்) ஐந்து பொருள்களையும், **யாவரும் உணர** – (இலக்கிய வாராய்ச்சியில்) வல்லவர் மாத்திரமே யன்றி அல்லாதவரும் (எளிதில்) அறியும்படி, **தொகை வகை விரியின் தருக** – தொகுத்தும் வகுத்தும் விரித்தும் செய்யப்படும் நூல் யாப்பினாலே இயற்றித் தருவாயாக, **என** – என்று, **துன்னார் இகல் அற நூறி** – பகைவரது பகைமை கெட (அவரை) அழித்து, **இரு நிலம் முழுவதும் தனது என கோலி** – பெரிய பூமி முழுவதையும் தன்னுடையதாகக் கைப்பற்றிக்கொண்டு, **தன் மதம் வாரணம் திசைதொறும் நிறுவிய** – தனது மதயானைகளை(த் தன்வெற்றிக்கு அடை யாளமாக) எட்டுத்திக்கிலும் (திக்குயானைகளைப் போல) நிறுத்திய, **திறல்** – வல்லமையையும், **உறு தொல் சீர்** – மிக்க தொன்றுதொட்டு (பரம்பரையாக) வருகின்ற பெருங் கீர்த்தியையும், **கருங் கழல்** – பெருமை பொருந்திய வீரக்கழலையும், **வெள்குடை** – வெண்கொற்றக் குடையையும், **கார்நிகர் வள் கை**– மேகம் போன்ற (பிரதியுபகாரத்தை விரும்பாமற்) கொடுக்கின்ற கையையும், **திருந்திய செங்கோல்** – கோணாத (நீதி தவறாத) அரசாட்சியையும் உடைய, **அருங் கலை வினோதன்** – அரிய நூல்களை ஆராய்தலையே பொழுது போக்கும் விளையாட்டாக வுடையவனும், **அமர் ஆபரணன்** – போரை மேற்கொள்ளுதலையே (தனக்கு) ஆபரணமாகக் கொண்டவனும் ஆகிய, **சீயகங்கன்** –சீயகங்கனென்னும் இயற்பெயரையுடைய அரசன், **மொழிந்தனன் ஆக** – சொல்ல, **பொன் மதில் சனகை** – பொன்மயமான மதில் சூழ்ந்த சனகாபுரத்தில் இருக்கின்ற, **சன்மதி முனி அருள்** – சந்மதி யென்னும் முனிவன் பெற்ற, **பன் அருஞ் சிறப்பின்** – சொல்லுதற்கு அரிய மேன்மையையும், **பவணந்தி என்னும் நாமத்து** – பவணந்தி யென்னும் இயற்பெயரையு முடைய, **இருந்தவத்தோன்** – பெரிய தவத்தையுடைய முனிவன், **முன்னோர் நூலின் வழியே** – (தொல்காப்பியர் முதலிய) முன்னையோர் செய்த இலக்கண நூலின் வழியாக, **நன்னூல் பெயரின்** வகுத்தனன் – நன்னூ லென்னும் பெயரினால் (இந்நூலைச்) செய்தான்; **ஏ–று.** ஏகாரம் – ஈற்றசை, சீயகங்கன் – சிங்கம் போன்ற கங்க னென்பவன்.

**ஸந்மதி** என்ற வடமொழிப் பெயர் நல்லறிவுடையவ னென்று பொருள்படும். 'அமர் ஆபரணன்' என்பதற்கு, போரில் தன்உடம்பின்மேற் படும் பெரும்புண்களையே ஆபரணமாக வுடையவ னென வுரைத்தலு மொன்று; அமர் – ஆகுபெயர்.

இதனுள் 'பவணந்தி' எனவே, **நூல்செய்தோன்பெயரும்;** 'முன்னோர் நூலின்வழி' எனவே, **நூல்வந்த வழியும்,** 'நான்கெல்லை' எனவே நூல்வழங்கும் எல்லையும், **'நன்னூல்'** எனவே நூலின்பெயரும்[2] **'தொகைவகை விரியின்'** எனவே, **நூல்யாப்பும், 'அரும்பொரு ளைந்தையும் யாவரு முண[3]'** எனவே, நூலிற் சொல்லப்பட்ட **பொருளும்;** அவற்றை யாராய்வோர் இந்நூல் கேட்டற்கு உரியாரென்னும் **கேட்போரும்;** அவர் அப் பொருளைந்தையும் அறிந்து சொற்களின் வழுவை ஒழித்தலாலே மொழித்திறத்தின் முட்டறுத்த லென்னும் **பயனும்;** 'சீயகங்கன் மொழிந்தனனாக வகுத்தனன்' எனவே, அவ்வரசன் காலத்தில் இயற்றப்பட்டு அவனது சபையிலே அரங்கேற்றப்பட்டதெனச் செய்த காலமும், அரங்கேறிய இடமும்; சீயகங்கன் சொன்னதனாலும் யாவரிடத்தும் உண்டாகிய இரக்கத்தினாலும் இயற்றினமையாற் **காரணமும்;** ஆகிய பதினொன்றும் பெறப்பட்டன; இனி, **'யாவரு முணர'** எனவே, நிகண்டு கற்று இலக்கியப் பயிற்சி செய்தபின்பு இந்நூல் கேட்கத்தக்கது என்னும் **யாப்பும்,** 'சீயகங்கன் தருகென மொழிந்தனன்' எனவே **கேட்போனும்,** 'மாண் பொருள் முழுவதும்' எனவே, பயனும்; பெறப்பட்டன வென்பாரு முளர்.

இப்பாயிரம், இவ்வொரு நூலுக்கே உரியதாதலால், சிறப்புப் பாயிரமாம்.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொழிப்புரை.–** பரந்த இடத்தையுடைய உலகத்திலே நிறைந்த இருள்கெட விளங்குங் கிரணத்தை விரித்து (க்கண்களுக்குத் தெரியத் தக்க உருவங்கள்) எல்லாவற்றையுங் காட்டுகின்ற சூரியனைப்போல (உலகங்களுக் கெல்லாம்) தான் ஒரு முதலாகிப் பிறப்பும் இறப்பும் உவமானமும் அளவும் விரும்பும் வெறுப்பும் (ஆகிய இவைகளில் சுபாவமாகவே) நீங்கி நிற்கையினாலே தலைவனாகிய ஞானமே திருமேனியாக வுடையவன், தமனது மலர்ந்த குணமாகிய அருளினாலே, (உயிர்களின்) மனத்திருளாகிய அஞ்ஞானம் கெடச் சிறந்த (அறம் பொருள் இன்பம் வீடு என்கிற) நான்கு பொருளையும் ஆசையுடன் அருளிச் செய்த பதினெட்டு நிலத்து மொழிகளுள்ளும் கிழக்கே கடலும் தெற்கே கன்னியாகுமரியும் மேற்கே குடக நாடும் வடக்கே திருவேங்கடமும் ஆகிய நான்கு

எல்லையினையுடைய நிலத்துமொழியாகிய (இயல் இசை நாடகம் எனப் பெயர் பெற்ற) பெரிய தமிழென்னுங் கடலுள் (அவ்வறமுதலாகிய நான்கு பொருளையும் அறிதற்குக் காரணமாகி) அருமையாகிய (இயற்றமிழ் என்னும் இலக்கத்தின் கூறான எழுத்துச் சொல் பொருள் யாப்பு அணி என்னும்) ஐந்து பொருளையும் (இலக்கியப் பழக்கத்தில் வல்லவர்மாத்திர மல்லாமல்) எளிய வரு மறிய, தொகுத்தும் வகுத்தும் விரித்தும் (செய்யப்படும் யாப்பினாலே) பாடித்தருகவென, பகைவரது பகைமை கெட அவரை அழித்துப் பெரிய பூமி முழுவதையும் தன்னுடையதாகப் பற்றிக்கொண்டு, தன் மதயானைகளை எட்டுத்திக்கிலும் (திக்கியானைகளைப் போல) நிறுத்திய (தன்னைப் பற்றி மாத்திரமல்லாமல் தன்னுடைய தகப்பன் பாட்டன் முதலானவரைப்பற்றி வரும்) வெற்றி மிகுந்த கீர்த்தியையும் பெருமை பொருந்திய வீரக்கழலையும் வெள்ளைக் குடையையும் மேகம் போல (ப்பிரதியுபகாரத்தை நினையாது) கொடுக்குங் கையினையும் கோணாத செங்கோலையும் (உடைய) சிங்கம்போன்ற கங்கன், அரிய நூல்களை (ஆராய்தலே பொழுதுபோக்கும்) விளையாட்டாகவுடையவன், (தன்மேலே பெரிய காயம்படப்) போர் செய்தலையே ஆபரணமாக வுடையவன் சொன்னானாக (கேட்டுக் கொள்ள என்றபடி), முன்னோர் இலக்கண நூலின்வழியே நன்னூல் என்னும் பெயரினாற் செய்தனன்; பொன்மதில் சூழ்ந்த சனகாபுரத்துள்ளிருக்கும் சன்மதி முனிபன் பெற்ற சொல்லுதற்கரிய ஞான ஒழுக்கச் சிறப்பினையும் பவணந்தி என்னும் பெயரினையும் உடைய பெரிய தவத்தினை யுடையோன்; **என்றவாறு.**

**இதன் கருத்து.–** சூரியன் உலகின்கண் நிறைந்த புறவிருளை நீக்கிப் பொருள்களை விளங்குவதுபோல, கடவுள் தனது அருளினாலே ஆன்மாக்களின் மன இருளாகிய அஞ்ஞானங் கெடும்படி, அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு பொருளையும் விளக்கும் பதினெண் பாஷைகளுள்ளும் கிழக்கே கடலும், தெற்கே கன்னியாகுமரியும், மேற்கே குடகநாடும், வடக்கே திருவேங்கடமும் எல்லையாகவுடைய நிலத்தில் வழங்குவதாகிய தமிழ்ப்பாஷையுள் எழுத்து சொல் பொருள் யாப்பு அணி என்னும் ஐந்து பொருளையும் இலக்கியப் பழக்கத்தில் வல்லவரல்லாத ஏனையோரும் எளிதலறியும்படி தொகுத்தும் வகுத்தும் விரித்தும் செய்யப்படும் யாப்பினாலே பாடித் தருக என்று சீயகங்கனென்னும் அரசன் கேட்கப் பவணந்தி முனிவன் முன்னோர் இலக்கண நூலின்வழியே நன்னூல் என்னும் பெயர்னால் செய்து தந்தனன் என்பதாம்.

பவணந்தி எனவே நூல் செய்தோன் பெயரும், முன்னோர் நூலின் வழி எனவே நூல் வந்த வழியும், நான்கு எல்லை எனவே நூல் வழங்கு நிலமும், நன்னூல் எனவே நூலினது பெயரும், தொகை வகை விரி எனவே நூல்யாப்பும், அரும்பொருளைந்தும் எனவே நூலிற் சொல்லப்பட்ட

பொருளும், யாவருமுணர எனவே நிகண்டு கற்று இலக்கிய ஆராய்ச்சி செய்த பின்பு இந்த நூல் கேட்கத்தகும் என்னும் இயையும், அவை ஆராய்ந்தோர் இந்நூல் கேட்டற் குரியார் என்னும் அதிகாரிகளும், அவர் அப்பொருள் ஐந்தையும் அறிந்து சொற்களின் முட்டுப்பாட்டை நீக்குதலாலே மொழித்திறத்தின் முட்டறுத்தல் என்னும் பயனும், சீயகங்கன் மொழிந்தனனாக நன்னூற் பெயரின் வகுத்தனன் எனவே, அவன் காலத்திலே பாடப்பட்டு அவனது சபையிலே அரங்கேற்றியது எனச் செய்த காலமும், அரங்கேற்றிய இடமும், சீயகங்கன் சொன்னதினாலும்* யாவரிடத்தும் உண்டாகிய இரக்கத்தினாலும் வகுத்தமையால் காரணமும் பெறப்பட்டன.

சீயகங்கன் என்பதற்குச் சீயகங்கன் என்னும் இயற்பெயருடையான் எனப் பொருள் கோடலும் ஒன்று. 'அமர் ஆபரணன்' என்பதற்குப் போரில் தன் உடம்பின் மேற்படும் பெரும் புண்களையே ஆபரணமாகவுடையவன் என வுரைத்தலும் ஒன்று. அமர்– ஆகுபெயர்.

இப்பாயிரம், இந்நூலுக்கே உரிய தாதலால், சிறப்புப்பாயிரம்.

## கா. நமச்சிவாய முதலியார்

**மலர்தலை உலகில்** – பரந்த இடத்தையுடைய உலகத்தில்,**மல்கு இருள் அகல** – நிறைந்த இருள் நீங்க,**இலகு ஒளி** பரப்பி – விளங்குங் கிரணத்தை விரித்து, **யாவையும் விளங்கும்** – எல்லா வற்றையும் விளங்கச் செய்கின்ற, **பரிதியின்** – சூரியனைப் போல,**ஒரு தான் ஆகி** – (உலகங்களுக்கு எல்லாம்) தானொரு முதலாகி,**முதல் ஈறு ஒப்பு அளவு ஆசை முனிவு இகந்து உயர்ந்த** – பிறப்பும் இறப்பும் உவமையும் அளவும் விருப்பும் வெறுப்பும் ஆகிய இவைகளில் இயல்பாக நீங்கி ஞானகுணங்களால் உயர்ந்த,**அற்புதமூர்த்தி** – ஆச்சரியமூர்த்தியாகிய இறைவன், **தன் அலர் தரு தன்மையின்** – தனது மலர்ந்த குணமாகிய அருளினாலே, **மனம் இருள் இரிய** – (உயிர்களின்) மனத்து இருள் கெட,**மான் பொருள் முழுவதும்** – சிறந்த அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு பொருளையும்,**முனிவு அற அருளிய** – (ஆசையுடன்) வெறுப்பின்றி அருளிச் செய்த,**மூவறு மொழியுளும்** – பதினெட்டு நிலத்து மொழிகளுள்ளும், **குணகடல் குமரி குடகம் வேங்கடம் என்னும் நான்கு எல்லையின்** – கிழக்கே கடலும் தெற்கே கன்னியாகுமரியும் மேற்கே குடகநாடும் வடக்கே திரு வேங்கடமும் ஆகிய நான் கெல்லையினையுடைய நிலத்தில் வழங்கும்,**இருந் தமிழ் கடலுள்** – (இயல் இசை நாடகம் எனப் பெயர் பெற்ற) பெரிய தமிழ்மொழி என்னும்

* பவானந்தம் பிள்ளை நன்னூற் சிறப்புப்பாயிரத்திற்கு உரை கூறவில்லை.

கடலுள், **அரும்பொருள் ஐந்தையும்** – அருமையாகிய எழுத்து சொல் பொருள் யாப்பு அணி என்னும் ஐந்து பொருளையும், **யாவரும் உணர** – எல்லாரும் உணரும் படி, **தொகை வகை விரியின் தருக என** – தொகுத்தும் வகுத்தும் விரித்தும் செய்யப்படும் யாப்பினாலே செய்து தருகவென, **துன்னார் இகல் அற நூறி** – பகை வரது வலிமை கெட அவரை யழித்து, **இரு நிலம் முழுவதும் தனது என கோலி** – பெரிய நிலப்பரப்பு முழுவதையுந் தன்னுடையதாகப் பற்றிக்கொண்டு, **தன் மதம் வாரணம் திசைதொறும் நிறுவிய** – தனது மத யானைகளை எட்டுத் திக்கிலும் எல்லைக் குறியாக நிறுத்திய, **திறல் உறு தொல் சீர்** – வெற்றி மிக்க பழமையாகிய கீர்த்தியையும், **கருங்கழல்** – பெருமை பொருந்திய வீரக் கழலையும், **வெள் குடை** – வெண் கொற்றக் குடையையும், **கார் நிகர் வண் கை** – மேகம் போன்று கொடுக்குங் கையினை யும், **திருந்திய செங்கோல்** – நடுநிலை திறம்பாத செங்கோலையும் உடைய, **சீய கங்கன்** – சீய கங்கன் என்னும் இயற்பெயரையுடையவனும், **அருங்கலை வினோதன்** – அரிய நூல்களை ஆராய்தலே தனக்கு இன்பமாக வுடையவனும், **அமர் ஆபரணன்** – போர் செய்தலையே ஆபரணமாக வுடையவனும் ஆகிய அரசன், **மொழிந்தனன் ஆக** – சொன்னானாக, **பொன் மதில் சனகை** – பொன் மதில் சூழ்ந்த சனகா புரத்தி லிருக்கும், **சன்மதி முனி அருள்** – சன்மதி முனிவன் பெற்ற, **பன் அருஞ் சிறப்பின் பவணந்தி என்னும் நாமத்து** – சொல்லுதற் கரிய பெருந் தன்மையையும், பவணந்தி யென்னும் பெயரினையுமுடைய, **இருந்தவத்தோன்** – பெரிய தவத்தினை யுடையோன், **முன்னோர் நூலின் வழியே**–முன்னோர் இயற்றிய இலக்கணத்தின் வழியே, **நன்னூல் பெயரின் வகுத்தனன்** – நன்னூல் என்னும் பெயரினாற் செய்தனன்.

சீயகங்கன், தமிழ்க்கடலுள் அரும் பொருளைந்தையும் தருக என மொழிந்தனனாக, பவணந்தி நன்னூற் பெயரின் வகுத்தனன் எனக் கூட்டுக.

| | |
|---|---|
| 1. ஆக்கியோன் பெயர் | பவணந்தி |
| 2 .வழி | முன்னோர் நூலின் வழி |
| 3. எல்லை | குணகடல் குமரி குடகம் வேங்கடம் |
| 4. நூற்பெயர் | நன்னூல் |
| 5. யாப்பு | தொகை, வகை, விரி |
| 6. நுதலியபொருள் | அரும்பொருள் ஐந்து |
| 7. கேட்போர் | சீயகங்கன் முதலாயினோர் |
| 8. பயன் | யாவரும் உணர்தல் |
| 9. காலம் | சீயகங்கன் காலம் |
| 10. களன் | சீயகங்கன் அவைக்களம் |
| 11. காரணம் | சீயகங்கன் கேட்டுக் கொண்டமை |

என, மேலைச் செய்யுளில் சிறப்புப் பாயிரத்திற்குரிய பதினொரு பொருள்களும் அமைந்துள்ளமை காண்க.

## மோசகு பொன்னையா

ஞாயிறு இவ்வுலகின் நிறை இருள் அகலுமாறு ஒளி பரப்பி அனைத்துப் பொருளையும் விளக்கஞ் செய்கின்றது. அவ்வாறே, தோற்றம், இறுதி, உண்மை, அளவு, விருப்பு, வெறுப்பு இல்லா ஞானத்திருவுருவாம் கடவுள், தமது அருளால், அறியாமை என்னும் இருள் நீங்கவும் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் பொருள் விளங்கவும் பதினெண் மொழிகளைப் படைத்தார். அவற்றுள் வடபால் வேங்கடத்தையும், தென்பால் குமரியையும் மேற்கிலும் கிழக்கிலும் கடலையும் எல்லையாகக் கொண்ட நிலத்தின்கண் நிலவுவது கடலெனத் தகும் தமிழ் மொழி. அதன்கண் அமைந்து கிடப்பவை எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐம்பொருளுமாம், அவற்றைத் தொகுத்தும், வகுத்தும், விரித்தும் யாத்துத் தருமாறு, பகையெல்லாம் வென்றழித்து வெற்றி, புகழ், நீதி, கொடை, செங்கோன்மை, கலையுணர்வு, வீரம் இவை செறியப் பெற்று ஆண்ட சீயகங்கள் என்னும் அரசன், சனகையில் வாழ்ந்த சன்மதி முனிவர் மகனாரும், பல அருஞ் சிறப்புக்களுக்கும் உரியாருமான பவணந்தி முனிவரை வேண்டினான். அதனால், அவர், முன்னோர் நூலின் வழிநூலாக நன்னூல் என்னும் பெயரால் இந்நூலை இயற்றினார், **என்றவாறு.**

இச் சிறப்புப் பாயிரத்தில், பவணந்தி என ஆக்கியோன் பெயரும், முன்னோர் நூலின் வழியே என வழியும், நான்கெல்லையின் என எல்லையும், நன்னூல் என நூற்பெயரும், தொகை வகை விரி என யாப்பும், அரும்பொருளைந்தும் என நுதலிய பொருளும், தனக்கென . . . சீயகங்கன் மொழிந்தனன் எனக் கேட்போரும், மாண்பொருள் முழுவதும் எனப் பயனும், சீயகங்கன் 'மொழிந்தனனாக வகுத்தனன்' என்றதால் அவன் காலத்து முடிக்கப்பட்டு அவன் அவையில், அரங்கேற்றப்பட்டது எனக் கொள்ளக் கிடத்தலின் காலமும் களனும், யாவரும் உணர எனக் காரணமும் உணர்த்தப்பட்டுள்ளமை காண்க.

அரும்பொருள் ஐந்தையும் யாவரும் உணரத் தொகை வகை விரியில் தருக என வேண்டியாற்கு, இவ்வாசிரியர் குறைபடாது அவ்வைம் பொருளும் விளங்க நூல் செய்து முடித்தே அரங்கேற்றினார் எனக் கோடலே ஏற்புடையதாம் ஆதலின், எழுத்தும் சொல்லுமே அன்றி, இவரால் இயற்றப்பட்ட பொருளும் யாப்பும் அணியும் நமக்குக் கிடையாதொழிந்தன போலும். இந் நூற்கே உரியதிது வாகலின், இது சிறப்புப் பாயிராமாயிற்று.

# பாயிரம்

## பாயிரத்தின் பெயர்கள்

1. முகவுரை பதிக மணிந்துரை நூன்முகம்
புறவுரை தந்துரை புனைந்துரை பாயிரம்.

முகவுரை பதிகம் அணிந்துரை நூன்முகம்
புறவுரை தந்துரை புனைந்துரை பாயிரம்.

mukavurai patikam aṇinturai nūṉmukam
puṟavurai tanturai puṉainturai pāyiram.

என்றி பவர் -ஆங்கில மொழிபெயர்ப்பு

## GENERAL INTRODUCTION

### Names of a Preface

An introduction (which contains preliminary matter or the sketch of a work) is synonymous with preface, advertisement, preamble, prelude, proem, prologue and prolegomenon.

**ஒப்புமைப் பகுதி**

புறவுரை முகவுரை புனைந்துரை தந்துரை
பதிகம் நூல்முகம் அணிந்துரை பாயிரம். (மாற. அலங்.: 1)

**மயிலை நாதர்**

இ—ள்.: இவை 'பாயிரத்திற்குக் காரணப்பெயர்களாம், எ—று.

**சங்கர நமச்சிவாயர்**

என்பது சூத்திரம். என்னுதலிற்றோவெனின், பாயிரத்திற்கு வருஉம் காரணக்குறிகள் உணர்த்துதல் நுதலிற்று.

---

பாட வேறுபாடு ;—

1. பாயிரத்திற்குக் காரணப் பெயராம்.

**இ—ள்.:—** பாயிரத்தின் இலக்கணங்களை முன் உணர்ந்தல்லது நூல்களைச் செய்தலும் அவற்றை ஈதலும் ஏற்றலும் முடியாமை கருதி முன்னுரைத்தலின் **முகவுரை** என்றும்,

> **"பதிகக் கிளவி பல்வகைப் பொருளைத் தொகுதியாகச்**
> **சொல்லுதல் தானே"**

என்பவாகலின், மேல்வகுக்கும் ஐந்து பொதுவும் பதினொரு சிறப்புமாகிய பல்வகைப் பொருளையும் தொகுத்துச் சொல்லுதலின் **பதிகம்** என்றும், நூலினது பெருமை முதலிய விளங்க அணிந்துரைத்தலின் **அணிந்துரை** என்றும், முகவுரை என்றது போல **நூன்முகம்** என்றும், நூனுதலிய பொருளல்லன வற்றை உரைத்தலின் **புறவுரை** என்றும், நூற்குள்ள நுதலிய பொருளல்லனவற்றை அதற்குத் தந்துரைத்தலின் **தந்துரை** என்றும், அணிந்துரை என்றாற் போலப் **புனைந்துரை** என்றும் பாயிரத்துக்குப் பெயராம், **எ—று.**

> பாயிரம் என்பது வரலாறு. பாயிரம் கூறப் புகுந்தார் நிகண்டு போல அதன் பெயர் விகற்பங்களைக் கூறியது என்னை யெனின்: இப்பாயிரம், பதிகமாகிய புறவுரையாய்த் தந்துரைக்கப் படுவதேனும், நூற்கு இன்றியமையாத அணியாய் முன் னுரைக்கப்படுவது என்பது இக்காரணக் குறிகளான் விளங்குதலின் என்க.

## கூழங்கைத் தம்பிரான்

**இ—ள்.:— முகவுரை —** முகமாய் இருத்தலான் முகவுரை என்றும், **பதிகம் —** பல வகைப் பொருளையும் கூட்டிச் சொல்லுதலாற் பதிகம் என்றும், **அணிந்துரை —** நூற்கு இன்றி யமையாத அலங்காரமாய் இருந்தலின் அணிந்துரை என்றும், **நூன்முகம் —** நூல் இலக்கணத்தைத் தோற்றுவித்தலால் நூன் முகம் என்றும், **புறவுரை —** நூற்குப் புறமாகிய இலக்கணத்தைத் தந்துரைத்தலாற் புறவுரை என்றும், **தந்துரை —**நூற்குப் புறமாகிய இலக்கணத்தைத் தந்துரைத்தலால் தந்துரை என்றும், நூற்கு முகமாய் இருத்தலின் நூலுரை என்றுமாம், **புனைந்துரை —** நூற்களாகியதும் ஆபரணமுமாய் இருத்தலாற் புனைந்துரை என்றுமாகி, **பாயிரம் —** இவை யனைத்தும் பாயிரத்துக்குள் காரணப்பெயர், **எ—று.**

## விசாகப் பெருமாளையர்

**இது,** பாயிரத்திற்கு வருங் காரணப் பெயர்களைச் சொல்லுகின்றது.

**இ—ள்.:— முகவுரை —** பாயிரத்தி னிலக்கணங்களை முன்னேயறிய வேண்டி நூலிற்கு முன் சொல்லப்படுதலினாலே முகவுரை யென்றும், **பதிகம் —** ஐந்து பொதுவும் பதினொரு சிறப்பும் ஆகிய பலவகைப் பொருள்களையுந் தொகுத்துச் சொல்லுதலினாலே பதிகமென்றும், **அணிந்துரை —** நூலினது பெருமை முதலானவைகள் விளங்க அலங்கரித்துச் சொல்லுகையினாலே

அணிந்துரையென்றும், **நூன்முகம்** – முகவுரை யென்றது போல நூன்முக மென்றும், **புறவுரை** – நூல்சொல்லிய பொருள் அல்லாதவைகளைச் சொல்லுதலினாலே புறவுரை யென்றும், **தந்துரை** – நூலிலே சொல்லப்பட்ட பொருளல்லாதவைகளை அதற்குத் தந்து சொல்லுகையினாலே தந்துரை யென்றும், **புனைந்துரை** – அணிந்துரை யென்றது போலப் புனைந்துரை யென்றும், **பாயிரம்** – பாயிரத்திற்குப் பெயர்களாம், **எ–று.**

பாயிரமென்பது வரலாறு.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** பாயிரத்துக்கு வந்த பெயர்க் காரணங்களை யுணர்த்துகின்றது.

**இ–ள்.:–** (பாயிரத்தினிலக்கணங்களை முன்னுணர்ந்தா லல்லது நூல்களைச் செய்தலும் ஈதலும் ஏற்றலு முடியாதென் றெண்ணி) **முன்னுரைக்கப் படுதலால்** – முகவுரை யென்றும், **'பதிகக்கிளவி பல் வகைப்பொருளைத் – தொகுதியாகச் சொல்லுதறானே'** என்பர்; ஆதலால், ஐந்து பொதுவும் பதினொரு சிறப்புமாகிய பலவகைப் பொருளையுந் தொகுத்துச் சொல்லுதலால் பதிகமென்றும், **அணிந்துரைத்தலால்** அணிந்துரை யென்றும், (அணிந்துரைத்தல் புனைந்துரைத்த லென்பன அலங்கரித்துச் சொல்லுதல்) நூலுக்கு **முகம் போலச் சிறந்திருத்தலால்** நூன்முகமென்றும், நூல்குறித்த பொருளல் லனவற்றை அதற்குத் **தந்துரைத்தலால்** தந்துரை யென்றும், **புனைந்துரைத்தலால்** புனைந்துரை யென்றும், **பாயிரம்** – பாயிரத்திற்குப் பெயர்களாம், **எ–று.**

பாயிரமென்பது வரலாறு. பாயிரஞ் சொல்ல வந்தவர் நிகண்டு போல அதன் பெயர் விகற்பஞ் சொல்லிய தென்னெனின், அப்பெயர் விகற்பங்களால் அப் பாயிரத்திற்கு இலக்கணந் தோன்றிக் கிடத்தலா லென்க. எவ்வாறெனின், பாயிரந் தொகுத்துச் சொல்லப் படுவதாய்ப், புறவுரையாய்த், தந்துரைக்கப்படுவதாய், நூலுக்கு இல்லாமற்கூடாத அணியாய், முன்னுரைக்கப் படுவதென்பது இக் காரணக்குறிகளால் விளங்கலி னென்க. முகவுரை பாயிரம், பதிகம் பாயிரமெனத் தனித்தனி பெயர் முடிபாக்கினும்; முகவுரை, பதிகம், அணிந்துரை யென அடுக்கிப் பாயிரமென ஒரு பெயர்ப் பயனிலை கொண்டதெனினும் அமையும்.

## கா.கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**அதாவது வரலாறு; இதனை உபோத்காத மென்பர் வடநூலார்.**

பாயிரத்தின் இலக்கணங்களை முன்னே அறிந்தாலன்றி நூலைச் செய்தலும், ஈதலும், ஏற்றலும் கூடாமையின் அப் பாயிரத்தின் இலக்கணங் கூறத் தொடங்கி முதற்கண் **பாயிரத்தின் பெயர்கள்** கூறுகின்றார்.

**உரை :– முகவுரை........... பாயிரம்** – முகவுரை பதிகம் அணிந்துரை நூன்முகம் புறவுரை தந்துரை புனைந்துரை என்னும் இவை பாயிரத்தின் பெயர்களாம்.

> **குறிப்பு:–** நூலின் முகத்துச் சொல்லப்படுதலால் முகவுரை யெனவும், நூலின் வரலாறு முதல் கோடற் கூற்று ஈறாகிய ஐந்து பொதுவும், ஆக்கியோன் பெயர்தொடங்கிக், காரண மீறாகக் கூறப்படும் பதினொரு சிறப்பும் ஆகிய பலவகைப் பொருள்களையும் தொகுத்துரைத்தலால் பதிகம் எனவும், நூலின் சிறப்பு முதலியவற்றை விளங்க அலங்கரித்துக் கூறலால் அணிந்துரை புனைந்துரை எனவும், நூலுக்கு முகம்போலச் சிறந்து நிற்றலால் நூன்முகம் எனவும், நூலின் புறத்திலே உரைத்தலால் புறவுரை எனவும், நூல்கூறிய பொருளல்லாதவற்றைத் தந்துரைத்தலால் தந்துரை எனவும் பெயர்கள் வந்தன என்றறிக.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: முகவுரை.....பாயிரம்** – முகவுரை, பதிகம், அணிந்துரை, நூன்முகம், புறவுரை, தந்துரை, புனைந்துரை என்பன பாயிரத்திற்குப் பெயர்களாம், **எ – று.**

> **பாயிரம் வரலாறு:–** முகவுரை நூற்கு முன் சொல்லப்படுவது; நூன்முகம் என்பதும் அது; பதிகம் ஐந்து பொதுவும் பதினொரு சிறப்புமாகிய பலவகைப் பொருளையுந் தொகுத்துச் சொல்வது. அணிந்துரை நூலினது பெருமை முதலியன விளங்க அலங்கரித்துச் சொல்வது; புனைந்துரை யென்பதும் அது. புறவுரை நூல் சொல்லிய பொருளல்லா தவைகளைச் சொல்வது. தந்துரை நூலிலே சொல்லப்பட்ட பொருளல்லாதவைகளை அதற்குத் தந்து சொல்வது.

## வ. குமாரசாமிப் புலவர்

**இதன் பொருள். முகவுரை...................... பாயிரம்** – முகவுரை, பதிகம், அணிந்துரை, நூன்முகம், புறவுரை, தந்துரை, புனைந்துரை என்பன பாயிரத்திற்குப் பெயர்களாம், **எ–று.**

> **பாயிரம்** வரலாறு. முகவுரை நூற்குமுன் சொல்லப்படுவது. நூன்முகம் என்பதும் அது. **பதிகம்** (ஐந்துபொதுவும் பதினொரு சிறப்புமாகிய பலவகைப் பொருளையுந்) தொகுத்துச் சொல்வது. **அணிந்துரை** – (நூலினது பெருமை முதலியன விளங்க) அலங்கரித்துச் சொல்வது;

புனைந்துரையென்பதும் அது. புறவுரை நூல் சொல்லிய பொருளல்லாதவைகளைச் சொல்வது. தந்துரை நூலிலே சொல்லப்பட்ட பொருளல்லாதவைகளை அதற்குத் தந்து சொல்வது.

புறவுரை – நூலின் புறத்தே சேர்க்கப்படுவது. தந்துரை – நூல் கருதிய பொருளல்லாதவைகளை அதற்குத்தந்து சொல்வது. தந்து என்பது நூலாதலால், தந்துரை என்பதற்கு நூலைக் குறித்துச் சொல்லுமுரை என்றுரைப்பினுமாம்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:– முகவுரை. . . பாயிரம்** – முகவுரை பதிகம் அணிந்துரை நூன்முகம் புறவுரை தந்துரை புனைந்துரை என்பன பாயிரத்தின் பெயர்களாம்; **எ – று.**

பாயிரம் – வரலாறு; இது, வடமொழியில் உபோத்காத மெனப்படும். முகவுரை யென்பதற்கு – நூலுக்கு முன் சொல்லப்படுவதென்றும், பதிக மென்பதற்கு – ஐந்து பொதுவும் பதினொரு சிறப்புமாகிய பலவகைப் பொருள் களையும் தொகுத்துச் சொல்வதென்றும், அணிந்துரை புனைந்துரை யென்பவற்றிற்கு – நூலின் பெருமை முதலியவை விளங்க அலங்கரித்துச் சொல்வதென்றும்,

நூன்முக மென்பதற்கு – நூலுக்கு முகம் போல முற்பட்டிருப்ப தென்றும், புறவுரை யென்பதற்கு – நூலிற் சொல்லிய பொருளல்லாதவைகளை நூலின் புறத்திலே சொல்வதென்றும், தந்துரை யென்பதற்கு – நூலிற் சொல்லிய பொருளல்லாதவைகளைத் தந்து சொல்வ தென்றும் பொருள்.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:** முகவுரை ... பாயிரம்–முகவுரை, பதிகம், அணிந்துரை, நூன்முகம், புறவுரை, தந்துரை, புனைந்துரை எனப்ன பாயிரத்திற்குப் பெயர்களாம். எ–று.

பாயிரம் வரலாறு. முகவுரை நூற்கு முன் சொல்லப்படுவது; நூன்முகம் என்பதும் அது. பதிகம் ஐந்து பொதுவும் பதினொரு சிறப்புமாகிய பலவகைப் பொருளையுந் தொகுத்துச் சொல்வது. அணிந்துரை நூலினது பெருமை முதலியன விளங்க அலங்கரித்துச் சொல்வது; புனைந்துரையென்பதும் அது. புறவுரை நூல் சொல்லிய பொருளல்லாதவைகளைச் சொல்வது. தந்துரை நூலிலே சொல்லப்பட்ட பொருளல்லாதவைகளை அதற்குத் தந்து சொல்வது.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ—ரை.:** (பாயிரத்தின் இலக்கணங்களை முன்னே அறிய வேண்டி நூலிற்கு முன் சொல்லப்படுதலினாலே) முகவுரை என்றும், (ஐந்து பொதுவும் பதினொரு சிறப்பும் ஆகிய பலவகைப் பொருள்களையும் தொகுத்துச் சொல்வதினாலே) பதிகம் என்றும், (நூலினது பெருமை முதலானவை விளங்க அலங்கரித்துச் சொல்லுகையினாலே) அணிந்துரை என்றும், (முகவுரை என்றதுபோல) நூன்முகம் என்றும், (நூல் சொல்லிய பொருளல்லாதவைகளைச் சொல்லுதலினாலே) புறவுரை என்றும், (நூலிலே சொல்லப்பட்ட பொருளல்லாதவைகளை அதற்குத் தந்து சொல்லுகையினாலே) தந்துரை என்றும், (அறிந்துரை என்றது போலப்) புனைந்துரை என்றும் பாயிரத்திற்குப் பெயர்களாம். **எ—று.**

## கா. நமச்சிவாய முதலியார்

முகவுரை, பதிகம், அணிந்துரை, நூன்முகம், புறவுரை, தந்துரை, புனைந்துரை இவை ஏழும் பாயிரத்தின் பெயர்களாம்.

> **முகவுரை** – நூலுக்கு முன்னே சொல்லப்படுவது. **பதிகம்** – நூலுக்கு அங்கமாக நிற்பது. இது ப்ரதீகம் என்னும் வடசொல்லின் திரிபு; ப்ரதீகம் என்பதற்கு அங்கம்; உறுப்பு என்று பொருள்; நூலுக்கு இன்றியமையாத தலையங்கமாக நிற்பது. **அணிந்துரை** – நூலின் சிறப்பினை அழகுபெற உரைப்பது. **நூன்முகம்** – நூலுக்கு முகம்போல் நிற்பது. **புறவுரை** – நூலிற் சொல்லாத பொருள்களை நூலுக்குப் புறத்தே நின்று சொல்வது; நூலுக்குப் புறத்தே உரைக்கப் படுவது என்பதூஉமாம். **தந்துரை** – நூலிற் சொல்லப்படாதவை களைத் தனியே தந்து சொல்வது. **புனைந்துரை** – நூலின் சிறப்பு முதலியவற்றை அழகுபெற அமைத்து உரைப்பது. **பாயிரம்** – பரந்து நிற்பது, நூலினுட் கூறப்படும் பரந்த பொருளைத் தன்னிடத்தே அடக்கி நிற்பது என்பதாம்.
>
> பாயிரம் என்பதற்கு வரலாறு என்று பொருள் கூறுவர்.
>
> இக்காலத்தே பாயிரம் என்பதற்கு **உபோத்காதம், உபக்கிரமணிகை** என்னும் வடசொற்களையும் வழங்குவர்.

## மோசசு பொன்னையா

நூலுக்கு முன் சொல்லப்படும் நூன்முகமும், ஐந்து பொதுவும் பதினொரு சிறப்புமாகிப் பலவகைப் பொருள்களையும் தொகுத்துரைக்கும் பதிகமும்,

நூலினது பெருமை முதலியன விளங்குமாறு அணிபெறச் சொல்லும் அணிந்துரையும், நூல் சொல்லிய பொருளுக்குப் புறத்தவற்றைச் சொல்லும் புறவுரையும், நூல் குறித்த பொருள் அல்லவற்றைத் தந்துரைக்கும் தந்துரை யும், நூலினது பெருமை முதலியவற்றைப் புனைந்துரைக்கும் புனைந்துரையும் பாயிரம் எனப்படும், எ—று.

முகவுரை, பதிகம், அணிந்துரை, நூன்முகம், புறவுரை, தந்துரை, புனைந்துரை என்பன காரணக்குறிகள்.

(1)

# பாயிரத்தின் வகை

**2. பாயிரம் பொதுச்சிறப் பெனவிரு பாற்றே.**

பாயிரம் பொதுச் சிறப்பு என இரு பாற்றே.

pāyiram poṭus siṟappu eṉa iru pāṟṟē.

## *என்றி பவர் - ஆங்கில மொழிபெயர்ப்பு*

### Kinds of preface

An introduction (or preface) is of two kinds, General and Particular.

## ஒப்புமைப் பகுதி

**............ பதிகம் பொதுச்சிறப்பென் றிரண்டே (சுவாமி.:3:4)**

**பொதுச்சிறப்பு பெனவது புகலிரு வகைத்தே (மாற.அலங்.:3)**

**பாயிரம் பொதுச்சிறப் பெனவிரு பாற்றே (இல.விள.:889)**

## மயிலை நாதர்

இ—ள்.: மேற் சொன்ன பாயிரம் பொதுப்பாயிரமும் சிறப்புப் பாயிரமுமென இருவகைப்படும்,. எ—று.

அவற்றுள், பொதுப்பாயிரமாவது எல்லா நூன்முகத்தும் உரைக்கப் படுவதெனவும், சிறப்புப்பாயிரமாவது ஒரு நூன்முகத்து உரைக்கப்படுவ தெனவும் கொள்க.

## சங்கர நமச்சிவாயர்

**எ—னின்,** மேற் பாயிரம் என்றதனை வகுத்துஉணர் — ற்று.

**இ—ள்.:—** மேற்பாயிரம் என்றது பொதுப்பாயிரமும் சிறப்புப் பாயிரமும் என இருவகையினை யுடைத்து, எ—று.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** அப்பாயிரம் இத்துணைப் பகுதியாமெனக் கூறுகின்றது.

**இ—ள்.: பாயிரம்** — மேற்கூறிய பாயிரம், **பொதுச் சிறப்பென** — பொதுப் பாயிரமும் சிறப்புப் பாயிரமுமென, **இரு பாற்றே** — இரு வகைப்படும், எ—று.

> **அரும்பதவுரை :—** பொதுப் பாயிரமாவது எல்லா நூான் முகத்தும் உரைக்கப்படுவது, சிறப்புப் பாயிரமாவது ஒரு நூான் முகத்து உரைக்கப்படுமெனக் கொள்க.

## விசாகப் பெருமாளையர்

**இது,** முன் பாயிரமென்றதை வகுத்துச் சொல்லுகின்றது.

**இ—ள்.:— பாயிரம்** — பாயிரமானது, **பொது** — பொதுப் பாயிரமும், **சிறப்பு** — சிறப்புப் பாயிரமும், **என விரு பாற்று** — என விரண்டு பிரிவை யுடைத்தாகும், **எ — று.**

ஏகாரம் — ஈற்றசை.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** மேற் பாயிரமென்றதை வகுத்துணர்த்துகின்றது.

**இ—ள்.:— பாயிரம்** — மேலே பாயிரமென்று சொல்லப்பட்டது, **பொதுச் சிறப்பென விரு பாற்று** — பொதுப் பாயிரமுஞ் சிறப்புப் பாயிரமுமென இரண்டு வகையினை யுடையதாம், எ — று.

பாயிர மிருபாற்று என முடித்துக் கொள்க.

## கா.கோபாலாசாரி — தி.கோ.ரங்காசாரி

**பாயிரம்** — (மேற்கூறிய) பாயிரம், **பொது சிறப்பு என** — பொதுப் பாயிரமும் சிறப்புப் பாயிரமும் என்று, **இருபாற்று** — இரண்டு வகையை யுடையது.

> குறிப்பு :— ஒரு நூலுக்கே உரியதாதலன்றி எல்லா நூல்கட்கும் பொதுவாயிருத்தல் பற்றிப் பொது ப்பாயிரம் எனவும், ஒரு நூலுக்கே சிறப்பாய் அந் நூலின் முகத்துக் கூறப்படுதல் பற்றிச் சிறப்புப் பாயிரம் எனவும் கொள்க.

## ஆறுமுக நாவலர்

**இ – ள்.: பாயிரம் பொதுச் சிறப்பு என இருபாற்று** – பாயிர மானது பொதுப்பாயிரமுஞ் சிறப்புப்பாயிரமு மென இரு வகையினை யுடைத்து, **எ – று.**

ஏகாரம்–ஈற்றசை.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். பாயிரம் பொதுச் சிறப்பு என இருபாற்று** – பாயிரமானது பொதுப்பாயிரமுஞ் சிறப்புப்பாயிரமுமென இருவகையினை யுடைத்து. **எ–று.**

ஏகாரம் ஈற்றசை.

## கா.நமச்சிவாய முதலியார்

பாயிரம் – பாயிரமானது, பொது – பொதுப்பாயிரம், சிறப்பு – சிறப்புப் பாயிரம், என – என்று, இருபாற்று – இரண்டு பகுதியினை யுடையது.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: பாயிரம்** – (மேற்சொன்ன) பாயிரமானது, **பொது**– பொதுப் பாயிரமும், **சிறப்பு** – சிறப்புப் பாயிரமும், **என**–என்று, **இருபாற்று** – இரண்டு வகையை யுடையது; **எ – று.** ஏ – ஈற்றசை.

> தன்னால் உரைக்கப்படும் ஒரு நூலுக்கு மாத்திரமே உரியதன்றி எல்லா நூன்முகத்தும் உரைக்கத் தக்கது பொதுப்பாயிர மெனவும், தன்னால் உரைக்கப்படும் ஒரு நூலுக்கே இன்றியமையாமல் உரியதாய் அந் நூன்முகத்திலே உரைக்கப்படுவது சிறப்புப்பாயிர மெனவும் அறிக.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:** பாயிரம் பொதுச் சிறப்பு என இருபாற்று–(மேலே கூறப்பட்ட) பாயிரமானது பொதுப்பாயிரமுஞ் சிறப்புப் பாயிரமு மென இருவகையினை யுடையது. **எ–று.**

ஏகாரம் ஈற்றசை.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ–ரை.:** மேற்சொன்ன பாயிரமானது பொதுப் பாயிரமும் சிறப்புப் பாயிரமும் என இரண்டு பிரிவை உடைத்தாகும். **எ–று.** ஏ–ஈற்றசை.

**மோசசு பொன்னையா**

பாயிரமானது பொதுப்பாயிரம், சிறப்புப்பாயிரம் என இரு வகைப்படும், எ—று. ஏகாரம் ஈற்றிசை. (2)

## பொதுப் பாயிரம்

3. நூலே நுவல்வோ னுவலுந் திறனே
கொள்வோன் கோடற் கூற்றா மைந்தும்
எல்லா நூற்கு [1]மியைபொதுப் பாயிரம்.

நூலே நுவல்வோன் நுவலும் திறனே
கொள்வோன் கோடற் கூற்று ஆம் ஐந்தும்
எல்லா நூற்கும் இயை பொதுப் பாயிரம்.

nūlē nuvalvōṉ nuvalum ṭiṟaṉē
koḷvōṉ kōtaṟ kūṟṟu āmaintum
ellā nūṟkum iyai poṭup pāyiram.

**என்றி பவர் -ஆங்கில மொழிபெயர்ப்பு**

### A General Preface

A General introduction should treat on five subjects, viz the nature of the work; the character of the teacher; the manner in which it is to be taught; the character (or qualities) of the scholar; and the manner of learning the work.

**ஒப்புமைப் பகுதி**

ஈவோன் தன்மை ஈதல் இயற்கை
கொள்வோன் தன்மை கோடல் மரபென
ஈரிரண் டென்ப பொதுவின் தொகையே. (நச்.உரை)

பெயரார்நூ லீவோ னியல்பீயும் பெற்றி
அயராது கொள்வோ னளவும் – அயர்வின்றிக்
கோடன்மர பீரிரண்டுங் கூறல்பொதுப் பாயிரமாம்
பாடல்சால் நூலின் பயன். (வெண்.பாட்.:)

---

பாட வேறுபாடு.:–
1. மாட்டெறிந்தொழிதல்.

ஈவா ரியல்பிவை யீகை முறைமை இவையணர்தல்
ஆவார் திறமிவை கேளாய லாதியிந் நாற்பகுதி
தாவா துரைத்தல் பொதுப்பா யிரந்தனி வானவரை
ஒவா திறைஞ்சி யதிகார முன்ன ருரைப்பர்களே. (நவநீ.பாட்.: )

அதுவே
நுண்ணுல் நுவல்வோன் நுவல்வதன் இயற்கை
கொள்வோன் குறிப்பின் கொள்கடன் தன்னொடும்
தெள்ளிதின் ஐந்தெனச் செப்பினர் புலவர் (மாற.அலங்.:5)

பொதுக் குருக் கொள்வோன் கொடுத்தல் கோடல் என
நான்காம் (சுவாமி.:4:1)

## மயிலை நாதர்

இ–ள்.: இவ்வைந்தும் எல்லா நூன்முகத்தும் பொருந்தும் பொதுப் பாயிரமாம், எ – று.

## சங்கர நமச்சிவாயர் – சிவஞான முனிவர்

எ–னின், இருவகைப் பாயிரத்துள் பொதுப்பாயிரத்தை விரித்துஉணா் – ற்று.

இ–ள்.: நூலினது வரலாறும், ஆசிரியனது வரலாறும், அவ்வாசிரியன் நூலை மாணாக்கற்குச் சொல்லுதலின் வரலாறும், மாணாக்கனது வரலாறும், அவன் கேட்டலின் வரலாறும் என்னும் ஐந்தும் எல்லா நூற்குமாம் ஆதலின், இவ்வைந்து வரலாற்றையும் விளங்க உணர்த்துவது பொதுப் பாயிரமாம், எ – று.

திறன் – கூற்று; என்றது வரலாற்றையாதலின், அதனை ஏனையவற்றுள்ளும் பிரித்துரைத்தாம். ஆம் என்பதனை எல்லா நூற்கும் ஆம் எனக் கூட்டுக.

“ஈவான் தன்மை ஈதல் இயற்கை கொள்வோன் தன்மை
கோடன் மரபென ஈரிரண் டென்ப பொதுவின் தொகையே”

என்பாரும் உளராலோவெனின்:–பாயிரம் கூறுதல் நூல்கட்கு அன்றிப் பிறவற்றிற்கன்றே; அங்ஙனமாதலின், நூல்களின் வரலாறு ஒன்றுமே கூற வேண்டும்; அதனோடு ஆசிரியன் வரலாறு முதலிய நான்கினையும் உடன் கூறுதல், வரலாற்று முறைமையின் வாராதார் நூல்களைக் கற்பிக்கவும் கற்கவும் புகின்,

"பொய்படும் ஒன்றோ புனைபூணும் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்”

என்றவாறேயாய், நூல்கள் அருமையும் பெருமையும் கெட்டுப் பயன்படாவாம் என்பது கருதி யென்க.

**அங்ஙனமாயின், நூன்முகத்து உரைக்கப்படும் பாயிர வுறுப்பினுள் நூலைக் கூறுவது பொருந்தா தென்னின்:- இவ்விலக்கணத்தான் அமைபவன் ஆசிரியன் என்றாற் போல இவ் விலக்கணத்தான் அமைவது நூலென்றது அன்றிப் பாயிரத்துள் நூலைக் கூறியதன்றாம். ஆதலின், ஆசிரியர் தொல்காப்பியர் நூலின் இயல்பை ஒத்துறுப் பாகிய மரபியலுள் கூறினாற் போல, இவ்வாசிரியர் பாயிரவுறுப்பினுள் கூறினார் என்க.**

## கூழங்கைத் தம்பிரான்

**சூ-ம்,** பொதுப் பாயிரம் இத்துணைப் பகுதிப்படுமெனக் கூறு கின்றது.

**இ-ள்.: நூலே** – நூல் இலக்கணமும், **நுவல்வோன்** – ஆசிரியன் இலக்கணமும், **நுவலும் திறனே** – ஆசிரியன் கற்பிக்கும் இலக்கணமும், **கொள்வோன்** – சீடன் இலக்கணமும், **கோடற் கூற்று** – சீடன் கொள்ளும் முறைமை இலக்கணமும், **ஆமைந்தும்** – ஆகிய இவ் வைந்து இலக்கணமும், **எல்லா நூற்கும்** – எல்லா நூன்முகத்தும் பொருந்தும், **இவை பொதுப் பாயிரம்** – பொதுப் பாயிரம் இவையாம், எ-று.

## விசாகப் பெருமாளையர்

**இது,** பொதுப்பாயிரத்தை விரித்துச் சொல்லுகின்றது.

**இ-ள்.: நூற் (றிறன்)** – நூலினது வரலாறும், **நுவல்வோன்** (றிறன்) – பாடஞ் சொல்லும் ஆசிரியனது வரலாறும், **நுவலுந் திறன்** – பாடஞ் சொல்லுதலினது வரலாறும், **கொள்வோன் (றிறன்)** – பாடங்கேட்கு மாணாக்கனது வரலாறும், **கோடற் கூற்று** – பாடங் கேட்கையினது வரலாறும், **எல்லா நூற்கும்,** எல்லா நூலுக்கும் **ஆம்** – ஆகும் ஆதலால், **இவை** – இவ்வைந்து வரலாற்றையும் விளங்கக் காட்டுவது, **பொதுப் பாயிரம்** – பொதுப்பாயிரமாகும், எ – று.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** பொதுப்பாயிர மென்றதை விரித்துணர்த்துகின்றது.

**இ-ள்.: நூலே** – நூலினது வரலாறும், **நுவல்வோன்** – ஆசிரியன் வரலாறும், **நுவலுந்திறனே** – (ஆசிரியன் மாணாக்கனுக்கு நூலைச்) சொல்லுதலின் வரலாறும், **கொள்வோன்** – மாணாக்கன் வரலாறும், **கோடற்கூற்று** – அவன் கற்றுக்கொள்ளுதலின் வரலாறும், **ஐந்தும்** –ஆகிய

இவ்வைந்து வரலாறும், **எல்லா நூற்கும் ஆம்** – எல்லா நூல்களுக்கும் ஆம், (ஆதலால்), **இவை பொதுப்பாயிரம்** – இவை விளங்கிய பாயிரம் பொதுப்பாயிரமாம், எ – று.

திறன் – கூற்று; என்றது, வரலாற்றை யாதலால் அதனை யொழிந்தனவற்றுளுங் கூட்டியுரைக்கப்பட்டது.

ஆம் என்பதை எல்லா நூற்குமாமெனக் கூட்டுக. இவை யென்பது இவை விளக்கிய பாயிரமென நிற்றலால் ஆகுபெயர். ஆதலாலென்பது வருவிக்கப்பட்டது.

**ஈவோன் றன்மை யீத லியற்கை**
**கொள்வோன் றன்மை கோடன் மரபென**
**வீரிரண் டென்ப பொதுவின் றொகையே**

எனப் பொதுப்பாயிரம் நால்வகைப்படுமென்பாரு முளரெனின், பாயிரங்கூறுதல் 'நூல்களுக்கே தவிரப் பிறவற்றிற்கன்றே, அதனால் நூலின் வரலாறொன்றுமே கூறவேண்டும்; அதனோடு ஆசிரியன் வரலாறு முதலிய நான்கினையுமுடன் கூறுவது வரலாற்று முறைமையின் வாராதார் நூல்களைக் கற்பிக்கவுங் கற்கவும் புகின்,

**பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்**
**பேதை வினைமேற் கொளின்**

என்றவாறே யாகி நூல்களினருமையும் பெருமையுங் கெட்டுப் பயன்படாமையைக் குறித்தென்க. இவை பொதுப்பாயிரமென முடித்துக்கொள்க.

## கா.கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :–** **நூல்** (திறன்) – நூலின் வரலாறும், **நுவல்வோன்** (திறன்) – (நூலைக் கற்பிக்கும்) ஆசிரியன் வரலாறும், **நுவலும் திறன்** – பாடஞ்சொல்லும் வரலாறும், **கொள்வோன்** (கூற்று) – (பாடங்கேட்கும்) மாணாக்கனது வரலாறும், **கோடல் கூற்று** – பாடங் கேட்டலின் வரலாறும், **ஆம் இவை ஐந்தும்** – ஆகிய இவ்வைந்து பொருளும், **எல்லா நூற்கும்** – எல்லா நூல்கட்கும், **பொதுப்பாயிரம்** – (பொதுவாதலால்) பொதுப் பாயிரத் திலக்கணமாம்.

**குறிப்பு :–**
ஏகாரங்கள் எண்ணுப் பொருளன.
திறன், கூற்று என்பன ஒரு பொருளன;
இவை பிறவற்றொடுங் கூட்டப்பட்டன.

## ஆறுமுக நாவலர்

**இ—ள்.: நூற்** (றிறன்) — நூலினது வரலாறும், **நுவல்வோன்**(றிறன்) — ஆசிரியனது வரலாறும், **நுவலுந் திறன்** — அவ்வாசிரியன் மாணாக்கனுக்கு நூலைச் சொல்லுதலின் வரலாறும், **கொள்வோன் (றிறன்)** — மாணாக்கனது வரலாறும், **கோடற் கூற்று** —அவன் கேட்டலின் வரலாறும், **ஐந்தும் எல்லா நூற்கும் ஆம்** —ஆகிய இவ் வைந்தும் எல்லா நூல்களுக்குமாம், **இவை பொதுப்பாயிரம்** — ஆதலால் இவ்வைந்து வரலாற்றையும் விளங்க வுணர்த்துவது பொதுப்பாயிரமாம், **எ—று.**

## வ. குமாரசாமிப் புலவர்

**இ—ள். நூற்** (திறன்) — நூலினது வரலாறும், நுவல்வோன் (திறன்) — ஆசிரியன் வரலாறும், **நுவலுந்திறன்** — அவ்வாசிரியர் மாணாக்கனுக்கு நூலைச் சொல்லுதலின் வரலாறும், **கொள்வோன்** (கூற்று) — மாணக்கனது வரலாறும், — **கோடற்கூற்று** — அவன் கேட்டலின் வரலாறும், **ஐந்தும் எல்லா நூற்கும் ஆம்** — ஆகிய இவ்வைந்தும் எல்லா நூல்களுக்குமாம், **இவை பொதுப்பாயிரம்** — ஆதலால் இவ்வைந்து வரலாற்றையும் விளங்கவுணர்த்துவது பொதுப்பாயிரமாம். **எ—று.**

## கா.நமச்சிவாய முதலியார்

**இ—ள்.: நூலே** — நூலினது வரலாறும், **நுவல்வோன்** — (நூலைக்) கற்பிக்கும் ஆசிரியனது வரலாறும், **நுவலும் திறனே** — (ஆசிரியன் மாணாக்கனுக்கு நூலைப்) பாடஞ் சொல்லுதலின் வரலாறும், **கொள்வோன்** — மாணாக்கனது வரலாறும், **கோடல் கூற்று** — (மாணாக்கன்) பாடங் கேட்டலின் வரலாறும், **ஆம்** — ஆகிய, **ஐந்தும்** — இவ்வைந்து பொருள்களும், **எல்லா நூற்கும்** — எல்லா நூல்கட்கும், (பொதுவா மாதலால்), **பொதுப்பாயிரம்** — (இவற்றை விளங்கச் சொல்வது) பொதுப்பாயிரத்தின் இலக்கணமாம்; **எ — று.**

விரிந்தும் தொக்கும் வந்த ஏகாரங்கள் — **எண்ணுப்பொருளன;** இதனைப் பிறவிடங்கட்குங் கொள்க. திறன்; கூற்று என்றது — வரலாற்றை; இதனைப் பிறவற்றோடும் கூட்டுக.

## பவானந்தம் பிள்ளை

**இ—ள்.: நூல்** (திறன்)—நூலின் வரலாறும், **நுவல்வோன்** (திறன்)— ஆசிரியன் வரலாறும், **நுவலும் திறன்** — அவ்வாசிரியன் (மாணாக்கனுக்கு) நூலைச் சொல்லுதலின் வரலாறும், **கொள்வோன்** (திறன்) — மாணாக்கன் வரலாறும்; **கோடற் கூற்று** — அவன் கற்றுக் கொள்ளுதலின் வரலாறும், **ஐந்தும்** — ஆகிய இவ்வைந்தும், **எல்லா நூற்கும் ஆம்** — எல்லா நூல்களுக்குமாம். **இவை பொதுப்பாயிரம்** — ஆதலால் இவ்வைந்தும் வரலாற்றையும் விளங்கவுணர்த்துவது பொதுப்பாயிரமாம். **எ—று.**

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ–ரை.:** நூலினது வரலாறும், ஆசிரியனது வரலாறும், பாடஞ் சொல்லுதலினது வரலாறும், மாணாக்கனது வரலாறும், பாடங் கேட்கையினது வரலாறும், எல்லா நூலுக்கும் ஆகும்; (ஆதலால்) இவ்வைந்து வரலாற்றையும் (விளங்கக்காட்டுவது) பொதுப் பாயிரமாகும். எ–று.

நூலே, நுவலுந் திறனே என்புழியும், நுவல்வோன் கொள்வோன், கோடற் கூற்று என்புழியும் முறையே விரிந்துந் தொக்கும் வந்த ஏகாரங்கள் – எண்ணுப் பொருளன; இதனைப் பிறவிடங் கட்குங் கொள்க. திறன், கூற்று என்பன – வரலாற்றை.

## கா. நமச்சிவாய முதலியார்

நூல் – நூலின் வரலாறு, **நுவல்வோன்** – ஆசிரியன் வரலாறு, **நுவலும் திறன்** – பாடஞ் சொல்லும் வன்மையின் வரலாறு, **கொள்வோன்** – மாணாக்கன் வரலாறு, **கோடல் கூற்று** – பாடங் கேட்டலின் வரலாறு, **ஆம்**– ஆகிய, **இவை ஐந்தும்** – இவ்வைந்து வரலாறும், **எல்லா நூற்கும்** – எல்லா நூல்கட்கும், **பொதுப்பாயிரம்** – பொதுப்பாயிர மாகும்.

'கூற்று' என்பதனைக் கடைநிலைத் தீவகமாகக் கொண்டு நூற்கூற்று, நுவல்வோன் கூற்று, நுவலுந்திறன் கூற்று, கொள்வோன் கூற்று எனக் கூட்டுக. கூற்று என்பது வரலாற்றை யுணர்த்தும்.

**நுவல்வோன்** – சொல்லுவோன், பாடஞ் சொல்லுவோன், ஆசிரியன்.

**கொள்வோன்** – வாங்கிக் கொள்பவன், பாடத்தை

**வாங்கிக் கொள்பவன்** – மாணாக்கன்.

## மோசகூ பொன்னையா

நூலின் வரலாறும், ஆசிரியனின் வரலாறும், பாடஞ்சொல்லுதலின் வரலாறும், மாணாக்கனின் வரலாறும், மாணாக்கன் கற்றுக்கொள்ளுதலின் வரலாறும் ஆகிய ஐந்தும் எல்லா நூல்களுக்கும் பொதுவாமாதலால், அவற்றை விளங்க உணர்த்துவது பொதுப்பாயிரமாம், எ–று. (3)

## நூலின் இயல்பு

**4. நூலி னியல்பே நுவலி னோரிரு**
**பாயிரந் தோற்றி மும்மையி னொன்றாய்**
**நாற்பொருட் பயத்தோ டெழுமதந் தழுவி**

ஐயிரு குற்றமு மகற்றியம் மாட்சியோ
டெண்ணான் குத்தியி னோத்துப் படலம்
என்னு முறுப்பினிற் சூத்திரங் காண்டிகை
விருத்தி யாகும் விகற்பநடை பெறுமே.

நூலின் இயல்பே நுவலின் ஓர் இரு
பாயிரம் தோற்றி மும்மையின் ஒன்று ஆய்
நால் பொருள் பயத்தொடு எழு மதம் தழுவி
ஐ இரு குற்றமும் அகற்றி அம் மாட்சியோடு
எண் நான்கு உத்தியின் ஓத்துப் படலம்
என்னும் உறுப்பினில் சூத்திரம் காண்டிகை
விருத்தி ஆகும் விகற்ப நடை பெறுமே.

nūliṉ iyalpē nuvaliṉ ōr iru
pāyiram ṭōṟṟi mummaiyiṉ oṉṟu āy
nāl poruḷ payaṭṭotu eḻu maṭam ṭaḻuvi
ai iru kuṟṟamum akaṟṟi am mātsiyōtu
eṇ nāṉku uṭṭiyiṉ ōṭṭup patalam
eṉṉum uṟuppiṉil sūṭṭiram kāṇṭikai
viruṭṭi ākum vikaṟpa natai peṟumē.

## என்றி பவர் -ஆங்கில மொழிபெயர்ப்பு

### A Classical Work

If the nature of a classical work be considered, it must posses the two prefaces; it must take a place in one or other of the three kids of classical works; it must treat on one or other of the four cardinal blessings (and the advantages to be derived from these grand objects) it must embrace the seven madams or principals of authorship; it must be free of the ten faults (improprieties), it must possess the ten beauties (proprieties) of style; it must agree with the thirty-two *yuktis* (characteristics or rules of criticism;) it must be divided into sections; into chapters, and into *sutras*, (rules or aphorisms); it must also be accompained with a *Kandigai* or brief commentary; or with *Virutti* or extended commentary.

## ஒப்புமைப் பகுதி

ஒத்த சூத்திரம் உரைப்பின் காண்டிகை
மெய்படக் கிளந்த வகையது ஆகி

ஈர்ஐங் குற்றமும் இன்றி நேரிதின்
முப்பத் திருவகை உத்தியொடு புணரின்
நூலென மொழிப நுணங்குமொழிப் புலவர் (தொல்.பொருள்.: )

உரைஎடுத்து அதன்முன் யாப்பினும் சூத்திரம்
புரைதப உடன்படக் காண்டிகை புணர்ப்பினும்
விதித்தலும் விலக்கலும் எனவிரு வகையொடு
புரைதப நாடிப் புணர்க்கவும் படுமே. (தொல்.பொருள்.: )

.............. பாயிரங்கள் தோற்றிஏழ் மதத்தாய்
நாலுபயத் தாய்ப்பதின் மாசு அகன்று பதின் குணத்தாய்
நால்எட்டுஆம் உத்தியின் ஒத்துப் படலம் உறுப்பிற்
காலின் சூத்திரம் காண்டி விருத்தி நடைத்தாகிக்
காண்கும்.............. (சுவாமி.:3:2–4)

முதல்வழி சார்புஎன மூவகைத் தந்திரம் சூத்திரமும்
உதவுவிருத்தி உயர்தருமம் முதல்நான்கு ஏழ்வரை
மதவிகற்பம் பத்துக் குற்றத்துத் தீர்ந்து பத்துக் குணத்தின்
நுதலும் பதின் மூன்றுள் முப்பத்து இரண்டு உளநூல்நெறியே
(ந.பா.:72)

நூல் எனப் படுவது நுவலுங் காலை
முதலும் முடிவும் மாறுகோள் இன்றித்
தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி
உள்நின்று அகன்ற அரையொடு பொருந்தி
ஈரைங் குற்றமும் இன்றி நேரிதின்
எண்ணான்கு உத்தி அண்ணுதல் உடைத்தாய்
ஒருபொருள் நுதலிய ஓத்தி னானும்
பொதுமொழி கிளந்த படலத் தானும்
மூன்றுறுப்பு அடங்கிய பிண்டத் தானும்
தோன்றும் என்னச் சொல்லினர் புலவர். (இல.விள.:890)

அவற்றுள்
உத்தம நூல்மரபு உணர்த்துங் காலை
முத்திறந்து ஒன்றாய்ப் பாயிரம் முதலுபு
நாற்பொருள் நலனுற நவில்வது வாகிச்
சூத்திரம் ஒத்துப் படலமென்று மனமந் தஃகாக்
காண்டிகை விருத்தியில் காட்சிதந்து ஈரைங்
குற்றமொன் றின்றிக் அழகொடு மெண்ணான்கு
உத்தியின் சிறந்ததென்று உரைத்தனர் புலவர் (மா.அலங்.:6)

## மயிலை நாதர்

**இ – ள்.:** இவ்வியல்பினது நூலாவது, **எ – று.**

ஓரிரு பாயிரந் தோற்றலாவது பொதுப்பாயிரமும் சிறப்புப்பாயிரமும் முன்னுடைத்தாதல்.

ஏனைப்பகுதிகளைத் தத்தம் இலக்கணச் சூத்திரத்துட் காண்க.

## சங்கர நமச்சிவாயர்

**எ–னின்,** மேற்கூறிய ஐந்தனுள் நூலினது வரலாறு **உணர் – ற்று.**

**இ–ள்.:** மேற்கூறிய ஐந்தனுள் நூலினது வரலாற்றைச் சொல்லின், இருவகைப் பாயிரத்தையும் முன்னுடைத்தாதல் முதலாக இங்ஙனம் விகற்பித்த பதினொரு விகற்பநடைகளைப் பெற்றுவரும், **எ–று.**

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** நூலின் இலக்கணம் இஃதெனக் கூறியது.

**இ–ள்.: நூலின் இயல்பே நுவலின்** – நூல் இலக்கணத்தைச் சொல்லின், **ஓரிரு பாயிரம் தோற்றி** – பொதுப் பாயிரமும் சிறப்புப் பாயிரமும் முன்னுடைத்தாய், **மும்மையின் ஒன்றாய்** – மூன்று நூலின் ஒரு நூலாய், **நாற்பொருள் பயத்தோடு** – நால்வகைப் பொருளையும் பெறுவதாக, **எழுமதம் தழுவி** – எழுவகை மதமும் படவருவதாய், **ஐயிரு குற்றமும் அகற்றி** – பத்துக் குற்றமும் சாராது வருவதாய், **அம் மாட்சியோடு** –பத்துப் பெருமையொடுங் கூடி வருவதாய், **எண்ணான்கு உத்தியின்** –முப்பத்திரண்டு தந்திரவுத்தியுடனே வருவதாய், **இயலே படலம் என்னும் உறுப்பினில்** – இயலுறுப்புப் படலவுறுப்பு என்னும் இவ்விரண்டு உறுப்பினை உடையதாய், **சூத்திரம்** – சூத்திரப் பொருளாகவும், **காண்டிகை** – காண்டிகைப் பொருளாகவும், **விருத்தியாகும்** – விருத்திப் பொருளாகவும், **விகற்ப நடைபெறுமே** – இத்துணை வேறுபாடாகி வரும் இயல்பினை உடையது நூலாம், **எ–று.**

## விசாகப் பெருமாளையர்

**இது,** முன்சொல்லிய பொதுப்பாயிரம் ஐந்தனுள் நூலினது வரலாற்றைச் சொல்லுகின்றது.

**இ–ள்.: நூலினியல்பு** – நூலினது வரலாற்றை, **நுவலின்** – சொன்னால், **ஓரிரு பாயிரந் தோற்றி** – பொதுவுஞ் சிறப்புமாகிய விருவகைப் பாயிரத்தையு முன்னுடைத்தாகி, **மும்மையி னொன்றாய்** – முதனூன் முதலாகிய மூன்றனுள் ஒன்றாகி, **நாற்பொருட் பயத்தோடு** – அற முதலாகிய நான்கு பொருட் பிரயோசனத்துடனே, **எழுமதந் தழுவி** – உடன்படன் முதலாகிய எழுவகை

மதத்தையுந் தழுவி, **ஐயிரு குற்றமு மகற்றி** – குன்றக்கூறன் முதலாகிய பத்துக் குற்றத்தையு மொழித்து, **அம் மாட்சியோடு** – சுருங்கச் சொல்லல் முதலாகிய பத்தழகுடனே, **எண்ணான் குத்தியின்** – நுதலிப்புகுதன் முதலாகிய முப்பத்திரண்டு உத்தியைக் கொண்டு, **ஒத்துப் படல மென்னு முறுப்பினில்** – இயல் அதிகாரம் என்னும் அவயவங்களுடனே, **சூத்திரம்** – சூத்திரமும், **காண்டிகை** – காண்டிகையுரையும், **விருத்தி** – விருத்தியுரையும், **ஆகும்** – ஆகின்ற, **விகற்பநடை** – பதின்மூன்று வேறுபாட்டு நடையையும், **பெறும்** – பெற்றுவரும், **எ – று.**

## முகவை இராமாநுச கவிராயர்

**இது,** நூலினது வரலாற்றை விரித்துணர்த்துகின்றது.

**இ–ள்.: நூலினியல்பு** – நூலினது வரலாற்றை, **நுவலின்** – சொல்லப் புகின், **ஓரிரு பாயிரந் தோற்றி** – பொதுவுஞ் சிறப்புமாகிய இருவகைப் பாயிரங்களையு முன்னே தோன்றச் செய்து, (முன்னுடைத்தாகி) **மும்மையி னொன்றாய்** – மூவகை நூலுளொன்றாகி, **நாற்பொருட் பயத்தோடு** – (அறம் பொருள் இன்பம் வீடென்னும்) நன்கு பொருட்பயனோடு கூடி, **எழுமதந் தழுவி**– (உடன்படல் முதலிய) வெழுவகை மதங்களை அணைத்துக் கொண்டு, **ஐயிருகுற்றமகற்றி** – (குன்றக்கூறல் முதலிய) பத்துவகைக் குற்றங்களையும் நீக்கி, **அம்மாட்சியோடு** – (சுருங்கச் சொல்லல் முதலிய) அப்பத்து வகை யழகுடனே, **எண்ணான் குத்தியின்** – (நுதலிப் புகுதல் முதலிய) முப்பத்திரண்டு வகை யுத்திகளைச் சார்ந்து, **ஒத்துப்படலமென் னுமுறுப்பினில்** – இயலும் படலமு மென்கின்ற அங்கத்துடன், **சூத்திரம்** – சூத்திர யாப்பெனவும், **காண்டிகை** – காண்டிகை யுரையெனவும், **விருத்தி** – விருத்தியுரை யெனவும், **ஆகும் விகற்ப நடை பெறும்** – ஆகிய வேறுபாட்டு நடைகளைப் பெற்றுவரும், **எ – று.**

> ஒத்து என்றது வேதம், அது அதனங்கமாகிய வியா கரணத்திற்காகி, அதனங்கமாகிய இயலுக்கானமையால் இருமடி யாகுபெயர். நூலினியல்புநுவலின் அது இவ்வாறாகி, உத்தியின் உறுப்பின் சூத்திரத்தின் காண்டிகையின் விருத்தியின் விகற்ப நடைகளைப் பெறுமென விரித்தும் அது பெறுமெனக் குவித்தும் முடித்துக்கொள்க.

## கா.கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– நூலின் இயல்பு** – நூலினது வரலாற்றை, **நுவலின்** – சொல்லப் புகுந்தால், **ஓர் இரு பாயிரம் தோற்றி** – (பொதுவும் சிறப்புமாகிய) இருவகைப் பாயிரங்களையும் முன்னே உடையதாய், **மும்மையின் ஒன்று ஆய்** – மூவகை நூல்களுள் ஒன்றாகி, **நால் பொருள் பயத்தோடு** – நான்கு புருஷார்த்தங் களாகிய பிரயோசனங்களோடு, **ஏழு மதம் தழுவி** – ஏழு மதங்களையும் பெற்று, **ஐ இரு குற்றமும் அகற்றி** – பத்துவகைக் குற்றங்களையும் ஒழித்து, **அ**

**மாட்சியோடு** – அங்ஙனமே (பத்து) அழகுடனே கூடி, **எண் நான்கு உத்தியின்** – முப்பத்திரண்டு உத்திகளைக் கொண்டு, **ஒத்து படலம் என்னும் உறுப்பினில்** – ஒத்தும் படலமும் என்னும் அவயவங் களோடு, **சூத்திரம் காண்டிகை விருத்தி ஆகும்** – சூத்திரமும் காண்டிகையுரையும் விருத்தியுரையும் ஆகிய, **விகற்பம் நடை** – வெவ்வேறு ஆகிய பதின்மூன்று நடைகளை, **பெறும்** – அடைந்துவரும்.

**குறிப்பு** :– மும்மை முதலியவற்றை வரும் சூத்திரங்களிற் காண்க.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: நூலின் இயல்பு நுவலின்** – நூலினது வரலாற்றைச் சொல்லின், **ஓரிரு பாயிரம் தோற்றி** – இருவகைப் பாயிரத்தையும் முன்னுடைத்தாகி, **மும்மையின் ஒன்றாய்** – மூவகை நூலுள் ஒன்றாகி, **நாற்பொருட் பயத்தோடு** – நான்கு பொருளாகிய பிரயோசனத்தோடு கூடி, **எழுமதம் தழுவி** – எழுவகை மதத்தையுந் தழுவி, **ஐயிரு குற்றமும் அகற்றி** – பத்துக் குற்றத்தையும் ஒழித்து, **அம்மாட்சியோடு** – பத்தழகுடனே, **எண்ணான்கு உத்தியின்** – முப்பத்திரண்டு உத்தியைக் கொண்டு, **ஒத்துப் படலம் என்னும் உறுப்பினில்** – ஒத்தும் படலமு மென்று சொல்லப்படும் இருவகை யவயவத் தோடு, **சூத்திரம் காண்டிகை விருத்தி ஆகும் விகற்பநடை பெறும்** – சூத்திரமும் காண்டிகையுரையும் விருத்தியுரையுமாகிய வேறுபாட்டு நடைகளைப் பெற்று வரும், எ–று.

## வ. குமாரசாமிப் புலவர்

**நூலின் இயல்பு நுவலின்** – நூலினது வரலாற்றைச் சொல்லின், **ஓரிரு பாயிரந் தோற்றி** – இருவகைப் பாயிரத்தையும் முன்னுடைத்தாகி, **மும்மையின் ஒன்றாய்** – மூவகை நூலுள் ஒன்றாகி, **நாற்பொருட் பயத்தோடு** – நான்கு பொருளாகிய பிரயோசனத்தோடு கூடி, **எழுமதம் தழுவி** – எழுவகை மதத்தையு மருவி, **ஐயிரு குற்றமும் அகற்றி** – பத்துக்குற்றத்தையும் ஒழித்து, **அம்மாட்சியோடு** – பத்தழகுடனே, **எண்ணான்கு உத்தியின்** – முப்பத்திரண்டு உத்தியைக் கொண்டு, **ஒத்துப்படலம் என்னும் உறுப்பினில்** – ஒத்தும்படலமு மென்று சொல்லப்படும் இருவகை யவயத்தோடு, **சூத்திரம் காண்டிகை விருத்தி ஆகும் விகற்படை பெறும்** – சூத்திரமும் காண்டிகையுரையும் விருத்தியுரையுமாகிய வேறுபாட்டு நடைகளைப் பெற்று வரும்.

> அ+மாட்சி = அந்த அழகு. அ என்பது முற்கூறிய ஐயிரண்டைச் சுட்டுதலாற் பத்தழகென்று பலிதார்த்த மாயிற்று. ஒத்து = (இயலாகிய) சிற்றங்கம். படலம் = பல இயல்களின் கூட்டமான (அதிகாரமாகிய) பேரங்கம். இவற்றை 15–ம், 16–ம் சூத்திரங்கள் வகுத்துரைத்தல் காண்க. இயலென்பதற்கியையும் பாகத்தைச் சில நூலிலே அதிகாரமென்று வழக்குதலுமுண்டு திருவள்ளுவர் குறளிலுங் காண்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:** (மேற்கூறிய ஐந்தனுள்), **நூலின் இயல்பு** – நூலின் வரலாற்றை, **நுவலின்** – சொல்லப் புகுந்தால், **ஓர் இரு பாயிரம் தோற்றி** –(கீழ்க் கூறிய பொதுவும் சிறப்புமாகிய) இருவகைப் பாயிரங்களையும் முன்னே யுடையதாய், **மும்மையின் ஒன்று ஆய்** – மூவகை நூல்களுள் ஒன்றாகி, **நால் பொருள் பயத்தோடு** – நான்கு புருஷார்த்தங்களாகிய பிரயோசனங்களுடன், **எழு மதம் தழுவி** – எழுவகை மதங்களையும் தழுவி, **ஐ இரு குற்றமும் அகற்றி** – பத்துவகைக் குற்றங்களையும் நீக்கி, **அ மாட்சியோடு** – அத்தனை (பத்துவகை) அழகுகளுடனே கூடி, **எண் நான்கு உத்தியின்** – முப்பத்திரண்டு வகை உத்திகளைக் கொண்டு, **ஓத்து படலம் என்னும் உறுப்பினின்** – ஒத்தும் படலமும் என்கிற அவயவங்களுடனே, **சூத்திரம்** – சூத்திரமும், **காண்டிகை** – காண்டிகையுரையும், **விருத்தி** – விருத்தி யுரையும், **ஆகும்** – ஆகின்ற, **விகற்பம் நடை** – வேறுபட்ட நடைகளை, **பெறும்** – பெற்று வரும்; **எ – று.**

'மும்மை' முதலியவற்றை,மேல்வருஞ் சூத்திரங்களிற் காண்க.

'அம்மாட்சி' என்பதில், அகரம் – ஐயிரண்டைச் சுட்டிற்று.

ஒத்து, படலம் = இயல், அதிகாரம்; ஒத்து – சிற்றுறுப்பு, படலம் – பேருறுப்பு.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.: நூலின் இயல்பு நுவலின்** – நூலினது வரலாற்றைச் சொல்லின், ஓரிரு பாயிரம் தோற்றி = (பொதுவும் சிறப்பும் ஆன) இரு வகைப் பாயிரத்தையும் முன்னுடைத்தாகி, **மும்மையின் ஒன்றாய்**–மூவகை நூலுள் ஒன்றாகி, **நாள்பொருட் பயதோடு**– நான்கு பொருளாகிய பிரயோசனத்தோடு கூடி, **எழு மதம் தழுவி** – எழுவகை மதத்தையுந் தழுவி, **ஐயிரு குற்றமும் அகற்றி** – பத்துக் குற்றத்தையும் நீக்கி, **அம்மாட்சியோடு** – பத்தழகுடனே, எண்ணான்கு உத்தியின் முப்பத்திரண்டு உத்தியைக் கொண்டு, **ஒத்துப் படலம் என்னும் உறுப்பினில்** – இயலும் படலமுமென்று சொல்லப்படும். இருவகை அவயவத்தோடு, **சூத்திரம் காண்டிகை விருத்தி ஆகும் விகற்பநடை பெறும்**– சூத்திரயாப்பும் காண்டிகை யுரையும் விருத்தியுரையுமாகிய வேறுபாட்டு நடைகளைப் பெற்று வரும். **எ–று.**

## கா.நமச்சிவாய முதலியார்

**நூலின் இயல்பு** – நூலினது வரலாற்றை, **நுவலின்** – சொல்லுமிடத்து, **ஓர் இருபாயிரம் தோற்றி** – இருவகைப் பாயிரத்தையும் முன்னுடைத்தாகி,

**மும்மையின் ஒன்றாய்** – மூன்று வகைப்பட்ட நூல்களில் ஒன்றாகி, **நாற் பொருள் பயத்தோடு** – நான்கு வகைப் பயனுடனே, **எழு மதம் தழுவி** – எழுவகை மதத்தையும் தழுவி, **ஐயிருகுற்றமும் அகற்றி** – பத்துக் குற்றங்களையும் ஒழித்து, **அ மாட்சியோடு** – அவ்வகைப்பட்ட (பத்து) அழகுடனே, **எண்ணான்கு உத்தியின்** – முப்பத்திரண்டு உத்தியைக் கொண்டு, **ஓத்து படலம் என்னும் உறுப்பினில்** – இயல் அதிகாரம் என்னும் உறுப்புக்களோடு, **சூத்திரம்** – சூத்திரமும், **காண்டிகை** – காண்டிகை யுரையும், **விருத்தி** – விருத்தி யுரையும், **ஆகும்** – ஆகிய, **விகற்ப நடை** – வேறுபாடான நடையினை, **பெறும்** – பெற்று வரும். இவற்றுள் நாற்பொருள் நீங்கலாக ஏனைய பலவும் இலக்கண நூலுக்கே பொருந்துமாறு காண்க.

## மோசசு பொன்னையா

நூலினது வரலாற்றைச் சொல்வது என்றால், பொதுப்பாயிரம், சிறப்புப் பாயிரம் என்னும் இருவகைப் பாயிரத்தையும் முன்னே பெற்று, மூவகை நூலுள் ஒன்றாக அமைந்து, நான்கு பொருட் பயனோடு கூடி, ஏழு வகை மதங்களையும் தழுவி நடந்து, பத்து வகைக் குற்றமும் இல்லாமல், பத்து வகை அழகுடனே பொருந்தி, முப்பத்திரு வகை உத்திகளைக் கொண்டு, ஒத்து, படலம் என்னும் இருவகை உறுப்புக்களால் அமைந்து,சூத்திர யாப்பு, காண்டிகையுரை, விருத்தியுரை எனவும் ஆகிய வேறுபட்ட நடைகளைப் பெற்று வரும், எ–று. **(4)**

# நூலின் வகை

**5. முதல்வழி [1]புடை யென நூன்மூன் றாகும்.**

**முதல் வழி புடை என நூல் மூன்று ஆகும்.**

mutal vaḻi putai ena nūl mūnṟu ākum.

## என்றி பவர் -ஆங்கில மொழிபெயர்ப்பு

### Kinds of classical works

All works are of three kinds; primary or original; secondary or supplementary, and derivative or deductive.

## ஒப்புமைப் பகுதி

**மரபுநிலை திரியா மாட்சிய ஆகி**
**உரைபடு நூல்தாம் இருவகை இயல**
**முதலும் வழியும் எனநுதலிய நெறியின.** **(தொல்.பொரு.:)**

**நூலின்வகை முதல்வழிசார்பு என மூன்றாம்.. (சுவாமி.:3:1)**

**முதல்வழி சார்பென நூல்மூன் றாகும் (இல.விள.:899)**

**முத்திறத்தோன் றென்பன முதல்வழி சார்பே (மாற.அலங்.:7)**

## மயிலைநாதர்

**இ – ள்.:** இம் மூன்று கூற்றதாம் நூல், **எ – று.**

## சங்கர நமச்சிவாயர்

**எ–னின்,** நூலினது வரலாற்றைத் தொகுத்துக் கூறினார். அவற்றுள் 'ஓரிருபாயிர'த்திற்கு வகை போந்து கிடந்தமையின் அதனை ஒழித்து, ஏனையவற்றை வகுத்துக் கூறுவான் தொடங்கி 'மும்மையின் ஒன்றாய்' 4) என்றதனை **வகுத்துணர் –ற்று.**

**இ–ள்.:** முதனூல், வழிநூல், சார்பு நூல் என மூன்று கூற்றதாம் நூல், **எ–று.**

நூலின் இயல்பு – நூலினது வரலாற்றை, நுவலின் – சொல்லுமிடத்து, ஓர் இருபாயிரம் தோற்றி – இருவகைப் பாயிரத்தையும் முன்னுடைத்தாகி, மும்மையின் ஒன்றாய் – மூன்று வகைப்பட்ட நூல்களில் ஒன்றாகி, நாற் பொருள் பயத்தோடு – நான்கு வகைப் பயனுடனே, எழு மதம் தழுவி – எழுவகை மதத்தையும் தழுவி, ஐயிருகுற்றமும் அகற்றி – பத்துக் குற்றங்களையும் ஒழித்து, அ மாட்சியோடு – அவ்வகைப்பட்ட (பத்து) அழகுடனே, எண்ணான்கு உத்தியின் – முப்பத்திரண்டு உத்தியைக் கொண்டு, ஒத்து படலம் என்னும் உறுப்பினில் – இயல் அதிகாரம் என்னும் உறுப்புக்களோடு, சூத்திரம் – சூத்திரமும், காண்டிகை – காண்டிகை யுரையும், விருத்தி – விருத்தி யுரையும், ஆகும் – ஆகிய, விகற்ப நடை – வேறுபாடான நடையினை, பெறும் – பெற்று வரும்.

இவற்றுள் நாற்பொருள் நீங்கலாக ஏனைய பலவும் இலக்கண நூலுக்கே பொருந்துமாறு காண்க.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** பொதுப் பாயிரம் சிறப்புப் பாயிரம் மேலே கூறினமையாற் பின் முறையே மூன்று நூலால் இவையெனக் கூறுகின்றது.

**இ–ள்.: முதல் வழி சார்பென** – முதல் நூலென்றும் வழி நூலென்றும் சார்பு நூலென்றும், **நூல் மூன்றாகும்** – இம்மூன்று கூற்றதாம் நூல், **எ–று.**

## விசாகப் பெருமாளையர்

**இது,** முன் மூன்று நூலென்றதை வகுத்துச் சொல்லுகின்றது.

இ—ள். **முதல் –** முதனூல், **வழி** – வழிநூல், **சார்பு** – சார்புநூல், **என –** என்று, **நூல் –** நூலானது, **மூன்றாகும் –** மூன்று பிரிவை யுடைத்தாகும், **எ—று.**

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** மும்மையி னொன்றா யென்றதை வகுத்துணர்த்துகின்றது.

**இ—ள்.:** முதனூல், வழிநூல், சார்புநூலென நூல் மூன்று வகைப்படும், **எ—று.**

## கா.கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– நூல்** (முன்சொன்ன) நூலானது, **முதல்** (நூல் என) – முதனூலென்றும் **வழி** (நூல் என) – வழி நூலென்றும், **சார்பு** (நூல் என) – சார்பு நூலென்றும், **மூன்று ஆகும் –** மூன்று வகையாம். 'என', 'நூல்' என்பன பிறவற்றோடுங் கூட்டப்பட்டன.

## ஆறுமுக நாவலர்

இ – ள்.: முதல் வழி **சார்பு என –** முதனூல் வழிநூல் சார்பு நூலென, **நூல் மூன்று ஆகும் –** நூன் மூன்று வகையினை யுடைத்தாம், **எ – று.**

## வ. குமாரசாமிப் புலவர்

**இ—ள். முதல் வழி சார்பு** என – முதனூல் வழிநூல் சார்பு நூலென, – **நூல் மூன்று ஆகும் –** நூல் மூன்று வகையினையுடைத்தாரம். எ—று.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ – ள்.: முதல் –** முதல் நூலும், **வழி –** வழிநூலும், **சார்பு –** சார்பு நூலும், **என –** என்று, **நூல், மூன்று ஆகும் –** மூன்று வகையாகும்; **எ—று.**

இச் சூத்திரம், முன்னோர் செய்ததை மேற்கோளாகக் கொண்டது.

## பவானந்தம் பிள்ளை

**இ—ள்.:** முதல் வழி சார்பு என–முதனூல் வழிநூல் பார்பு நூலென, நூல் மூன்று ஆகும்–நூல் மூன்று வகையினையுடைத்தாம், **எ—று.**

'புடையென' என்பதும் பாடம். 8ஆவது சூத்திரம் பார்க்க.

---

**பாட வேறுபாடு.:–**

**1. சார்பென.**

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

பொ–ரை.: முதனூல், வழி நூல், சார்புநூல் என்று நூலானது மூன்று பிரிவை யுடைத்தாகும். எ–று.

## கா.நமச்சிவாய முதலியார்

முதல் வழி சார்பு என – முதனூல் வழிநூல் சார்பு நூல் என்று, நூல் மூன்றாகும் – நூலானது மூன்று வகையினை யுடையதாகும்.

## மோசசு பொன்னையா

முதல்நூல், வழிநூல், சார்புநூல் என நூல் மூவகைப்படும், எ–று.

(5)

# முதல் நூல்

6. அவற்றுள்,
வினையி னீங்கி விளங்கிய வறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும்.

அவற்றுள்,
வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதல் நூல் ஆகும்.

avaṟṟuḷ,
viṉaiyiṉ nīṅki viḷaṅkiya aṟiviṉ
muṉaivaṉ kaṇṭatu mutal nūl ākum.

## என்றி பவர் -ஆங்கில மொழிபெயர்ப்பு

### Original classics

Of these: - primary works originate in that Being who is free from faults (errors), and is of perfect understanding.

## ஒப்புமைப் பகுதி

வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதல்நூல் ஆகும் (தொல்.பொருள்.:)

இறை சொன்னநூல் முதனூல் (சுவாமி.:3:1)

**அவற்றுள்,**
**வினையி னீங்கி விளங்கிய யறிவின்**
**முனைவன் கண்டது முதனூல் ஆகும்** **(இல.விள.:900)**

**முதல்வனின் சிறந்தது முதனூல் ஆகும்** **(மாற.அலங்.:8)**

## மயிலை நாதர்

**(இ–ள்.)** இவ்வகையால் வருவது **முதனூலாவது**, எ – று.

## சங்கர நமச்சிவாயர்

**எ–னின்,** நூல் மூன்றனுள் முதனூலாமாறு **உணர்–ற்று.**

**இ – ள்.:** வினையின் நீக்கி விளக்கப்படும் அறிவினையுடைய உயிர்கட்கு, வினையின் நீங்கி விளங்கிய அறிவினை உடைய முதல்வன் ஆதிக்கண்ணே செய்தது யாது? அது முதல் நூலாம், **எ–று.**

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** முதல்நூல் இதுவெனக் கூறுகின்றது.

இ–ள்.: **அவற்றுள்** – மேற்கூறிய நூல் மூன்றினுள், **வினையின்நீங்கி** – அனாதியின் இயல்பாகவே பாசங்களை நீங்கி, **விளங்கிய அறிவின்** – விளக்கமாகிய பேரறிவினையுடைய, **முனைவன் கண்டது** – எல்லா உலகிற்கும் முதல்வனாகிய கடவுளால் செய்யப்பட்டது, **முதல் நூலாகும்** – முதல் நூலாவது **எ–று.**

## விசாகப் பெருமாளையர்

இது, முதனூலாமாறு சொல்லுகின்றது.

**இ–ள்.: வினையி னீங்கி**–வினையினின்று நீங்கி, **விளங்கிய**–பிரகாசித்த, **அறிவின்** – அறிவினையுடைய, **முனைவன்**–கடவுள் **கண்டது,** உயிர்களுக்கு ஆதிகாலத்திலே செய்தது, **முதனூலாகும்**–முதனூலாகும், எ – **று.**

## முகவை இராமானுச கவிராயர்

இது, முதனூலித் தன்மைத் தென்கின்றது.

**இ–ள்.: அவற்றுள்**–அம் மூவகை நூலுள், **வினையி னீங்கி விளங்கிய வறிவின்** – (இருவகை வினையிலே நின்றும் நீக்கி விளக்கப்படும் அறிவினை யுடைய வுயிர்களுக்கு) இயல்பாகவே வினையினீங்கித் தானே விளங்கிய அறிவினையுடைய, **முனைவன்**–ஆதிபகவன், **கண்டது** – (ஆதி காலத்திலே) அறிந்தது, (அறிந்து செய்தது) (யாது–அது) **முதனூலாகும், எ–று.**

ஆதிபகவனுயிர்களின் பொருட்டு ஆதிகாலத்திலே செய்தது முதனூலெனக் கூட்டி முடித்துக் கொள்க. காட்சி– அறிவாதலால், கண்டதை அறிந்ததெனவும், அது காரணமாதலால் செய்ததெனவுஞ் சொல்லப்பட்டது.

## கா.கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– அவற்றுள்** – (முன்முதல்வழி சார்பு என்ற) அம்மூன்றுவகை நூல்களுள், **வினையின் நீங்கி** – (இயல்பாகவே) நல்வினை தீ வினைகளினின்று நீங்கி, **விளங்கிய அறிவின்** – (இயற்கையிலேயே) விளங்கிய ஞானத்தையுடைய, **முனைவன் கண்டது** – கடவுள் செய்தது, **முதல் நூல் ஆகும்** –.

**குறிப்பு :–**

'முனைவன் கண்டது முதனூல்' என்றாரேனும், அவனருள் வழிப்பட்டோர் செய்ததும் முதனூலாம் என அறிக; இக்கருத்தை வருஞ்சூத்திரத்தில் ''முன்னோர் நூலின்'' எனப் பன்மையாற் கூறியதிலுங் காண்க.அறிவை மறைப்பது இருவினைப் பற்றாதலின் அப்பற்று இன்றி, இயற்கையாகத் தோன்றிய அறிவு என்பார் 'வினையி னீங்கி விளங்கிய அறிவு' என்றார் என்க.இச்சூத்திரம் இவ்வாசிரியர் இதன் முதனூலாகிய தொல்காப்பியத் தினின்றுங் கொண்ட மேற்கொள் என அறிக.

## ஆறுமுக நாவலர்

**இ – ள்.: அவற்றுள்** – அம் மூவகை நூலுள், **வினையின் நீங்கி விளங்கிய அறிவின்** – இயல்பாகவே வினையினின்று நீங்கித் தானே விளங்கிய அறிவினை யுடைய, **முனைவன் கண்டது முதனூல்ஆகும்** – கடவுள் உயிர்களுக்கு ஆதிகாலத்திலே செய்தது முதனூலாம், **எ – று.**

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். அவற்றுள்** – அம்மூவகை நூலுள், – **வினையின் நீங்கி விளங்கிய அறிவின்** – இயல்பாகவே வினையினின்று நீங்கித் தானே விளங்கிய அறிவினையுடைய, – **முனைவன் கண்டது முதனூல் ஆகும்** – கடவுள் உயிர்களுக்கு ஆதிகாலத்திலே செய்தது முதனூலாம். எ–று.

வினையினீங்கி என்பதற்கு முன்வினையொடு கூடியிருந்து பின் நீங்கி என்று கருத்துக் கொள்ளாது, முக்காலத்தும் வினையொடு தொடர்பின்றி என்று கருதுக. எனவே இறைவன் ஒருகாலத்தும் பாச சம்பந்தமில்லாதவனென்றவாறாம். கடவுள்

செய்த நூலுமேயன்றிக் கடவுளருள் வசப்பட்ட பெரியோர் செய்த நூலும் முதனூலென்று கொள்ளப்படும். இதனை "முன்னோர் நூலின்" என்று பின் பன்மையாற் கூறியது கண்டுணர்க.

## வை.மு. சடகோபராமாநுசாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

**இ – ள்.: அவற்றுள்** – அந்த மூவகை நூல்களுள், **வினையின் நீங்கி** – (இயல்பாகவே நல்வினை தீவினை யென்னும்) இரு வினையினின்றும் நீங்கி, **விளங்கிய அறிவின்** – (தானே இயல்பின்) விளங்கின அறிவை யுடைய, **முனைவன்** – கடவுள், **கண்டது** – செய்தது, முதனூல் ஆகும்; எ – று.

> **'முனைவன் கண்டது முதனூல்'** என்றாராயினும், அம் முனைவனை வழிபட்டுத் தலைவராயினார் செய்ததும் முதனூலெனப்படுமென அறிக: வருஞ் சூத்திரத்தில் **'முன்னோர் நூலின்'** எனப் பன்மையாகக் கூறுவதும் இது பற்றி யெனக் காண்க; அவை – அகத்தியம் முதலியன.
>
> இச் சூத்திரம், தொல்காப்பியத்தினின்று மேற்கோளாக எடுத்துக் கொள்ளப்பட்டது.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.: அவற்றுள்** – அம் மூவகை நூலுள், **வினையின் நீங்கி விளங்கிய அறிவின்**–இயல்பாகவே வினையினின்று நீங்கித் தானே விளங்கிய அறிவினையுடைய, **முனைவன் கண்டது முதனூல் ஆகும்**–கடவுள் உயிர்களுக்கு ஆதிகாலத்திலே செய்தது முதனூலாம். எ–று.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ–ரை.:** அம் மூவகை நூலுள், வினையினின்று நீங்கிப் பிரகாசிக்கின்ற அறிவினையுடைய கடவுள் உயிர்களுக்கு ஆதிகாலத்திலே செய்தது முதனூலாகும். எ–று.

> 'முனைவன் கண்டது முதனூல்' என்றாராயினும், அம்முனைவனை வழிபட்டுத் தலைமை எய்திய முனிவரர் செய்ததும் முதனூலெனப்படும் என அறிக

## கா.நமச்சிவாய முதலியார்

**அவற்றுள்** – அம்மூவகை நூல்களுள், **வினையின் நீங்கி** – இருவகை வினையினின்று நீங்கி, **விளங்கிய அறிவின்** – தெளிந்த அறிவினையுடைய,

**முனைவன்** – கடவுள், **கண்டது** – செய்தது, **முதல் நூல் ஆகும்** – முதனூல் என்று சொல்லப்படும்.

வினை – நல்வினை தீவினைகள்; நீங்குதல் – இயல்பாக நீங்கியிருத்தல்; விளங்கிய அறிவு – எப்பொழுதும் விளக்கம் பெற்றிருக்கும் அறிவு; இயற்கையறிவு. அதாவது ஒருபோது விளங்குதலும் ஒருபோது மறைதலுமுடைய உயிர்களின் அறிவைப் போலாமை.

ஈண்டு 'முனைவன்' என ஒருமையாற் கூறியவர் பின்னே 'முன்னோர் நூலின்' என வழிநூல் கூறுமிடத்துப் பன்மையாகக் கூறுதலின், இறைவன் அருள்பெற்ற சான்றோர் இயற்றிய நூலும் முதனூலேயாம் என்க.

## மோசசு பொன்னையா

முன்னர்ச் சொல்லப்பட்ட மூவகை நூல்களுள், இயல்பாகவே இரு வினைகளின் நின்றும் நீங்கித் தானே விளங்கிய அறிவினையுடைய ஆதிபகவன் அருளிச் செய்தது முதல் நூல் ஆகும், எ–று.

**(6)**

## வழி நூல்

**7. முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப்**
**பின்னோன் வேண்டும் விகற்பம் கூறி**
**அழியா மரபினது வழிநூல்ஆகும்.**

**முன்னோர் நூலின் முடிபு ஒருங்கு ஒத்துப்**
**பின்னோன் வேண்டும் விகற்பம் கூறி**
**அழியா மரபினது வழிநூல் ஆகும்.**

munn̲ōr nūlin̲ mutipu oruṅku oṭṭup
pin̲n̲ōn̲ vēṇṭum vikarpam kūṟi
aḻiyā marapin̲atu vaḻinūl ākum.

## என்றி பவர் -ஆங்கில மொழிபெயர்ப்பு

### Supplemental classics

Secondary works are those which in their subjects exactly agree with the primary originals, the author being at liberty to deviate in necessary instances, taking care, however, to adhere to the marabu, - established and unvarying usage.

## ஒப்புமைப் பகுதி

வழிஎனப் படுவது அதன்வழித்து ஆகும் (தொல்.பொருள்.:)

வழியின் நெறியே நால்வகைத்து ஆகும் (தொல்.பொருள்.:)

தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்த்து
அதர்பட யாத்தலொடு அனைமர பினவே (தொல்.பொருள்.:)

.........அவ்வழித்தாய்ச் சில விகற்பமாம் வழிநூல் (சுவாமி.: 3:1)

வழியெனப் படுவது அதன்வழித் தாகித்
தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்த்து
அதர்பட யாத்தலோடு அனைமர பினவே (இல.விள.: 901)

விழுமிய முதல்நூல் விதித்தவற் றினொடும்
பழுதறச் சான்றோர் படைத்தவுந் தழீஇ
வழுவின்றாய் வரல் வழிநூல் ஆகும் (மாற.அலங்.: 9)

## மயிலை நாதர்

**இ—ள்.:** இவ் வகையால் வருவது வழிநூலாவது, எ — று.

## சங்கர நமச்சிவாயர்

**எ—னின்,** வழிநூலாமாறு **உணர்—ற்று.**

**இ—ள்.:** தொல்லாசிரியர் நூல்களின் பொருள்முடிபு முழு வதுமொத்து, வழிநூல் செய்வோன் முதனூல் உளதாகவும் தான் வழிநூல் செய்தற்குக் காரணமாக வேண்டிய விகற்பங்களையும் உடன் கூறி, அவ்விகற்பங்கள் உணர்வுடையோர் பலர்க்கும் ஒப்ப முடிந்தமையின், அழியாது உலகத்து நின்று நிலவும் மரபினையுடையது வழி நூலாம், **எ—று.**

பின்னோன் வேண்டும் விகற்பங் கூறலாவது; '**பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல**' என்றவற்றை **இறந்தது விலக்கல் எதிரது போற்றல்**' என்னும் உத்திகளான் விலக்கியும் போற்றியும் கூறுதல் முதலியன.

'**முனைவன் கண்டது முதனூலாகும்**' என ஒருமையாற் கூறினார், ஈண்டு முன்னோர் நூல் எனப் பன்மையால் கூறியது, இறைவன் நூலையும் அவன் அருள்வழிப்பட்டுத் தத்தம் மரபின் வரும் குரவர் பலர் நூலையும் தழீஇக்கோடற்கு என்க; எனவே, முதனூல் மாத்திரையாய் நிற்பது இறைவன்

நூலும், வழிநூல் மாத்திரையாய் நிற்பது இறுதிநூலும் அன்றி, இடைநிற்கும் நூல்களெல்லாம் ஒருவற்கு மைந்தனாயினான் மற்றொருவற்குத் தந்தையாயினாற்போல, முதல் நூலாயும் வழி நூலாயும் நிற்கும் என்பது பெற்றாம்.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், வழி நூலாவது இதுவெனக் கூறுகின்றது.

இ–ள்.: **முன்னோர்** – முதல் நூலுடையராகிய பழைய ஆசிரியருடைய, **நூலின் முடிபு ஒருங்கு ஒத்து** – நூலிற் கூறிய பொருள் முடிவு முழுவதும் ஒத்து, **பின்னோன்** – முதல் நூலுடையார்க்குப் பின்னோனாகிய வழி நூற்காரன், **வேண்டும் விகற்பம் கூறி** – தான் செய்யும் நூலின் வேண்டும் வினா விடை கூறி, **அழியா மரபினது** – முதல் நூல் மரபு அழியாது வருவது, **வழி நூலாகும்** – வழி நூலாவது, எ–று.

## விசாகப் பெருமாளையர்

**இது,** வழிநூலாமாறு சொல்லுகின்றது.

**இ–ள்.: முன்னோர்**–கடவுளும் அவனருள் வழிப்பட்டோருஞ் செய்த, **நூலின்** – நூல்களினுடைய, **முடிபு** – பொருண் முடிபுகள். **ஒருங்கு** – முழுவதையும், **ஒத்து**–நிகர்த்து, **பின்னோன்**–வழிநூல் செய்வோன், **வேண்டும்** – முதனூலிருக்கவுந் தான் வழிநூல் வேறே செய்தற்குக் காரணமாக வேண்டுகிற, **விகற்பம்** – வேறுபாடுகளையும், **கூறி** – உடன்சொல்லி, **அழியா**– அழியாமலுலகத்திலே நிலைபெற்று விளங்கா நின்ற, **மரபினது**– குணத்தை யுடையது, **வழிநூலாகும்**–வழிநூலாகும், எ – **று.**

## முகவை இராமானுச கவிராயர்

இது, வழி நூல் இத்தன்மைத் தென உணர்த்துகின்றது.

**இ–ள்.: முன்னோர் நூலின்**– (ஆதிபகவனு மவனருள் வழிப்பட்டோருமாகிய) தொல்லாசிரியர் நூல்களினது, **முடிபு**–சொல்முடிவு பொருள் முடிவுகள், **ஒருங்கொத்து** – முழுவது மொத்திருக்கச் சொல்லி, **பின்னோன்**– வழி நூல் செய்யப் புகுந்தோன், **வேண்டும் விகற்பம்** – (முதனூலிருக்கவுந் தான் வழிநூல் செய்தற்குக் காரணமாக) வேண்டிய வேறுபாடுகளை, **கூறி** – (அதனொடு கூட்டிச்) சொல்லி, **அழியா மரபினது** – (அவ் வேறுபாடுகள் அறிவுடையோர்க்கு ஒத்திருத்தலால்) அழியாதுலகத்து நிலைநிற்குந் தன்மையை யுடையது, **வழி நூலாகும்** – வழி நூலாம், எ – று.

எனவே முதனூலை முழுவது மொத்துச் சிறிது வேறுபட்டிருப்பது வழிநூலென்பதாயிற்று. இதனுள் முன்னோர் நூலினெனப் பன்மையாற் கூறியது, இறைவனூலையும் அவனருள்வழிப்பட்டோர் பலர் நூலையும் முதனூலெனத் தழுவிக்கொளற்கென்க. வேண்டும் விகற்பங் கூறலாவது – பழைய இலக்கணங்களாகி யிக்காலத்து வழங்காதாயின் அவற்றை இறந்தது விலக்க லென்னும் உத்தியால் விலக்கியும், புதிய இலக்கணங்களாகி இக்காலத்து வழங்கி வருமாயின் அவற்றை எதிரதுபோற்ற லென்னும் உத்தியினால் தழுவியுங் கூறுதல் முதலியவாம்.

## கா.கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– முன்னோர் நூலின்** – கடவுளும் அவனை வழிபட்டு அருள் பெற்ற பெரியோரும் செய்த நூல்களின், **முடிபு** – சொல் முடிபு பொருள் முடிபுகள், **ஒருங்கு ஒத்து** – முழுதும் ஒத்திருக்கக்கூறி, பின்னோன் – வழி நூல் செய்யப் புகுந்தோன், **வேண்டும் விகற்பம்** – (தான் வழிநூல் செய்தற்குக் காரணமாக) வேண்டிய சில வேறுபாடுகளை, **கூறி** – (அம்முதனூல் முடிபோடு கூட்டிச்) சொல்லி, **அழியாமரபினது** – கெடாது நிலைநிற்கும் தன்மையுடையது, **வழிநூல் ஆகும்** –.

குறிப்பு :–

எனவே, முதனூலைப் பெரும்பான்மை ஒத்துச் சிறுபான்மை வேறுபட்டிருப்பது வழிநூல் என்பதாயிற்று. விகற்பங் கூறலாவது பழைய இலக்கணங்களாகிப் பிற்காலத்து வழங்காதவற்றை **"இறந்தது விலக்கல்"** என்னும் உத்தியால் விலக்கியும், புதிய இலக்கணங்களாகி முற்காலத்து வழங்காது பிற்காலத்து வழங்குவனவற்றை **"எதிரது போற்றல்"** என்னும் உத்தியால் தழுவியுங் கூறுதல் முதலியன.

## ஆறுமுக நாவலர்

**இ – ள்.: முன்னோர் நூலின் முடிபு ஒருங்கு ஒத்து** – கடவுளும் அவனருள் வழிப்பட்டோருமாகிய தொல்லாசிரியர் நூல்களினுடைய பொருண்முடிபு முழுவதும் ஒத்து, **பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி,** வழிநூல் செய்வோன் முதனூலிருக்கவுந் தான் வழிநூல் செய்தற்குக் காரணமாக வேண்டிய வேறுபாடுகளையும் உடன் சொல்லி, **அழியா மரபினது வழிநூல் ஆகும்** – அவ் வேறுபாடுகள் அறிவுடையோர் பலர்க்கும் ஒப்ப முடிந்தமையால் அழியாது நிலைபெற்று விளங்குந் தன்மையை யுடையது வழிநூலாகும், **எ – று.**

**இ–ம்.:** முதனூலை முழுவதுமொத்துச் சிறிது வேறுபட்டிருப்பது வழி நூல். **எ – ம்.**

பின்னோன் வேண்டும் விகற்பங் கூறலாவது, பழைய இலக்கணங்களாகி இக்காலத்து வழங்காதவைகளை இறந்தது விலக்கலென்னும் உத்தியினாலே விலக்கியும்,

புதிய இலக்கணங்களாகி இக்காலத்து வழங்மவைகளை எதிரது போற்ற லென்னும் உத்தியினாலே தழுவியுங் கூறுதன் முதலியன.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.: முன்னோர் நூலின் முடிபு ஒருங்கு ஒத்து** – கடவுளும் அவனருள் வழிப்பட்டோருமாகிய தொல்லாசிரியர் நூல்களினுடைய பொருண்முடிபு முழுவதும் ஒத்து, **பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி** – வழிநூல் செய்வோன் முதனூ லிருக்கவுந் தான் வழிநூல் செய்தற்குக் காரணமாக வேண்டிய வேறுபாடுகளையும் உடன் சொல்லி, **அழியா மரபினது வழிநூல் ஆகும்** – அவ்வேறுபாடுகள் அறிவுடையோர் பலர்க்கும் ஒப்ப முடிந்தமையால் அழியாது நிலைபெற்று விளங்குந் தன்மையை யுடையது வழி நூலாம். **எ–று.**

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ – ள்.: முன்னோர் நூலின்** – கடவுளும் அவனருள் வழிபட்டோரும் செய்த நூல்களினது, **முடிபு** – பொருள்முடிபு, **ஒருங்கு ஒத்து** – முழுவதும் ஒத்து வேறுபடாமலிருக்க, **பின்னோன்** – வழிநூல் செய்யப் புகுந்தவன், **வேண்டும் விகற்பம் கூறி** – (முதனூல் இருக்கவும் தான் வேறே வழிநூல் செய்தற்குக் காரணமாக) இன்றியமையாத சில வேறுபாடுகளையும் (அதனோடு கூட்டுச்) சொல்லி, **அழியா மரபினது** – (அவ்வேறுபாடுகள் அறிவுடையார் பலர்க்கும் ஒத்திருத்தலால்) அழியாமல் (உலகத்தில்) நிலைநிற்கின்ற தன்மையை யுடையது, **வழி நூல் ஆகும்**—; **எ – று.**

எனவே, முதனூலைப் பெரும்பான்மை ஒத்துச் சிறுபான்மை வேறுபட்டிருப்பது வழிநூ லென்றதாயிற்று. பின்னோன் வேண்டும் விகற்பங் கூறலாவது, பழைய இலக்கணங்களாகிப் பிற்காலத்து வழங்காதவை உளவாயின் அவற்றை **'இறந்தது விலக்கல்'** என்னும் உத்தியால் விலக்கியும், புதிய இலக்கணங்களாகிப் பிற்காலத்து வழங்கி வருபவை உளவாயின் அவற்றை **'எதிரது போற்றல்'** என்னும் உத்தியால் தழுவியும் கூறுதல் முதலியன. வழிநூல்–தொல்காப் பியம்

முதலியன. இவ் வழிநூல்களெல்லாம், ஒருவனுக்கு மகனானவன் தன்மகனுக்குத் தந்தையாவது போல, முதல்நூலை நோக்க வழிநூலாயும் சார்புநூலை நோக்க முதனூலாயும் நிற்கு மென அறிக.

இச் சூத்திரமும், அடுத்த சூத்திரமும் முன்னோர் செய்தவற்றை மேற்கோளாகக் கொண்டன.

## பவானந்தம் பிள்ளை

**இ—ள்.: முன்னோர் நூலின்**—கடவுளும் அவனருள் வழிப்பட்டாருமாகிய தொல்லாசிரியர் நூல்களினுடைய, **முடிபு ஒருங்கு ஒத்து**—பொருண்முடிபு முழுவதும் ஒத்து, **பின்னோன் வேண்டும் விகற்பங்கங் கூறி**—வழிநூல் செய்வோன் (முதனூலிருக்கவுந் தான் வழிநூல் செய்தற்குக் காரணமாக0 வேண்டிய வேறுபாடுகளையும் கூட்டிச் சொல்லி, **அழியா மரபினது வழிநூல் ஆகும்**—(அவ்வேறுபாடுகள் அறிவுடையோர் பலர்க்கும் ஒப்ப முடிந்தமையால் அழியாது உலகத்து நிலை பெற்று விளங்குந்தன்மையுடையது வழி நூலாம். **எ—று.**

இதன் கருத்து, முதனூலை முழுவது மொத்துச் சிறிது வேறுபட்டிருப்பது வழிநூல் என்பதாம்.

பின்னோன் வேண்டும் விகற்பங் கூறலாவது, பழைய இலக்ணங்களாகி இக்காலத்து வழங்காதவைகளை இறந்தது விலக்கலென்னும் உத்தியினாலே விலக்கியும், புதிய இலக்கணங்களாகி இக்காலத்து வழங்குமவைகளை எதிரது போற்றலென்னும் உத்தியினாலே தழுவியுங் கூறுதன் முதலியன.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ—ரை.:** கடவுளும் அவனருள்வழிப் பட்டோரும் செய்த நூல்களினுடைய (பொருள்) முடிபுகள் முழுவதும் ஒத்து, வழிநூல் செய்வோன் (முதனூலிருக்கவும் தான் வழிநூல் வேறே செய்தற்குக் காரணமாக) வேண்டுகிற வேறுபாடுகளையும் உடன் சொல்லி, அழியாமல் (உலகத்திலே நிலைபெற்று) விளங்காநின்ற குணத்தையுடையது வழி நூலாகும். **எ—று.**

## கா.நமச்சிவாய முதலியார்

**முன்னோர் நூலின் முடிபு** – கடவுளும் அவனருள் வழிபட்டோருஞ் செய்த நூல்களின் முடிபுகள், **ஒருங்கு ஒத்து** – முழுவதும் ஒத்து, **பின்னோன்** – வழிநூல் செய்வோன், **வேண்டும்** – தான் வேண்டுகிற, **விகற்பம்கூறி** – வேறுபாடுகளைச் சொல்லி, **அழியா மரபினது** – அழியாத இயல்பினை யுடையதாகச் செய்வது, **வழிநூல் ஆகும்** – வழிநூல் என்று சொல்லப்படும்.

'வேண்டும் விகற்பம்' என்பது முதனூலிருப்பவும் வழி நூல் செய்யப் புகுந்தோன் தான் நூல் செய்தற்கு ஏதுவாயுள்ள பொருள் வேறுபாடுகளை.

## மோசகு பொன்னையா

தொல்லாசிரியர் நூல்களின் பொருள் முடிபுகள் ஒத்திருக்குமாறு சொல்லியும், வழிநூல் செய்வோன் இன்றியமையாத வேறுபாடுகளைக் கூட்டிச் சொல்லியும், பலருக்கும் ஒப்ப முடிந்து அழியாது நிலைபெற்று விளங்குந் தன்மையது வழிநூலாகும், எ–று.

இதனால், இறந்தது விலக்கல், எதிரது போற்றல் என்னும் உத்திகளால் விலக்கியும் போற்றியும் வழிநூல் செய்தல் மரபு என்றவாறாம். ஒன்றன் வழிநூல், பின்னர் வருவதற்கு முதல் நூலாகும் பெற்றியதாகலாம் என்பதும் அறிக.

(7)

# புடைநூல்

8. **இருவர் நூற்கு மொருசிறை தொடங்கித்**
**திரிபுவே றுடையது புடைநூ லாகும்.**

**இருவர் நூற்கும் ஒரு சிறை தொடங்கித்**
**திரிபு வேறு உடையது புடைநூல் ஆகும்.**

iruvar nūrkum oru sirai toṭaṅkit
ṭiripu vē ṛu utaiyaṭu putainūl ākum.

## என்றி பவர் -ஆங்கில மொழிபெயர்ப்பு

### Derivative works

Derivative works are those which participate in the materials of primary and secondary works, agreeing in certain particulars and disagreeing in others.

## ஒப்புமைப் பகுதி

**மேல் இரண்டிற் திரிந்து காலந்தழுவும் புடைநூல்** (சுவாமி.:3:2)

## மயிலை நாதர்

**இ – ள்.: இப் பெற்றியான் வருவது சார்பு நூலாவது, எ – று.**

இம் மூன்றனுள் ஒன்றாய் வருவது நூலென்றறிக.

தொல்லாசிரியர் சூத்திரங்களை ஈண்டு வைத்துப் பயந்தது என்னையோவெனின், உண்டு பயந்தது; யாது?

**“முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும்**
**பொன்னேபோற் போற்றுவ மென்பதற்கும் – முன்னோரின்**
**வேறுநூல் செய்துமெனு மேற்கோளில் லென்பதற்கும்**
**கூறுபழஞ் சூத்திரத்தின் கோள்”**

என்பதனாற் கொள்க.

குறிப்பு :–

சங்கர நமச்சிவாயர் உள்ளிட்ட பிற உரையாசிரியர்கள் இவ் வெண்பாவினைத் தனி நூற்பாவாகக் காட்டுவர்.

## *சங்கர நமச்சிவாயர்*

எ – **னின்,** சார்பு நூலாமாறு **உணர் – ற்று.**

**இ – ள்.:** முதனூல் வழிநூல் என்னும் இருதிறத்து நூல்கட்கும் பொருள் முடிபு ஒருபுடை யொத்து, ஒழிந்தன எல்லாம் ஒவ்வாமையையுடையது சார்பு நூலாம், எ – று.

எனவே, முதனூற்கு, வழிநூலும் சார்புநூலும், ஒருவற்கு மைந்தனும் மருமானும் போலும் என்க.

ஒருநூல், தனக்கு வழிநூலை நோக்கின் முதல்நூலாகவும், முதனூலை நோக்கின் வழிநூலாகவும், அயல்நூலை நோக்கின் சார்புநூலாகவும் நிற்குமாயினும் இம்முத்திறத்தினுள் ஒரு திறத்தின்கண் மற்றொருதிறம் இன்மையின், **‘மும்மையின் ஒன்றாய்’** என்றாார்.

## *கூழங்கைத் தம்பிரான்*

**சூ–ம்,** சார்பு நூலாவது இதுவெனக் கூறுகின்றது.

**இ–ள்.: இருவர் நூற்கும்** – முன்னோர் பின்னோர் என்னும் இருவிருவர் செய்த முதல் நூற்கும் வழி நூற்கும், **ஒரு சிறை தொடங்கி** – வேறிடமாகத் தொடங்கி, **திரிபு வேறுடையது** – சொல் திரியும் பொருள் திரிபுமான வேறுபாடு உடையது, புடை **நூலாகும்** – சார்பு நூலாகும், **எ–று.**

இம்மூன்றினுள் ஒன்றாய் வருவது நூலென்று அறிக.

## விசாகப் பெருமாளையர்

இது, சார்பு நூலாமாறு சொல்லுகின்றது.

**இ–ள்.: இருவர் நூற்கும்** – முதனூல் வழிநூல் என்று மிருவகை நூல்களுக்கும், **ஒரு சிறை** – ஒருபுடை, **தொடங்கி**–பொருண்முடிபு ஒத்து, **வேறு**–மற்றவைகளெல்லாம், **திரிபு**–ஒவ்வாமையை, **உடையது** – உடைத்தாகியது, **புடைனூ லாகும்**–சார்பு நூலாகும், எ – று. (புடை–பக்ஷம்)

## முகவை இராமானுச கவிராயர்

இது, சார்புநூல் இத்தன்மைத் தென்கின்றது.

**இ–ள்.: இருவர் நூற்கும்** – இரு திறத்தவ ரோதிய இருதிறத்து நூல்களுக்கும், **ஒருசிறை**–ஒரு பக்கம், **தொடங்கி** – (சொல்முடிவு பொருள் முடிவுக ளொத்திருக்கும்படி) ஆரம்பிக்கப் பட்டு, **வேறு** –மற்றப் பக்கங்ளெல்லாம், **திரிபுடையது**–(ஒவ்வாமல்) விகற்பத்தைக் கொண்டிருப்பது, புடை **நூலாகும்**–சார்பு நூலாம், எ–று.

எனவே, முதனூல் வழிநூல்களுக்குச் சிறுபான்மை யொத்துப் பெரும்பாலும் வேறுபட்டிருப்பது சார்புநூலென்ப தாயிற்று.பான்மை–பங்கு, திரிபுடையது–புடைநூலென முடித்துக் கொள்க.

## கா.கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– இருவர் நூற்கும்** – (முற்கூறிய) இருவர் (செய்த முதனூல் வழிநூல் என்னும் இருவகை) நூல்கட்கும், **ஒரு சிறைதொடங்கி** – (சொல் முடிபு பொருள் முடிபுகள்) ஒரு புடை (சிறுபான்மை) ஒத்து, **வேறு** – மற்றவை (யெல்லாம்), **திரிபு உடையது** – ஒவ்வாமையுடையது, **புடைநூல் ஆகும்** – சார்பு நூலாம்.

குறிப்பு :–

எனவே, முதனூல் வழிநூல்களுக்குச் சிறுபான்மை ஒத்துப் பெரும்பான்மை வேறுபட்டுள்ளது சார்புநூல் என்றதாயிற்று.

அகத்தியம் முதலியன முதனூல்; தொல்காப்பியம் முதலியன வழிநூல்; நன்னூல் முதலியன சார்புநூல். வழிநூல்கள் எல்லாம், ஒருவனுக்கு மைந்தனாயினான் மற்றொருவனுக்குத் தந்தையாயினாற் போல முதனூலை நோக்க வழிநூலாம் எனவும், சார்பு நூலை நோக்க முதனூலாம் எனவும் அறிக. தொல்காப்பியம் அகத்தியத்திற்கு வழிநூலும், நன்னூலுக்கு முதனூலும், நன்னூல் தொல்காப்பியத்திற்கு வழிநூலும், அகத்தியத்திற்குச் சார்புநூலும் ஆதல் காண்க.

## ஆறுமுக நாவலர்

**இ – ள்.: இருவர் நூற்கும் ஒருசிறை தொடங்கி** – முதனூல் வழிநூல் என்னும் இருவகை நூல்களுக்கும் பொருண் முடிபு ஒரு புடையொத்து, **வேறுதிரிபு உடையது புடைநூல் ஆகும்** – மற்றவைகளெல்லாம் ஒவ்வாமையை யுடையது சார்புநூலாம், **எ–று.**

**இ–ம்.:**

முதனூல் வழிநூல்களுக்குச் சிறுபான்மையொத்துப் பெரும்பாலும் வேறுபட்டிருப்பது சார்பு நூலாம், **எ–ம்.**

திரிபு வேறுடையதும் உற்று நோக்குவோருக்குப் பொருளால் ஒருங்கொத்தே நிற்கும்.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.:– முன்னோர் நூலின் முடிபு ஒருங்கு ஒத்து** – கடவுளும் அவனருள் வழிப்பட்டோருமாகிய தொல்லாசிரியர் நூல்களினுடைய பொருண்முடிபு முழுவதும் ஒத்து, **பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி** – வழிநூல் செய்வோன் முதனூ லிருக்கவுந் தான் வழிநூல் செய்தற்குக் காரணமாக வேண்டிய வேறுபாடுகளையும் உடன் சொல்லி, **அழியா மரபினது வழிநூல் ஆகும்** – அவ்வேறுபாடுகள் அறிவுடையோர் பலர்க்கும் ஒப்ப முடிந்தமையால் அழியாது நிலைபெற்று விளங்குந் தன்மையையுடையது வழி நூலாம். **எ–று.**

**இ–ம்.:–**

முதனூலே முழுவதுமொத்துச் சிறிது விகற்பமுஞ் சேர்க்கப்பட்டிருப்பது வழிநூல். **எ–ம்.**

பின்னோன் வேண்டும் விகற்பங் கூறலாவது, பழைய இலக்கணங்களாகி இக்காலத்து வழங்காதவைகளை இறந்தது விலக்கலென்னும் உத்தியினாலே விலக்கியும், புதிய இலக்கணங்களாகி இக்காலத்து வழங்குமவைகளை எதிரது போற்ற லென்னும் உத்தியினாலே தழுவியுங் கூறுதன் முதலியன.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: இருவர் நூற்கும்** – (கீழ்க்கூறிய) இரு திறத்தார் (செய்த முதனூல் வழிநூல் என்னும் இரு வகை) நூல்கட்கும், **ஒரு சிறை தொடங்கி** – (பொருள் முடிபு) ஒருபுடை (சிறுபான்மை) ஒத்து, **வேறு திரிபு உடையது** –

மற்றவைகளெல்லாம் ஒவ்வாமையை யுடையது, **புடைநூல் ஆகும்** – சார்பு நூலாம்; எ–று.

எனவே முதனூல் வழிநூல்கட்குச் சிறுபான்மை ஒத்துப் பெரும்பான்மை வேறுபட்டுள்ளது சார்புநூலென்ற தாயிற்று. இந் நன்னூல் தொல்காப்பியத்தை நோக்க வழிநூலும், அகத்தியத்தை நோக்கச் சார்புநூலுமாம்.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.: இருவர் நூற்கும்** – முதனூல் வழிநூல் என்னும் இருவகை நூல்களுக்கும், **ஒரு சிறை தொடங்கி** – (பொருண் முடிபு) ஒருபுடை

இது தொல்காப்பியச் சூத்திரம்.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ–ரை.:** (முதனூல் வழிநூல் என்னும்) இருவகை நூல்களுக்கும் ஒருபுடை (பொருண் முடிபு) ஒத்து, மற்றவைக ளெல்லாம் ஒவ்வாமையை யுடைத்தாகியது சார்பிநூலாகும். எ–று.

(புடை – சார்பு) இந்நன்னூல் – தொல்காப்பியத்தை நோக்க வழிநூலும், அகத்தியத்தை நோக்கச் சார்புநூலுமாம்.

## கா.நமச்சிவாய முதலியார்

**இருவர் நூற்கும்** – (முதனூலாசிரியர் வழிநூலாசிரியர் ஆகிய) இருவருடைய நூல்களுக்கும், **ஒரு சிறை தொடங்கி** – ஒருபுடை ஒற்றுமையுடைய தொடக்கத்தைக் கொண்டு, **வேறு திரிபு உடையது** – வேறுபட்ட மாறுபாடுகளை யுடையது, **புடைநூல் ஆகும்** – சார்பு நூலாகும்.

முதனூல் வழி நூல்களுக்குச் சிறுபான்மை யொத்துப் பெரும்பாலும் வேறுபட்டிருப்பது சார்புநூல் என்பது கருத்து. புடை நூல் – சார்பு நூல்.

## மோசகு பொன்னையா

முன்னர்க் கூறப்பட்ட இரு திறத்தாராலுஞ் செய்யப்பட்ட முதல்நூல், வழிநூல் என்னும் இருவகை நூல்களுக்கும் பொருள் முடிபால் ஒரு புடை ஒத்து, மற்றையவை எல்லாம் ஒவ்வாமையை உடையது சார்பு நூல் ஆகும், எ–று.

**(8)**

*முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும்
பொன்னேபோற் போற்றுவ மென்பதற்கும் - முன்னோரின்
வேறுநூல் செய்துமெனுமேற்கோளிலென்பதற்கும்
கூறுபழஞ் சூத்திரத்தின் கோள்

**முன்னோர் மொழிபொருளே அன்றி அவர் மொழியும்
பொன்னேபோல் போற்றுவம் என்பதற்கும் - முன்னோரின்
வேறு நூல் செய்தும் எனும் மேற்கோள் இல் என்பதற்கும்
கூறு பழம் சூத்திரத்தின் கோள்**

munṉōr moḻiporuḷē aṉṟi avar moḻiyum
poṉṉē pōl pōṟṟuvam eṉpataṟkum - munṉōriṉ
vēṟu nūl seytum eṉum mēṟkōḷ il eṉpataṟkum
kūṟu paḻam sūttirattiṉ kōḷ

## சங்கர நமச்சிவாயர்

எ—னின், வழிநூற்கும் சார்புநூற்கும் எய்தியதன் மேற் சிறப்புவிதி உணர்—ற்று;

முன்னோர் நூலின் பொருள் முடிபு முழுவதும் ஒப்பவும் ஒருபுடை ஒப்பவும் கூறுவதன்றியும், அந்நூற் சூத்திரங்களையும் ஒரோவழி எடுத்துக் கூறுக என்றலின்.

இ—ள்.:—முன்னோர் மொழிந்த பொருளையே யன்றி அவர் மொழியினையும் பொன்போலப் போற்றிக் கொள்வம் என்பதற்கு இலச்சினையாகவும், முன்னோர் நூலையே கூறாது அந் நூலினின்றும் வழிநூல் சார்புநூல் செய்தோமாயினும், ஆசிரிய வசனங்களை ஒரோவழி எடுத்து உடன்கூறுதல் வழிநூற்கும் சார்பு நூற்கும் இலக்கணமாதலின் இந்நூலகத்து ஆசிரியவசனம் இல்லை எனக் குற்றம் கூறுவாராதலின் அக்குற்றம் ஒழிதற்காகவும், பழஞ்சூத்திரத்தின் கோளைக் கூறு, எ—று.

ஆசிரியவசனம் எனினும், மேற்கோள் எனினும், பழஞ் சூத்திரத்தின் கோள் எனினும் ஒக்கும்.முன் போற்றுவம் செய்தும் என உளப்பாட்டுத் தன்மைப்பன்மை முற்றாகவும், பின்னர்க் கூறு என முன்னிலை யேவலொருமையாகவும் கூறினமையின், வழிநூலும் சார்புநூலும் செய்வோர் பலர்குழீஇ ஒருவர்க்கு ஒருவர் கூறும் கூற்றாக இச்சூத்திரம் செய்யப்பட்டது என்க.

---

* மயிலைநாதர் , இவ் வெண்பாவினை முன் நூற்பாவின் உரையில் மேற்கோள் பாடலாக ஆண்டுள்ளார்.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** தொல்லாசிரியர் சூத்திரங்களையும் இந்த நூலில் வைத்துக் கூறலாம் என்கின்றது.

**இ—ள்.: முன்னோர் மொழி பொருளேயன்றி** – முன் பழைய ஆசிரியர் நூலின் மொழிந்த பொருளே யன்றி, **அவர் மொழியும்** – அப்பொருளை அவர் பொதிந்த மொழியையும், **பொன்னேபோல்** – பொன்னின் மூடின சீலையும் பொன்போல் எடுத்தது போலப் பொருள் பொதிந்த சொல்லையும் பொருளே போல, **போற்றுவம் என்பதற்கும்** – பேணி வைத்துக் கொள்வோம் என்பது காண்டற்கும், **முன்னோரின்** – பழைய ஆசிரியர் செய்த நூல் போல, **வேறு நூல் செய்துமென்னும்** – வேறு நூல் செய்கின்றோம் என்னும், **மேற்கோள் இல்லென்பதற்கும்** – மேலாய்க்கோட் பாடில்லை என்பதற்கும், **கூறு பழஞ் சூத்திரத்தின்கோள்** – பழஞ் சூத்திரத்தின் கொள்கையைக் கூறுக **எ—று.**

## விசாகப் பெருமாளையர்

**இது,** வழிநூலுக்குஞ் சார்பு நூலுக்கும் முன் சொன்னதற்கு மேலே சிறப்புவிதி சொல்லுகின்றது.

**இ—ள்.: முன்னோர்**—முதனூலோர், **மொழி** – சொன்ன, **பொருளே யன்றி**—பொருளை மாத்திர மல்லாமல், **அவர்** – அவரது, **மொழியும்**—சொல்லையும், **பொன்னே போல்**—பொன்னைப் போலவே, **போற்றுவ மென்பதற்கும்**—காப்பாற்றிக் கொள்வோ மென்பதற்கு அடையாளமாகவும், **முன்னோரின்**—முன்னோர் நூலையே சொல்லாமல் அந் நூலினின்றும், வேறுநூல் வழிநூல் சார்புநூல்களை, **செய்துமெனும்**—செய்தோமாயினும், **மேற்கோள்**—ஆசிரியவசனமானது, **இல்லென்பதற்கும்**—இந்த நூலினிடத் தில்லையென்று சொல்லுங் குற்றமொழிதற்காகவும், **பழஞ்சூத்திரத்தின் கோள்** – முன்னோர்சொல்லிய பெருளையல்லாமலும் அவர் சூத்திரத்தையும், **கூறு**—ஒரோவிடத்திலே சொல்லு, **எ – று.**

எனினு மென்பது, எனுமென விகாரமாயிற்று.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** வழிநூற்குஞ் சார்புநூற்கும் பொதுவிதி மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

**இ—ள்.: முன்னோர்** – முன்பு நூல் செய்தவர்கள், **மொழி பொருளே யன்றி** – சென்ன பொருள்களை (முழுவது மொத்திருக்கவும் ஏகதேச மொத்திருக்கவு மெடுத்துச் சொல்வதும்) அல்லாமல், **அவர் மொழியும்**—அவர்சொற்களையும், (அவ்வாறெடுத்துக் கொண்டு) **பொன்னே போற்**

**போற்றுவ மென்பதற்கும்**–பொன்னைப் போலே பாதுகாக்கக்கடவே மென்பதற்கு ஒரடையாளமாகவும், **முன்னோரின்**–முன்னோரினின்றும், (முன்னோர் செய்த நூலினின்றும்) **வேறுநூல்**–(வழிநூல் சார்புநூலென) வேறுநூல்களை, **செய்து மேனும்**–செய்தோமாயினும், **மேற்கோளிலென்பதற்கும்**–(இதனுள்) ஆசிரியவசன மில்லை யென்பதற்காகவும், (இல்லை யென்னும் அக்குற்றம் நீங்குதற்காகவும்) **பழஞ் சூத்திரத்தின் கோள்**–(அவர்கூறிய) பண்டைச் சூத்திரங்களையும், **கூறு**–(ஒரோரிடங்களில்) எடுத்துச்சொல், **எ – று.**

எனவே, வழிநூல் சார்புநூல்களில் முன்னோர் கூறிய சூத்திரங் களுமோ ரோரிடங்களி லிருக்க வேண்டு மென்பது நிச்சயமாயிற்று. இவ்வாறே, "குறிய தன்முன்ன ராய்தப்புள்ளி" என்னுந் தொல்காப்பியச் சூத்திரம் இந்நூலிலும் இலக்கணவிளக்கத்திலு மெடுத்து வைக்கப்பட்டது. ஆசிரியவசனம், மேற்கோள், பழஞ் சூத்திரக்கோள் என்பன மூன்றும் ஒரேயருத்தத்தில் வரப்பட்ட சொற்கள். அடுக்கி நின்ற குவ் வுருபுகளும் ஏனீற்று வினை யெச்சமும் கூறு என்னு முன்னிலை யேவல் வினை கொண்டு முடிந்தன. பலர் கூடிப் பேசிக் கொண்டு ஒருவனைப் பார்த்து முடிவு சொன்னதாக இச் சூத்திரஞ் செய்யப்பட்டது.

## கா.கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– முன்னோர்** – முதனூல் செய்தவர், **மொழிபொருளே அன்றி** – சொன்ன பொருள்களையே முழுவதும் ஒத்திருக்கவும் சிறுபான்மை ஒத்திருக்கவும் எடுத்துச் சொல்வதுமல்லாமல், **அவர் மொழியும்** – அவர்கள் சொற்களையும், **பொன்னேபோல் போற்றுவம் என்பதற்கும்** – பொன்னைப் போலவே (விரும்பி) அமைத்துக் கொள்ளக் கடவோம் என்பதற்கு அடையாளமாகவும், **முன்னோரின்** – முன்னோர் செய்த நூல்களினின்றும், **வேறு நூல்** – வேறாகிய வழிநூல் சார்புநூல்களை, **செய்தும் எனும்** – செய்தோமாயினும், **மேற்கோள் இல் என்பதற்கும்** – 'இந்நூலுள் ஆசிரிய வசனம் இல்லை' என்னும் குறை நீங்குதற்காகவும், **பழஞ்சூத்திரத்தின்கோள்** – (அவர் கூறிய) பழைய சூத்திரங்களாகிய மேற்கோளையும், **கூறு** – ஒரோரிடத்தில் சொல்லு.

குறிப்பு :– எனவே, வழிநூல் சார்புநூல்களில் முதனூலினின்று மேற்கொள்கூறல் இலக்கணம் என்பதாயிற்று. 'எனினும்' என்பது 'எனும்' என வந்தது. முன்பு 'போற்றுதும்', 'செய்தும்' என உளப்பாட்டுத் தன்மைப்பன்மை முற்றுக்களாகவும், பின்பு, 'கூறு' என ஒருமையேவல் முற்றாகவும் கூறினமையால் இச்சூத்திரம் பலர் கூடிப்பேசிப் பிறகு ஒருவனைப் பார்த்து முடிவு சொன்னதாகச் செய்யப்பட்டதென்றறிக.

## ஆறுமுக நாவலர்

**இ – ள்.: முன்னோர் மொழி பொருளே அன்றி** – முன்னோர் சொல்லிய பொருளையே யன்றி, **அவர் மொழியும் பொன்னே போல் போற்றுவம் என்பதற்கும்**–அவரது சொல்லையும் பொன்னைப் போலவே காத்துக்கொள்வோ மென்பதற்கு அடையாளமாகவும், **முன்னோரின் வேறு நூல் செய்தும் எனும்**– முன்னோர் நூலையே சொல்லாது அந்நூலினின்றும் வழிநூல் சார்புநூலென வேறுநூல் செய்தோமாயினும், **மேற்கோள் இல் என்பதற்கும்** – ஆசிரிய வசனம் இந்நூலினிடத்து இல்லை யென்று சொல்லுங் குற்றம் ஒழிதற்காகவும், **பழஞ் சூத்திரத்தின் கோள் கூறு**–அவர் சொல்லிய பழஞ் சூத்திரங்களையும் ஓரோரிடங்களில் எடுத்துச் சொல்லு, **எ – று.**

எனினு மென்பது எனுமென இடைக்குறைந்து நின்றது. ஆசிரியவசனம், மேற்கோள், பழஞ் சூத்திரம் என்பவை ஒருபொருட் சொற்கள்.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். முன்னோர் மொழி பொருளே அன்றி** – முன்னோர் சொல்லிய பொருளையே யன்றி, – **அவர் மொழியும் பொன்னே போல் போற்றுவம் என்பதற்கும்** – அவரது சொல்லையும் பொன்னைப் போலவே காத்துக் கொள்வோ மென்பதற்கு அடையாளமாகவும், – **முன்னோரின் வேறுநூல் செய்தும் எனும்** – முன்னோர் நூலினின்றும் வழி நூல் சார்புநூலென வேறுநூல் செய்தோமாயினும், **மேற்கொள் இல் என்பதற்கும்** – ஆசிரிய வசனம் இந்நூலி னிடத்து இல்லை யென்று சொல்லுங் குற்றம் ஒழிதற்காகவும், **பழஞ் சூத்திரத்தின் கோள் கூறு** – அவர் சொல்லிய பழஞ் சூத்திரங்களையும் ஓரோரிடங்களில் எடுத்துச் சொல்லு. **எ–று.**

எனினுமென்பது எனுமென இடைக்குறைந்து நின்றது. ஆசிரியவசனம், மேற்கோள், பழஞ்சூத்திரம் என்பவை ஒருபொருட்சொற்கள்.**"குறியதன் முன்னராய்தப்புள்ளி"** என்பது அகத்தியத்திலிருந்து தொல்காப்பியத்திலும் இந்நூலிலுங் கொணரப்பட்டு மேற்கோளாயினது காண்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்

## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: முன்னோர் மொழி பொருளே அன்றி** – முதனூல் செய்தவர் சொன்ன பொருள்களையே பெரும்பாலும் ஒத்திருக்கவும் சிறுபான்மை ஒத்திருக்கவும் எடுத்துச் சொல்வது மல்லாமல், **அவர் மொழியும்** – அவர்களுடைய சொற்களையும், **பொன்னே போல் போற்றுவம்** – பொன்னைப் போலவே விரும்பி வைத்துக்கொள்ளக் கடவோம்', **என்பதற்கும்** – என்னுங்

கொள்கைக்கு அடையாளமாகவும்,' **முன்னோரின் வேறுநூல் செய்தும் எனும்** – முன்னோர் செய்த நூலையே சொல்லாமல் அந்நூலி னின்றும் வழிநூல் சார்புநூல் என வேறுநூலைச் செய்தோமாயினும், **மேற்கோள் இல்** – (இந்நூலுள்) ஆசிரியவசனம் இல்லை என்பதற்கும், **என்று** – சொல்லுங் குறை ஒழிவதற்காகவும், **பழஞ் சூத்திரத்தின் கோள் கூறு** – (அவர் சொல்லிய) பழஞ் சூத்திரங்களையும் ஒவ்வோரிடத்தில் எடுத்துச் சொல்லக் கடவாய்; **எ – று.**

எனவே, வழிநூல் சார்புநூல்களில் முன்னோர் கூறிய செய்யுள் ஒரோவிடத்தில் இருத்தலும் இலக்கணமாயிற்று.

தொல்காப்பியத்திலிருந்தும் பிற நூல்களிலிருந்தும் சிற்சில சூத்திரங்கள் இந்நூலில் ஆங்காங்கு எடுத்துக்கொள்ளப் பட்டிருத்தல் காண்க.

எனும் – எனினு மென்பதன் விகாரம். ஆசிரிய வசனம், மேற்கோள், பழஞ் சூத்திரக்கோள் என்பன ஒருபொருட் சொற்கள்.

முன்னே **'போற்றுவம்'**, **'செய்தும்'** என உளப்பாட்டுத் தன்மைப்பன்மை முற்றுக்களாகவும், பின்னே **'கூறு'** என முன்னிலை யேவலொருமை முற்றாகவும் கூறியதனால், இச்சூத்திரம், பலர்கூடிப் பேசிப் பின்பு ஒருவனை நோக்கி முடிவு சொன்னதாகச் செய்யப்பட்டதென அறிக.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.: முன்னோர் மொழி பொருளே அன்றி** – முன்னோர் சொல்லிய பொருளையே யன்றி, **அவர் மொழியும் பொன்னேபோல் போற்றுவம் என்பதற்கும்** – அவரது சொல்லையும் பொன்னைப் போலவே காத்துக் கொள்வோ மென்பதற்கு அடையாளமாகவும், **முன்னோரின் வேறு நூல் செய்தும் எனும்**– முன்னோல் நூலையே சொல்வோமாயினும், **மேற்கோள் இல் என்பதற்கும்** – ஆசிரியவசனம் இந்நூலி னிடத்து இல்லையென்று சொல்லுங் குற்றம் ஒழிதற்காகவும், **பழஞ் சூத்திரத்தின் கோள் கூறு** – அவர் சொல்லிய பழஞ் சூத்திரங்களையும் ஓரோரிடங்களில் எடுத்துச் சொல்லு, **எ–று.**

'எனினும்' என்பது 'எனும்' என இடைக்குறைந்து நின்றது. ஆசிரியவசனம்.மேற்கோள், பழஞ்சூத்திரம் என்பவை ஒருபொருட் சொற்கள்.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ–ரை.:** (முதனூல் வழிநூல் என்னும்) இருவகைநூல்களுக்கும் ஒருபுடை (பொருண் முடிபு) ஒத்து, மற்றவைக ளெல்லாம் ஒவ்வாமையை யுடைத்தாகியது சார்பிநூலாகும். **எ–று.**

(புடை – சார்பு) இந் நன்னூல் – தொல்காப்பியத்தை நோக்க வழிநூலும், அகத்தியத்தை நோக்கச் சார்புநூலுமாம்.

## கா.நமச்சிவாய முதலியார்

**முன்னோர் நூலின் முடிபு** – கடவுளும் அவனருள் வழிப்பட்டோருஞ் செய்த நூல்களின் முடிபுகள், **ஒருங்கு ஒத்து** – முழுவதும் ஒத்து, **பின்னோன்** – வழிநூல் செய்வோன், **வேண்டும்** – தான் வேண்டுகிற, **விகற்பம்கூறி** – வேறுபாடு களைச் சொல்லி, **அழியா மரபினது** – அழியாத இயல்பினை யுடையதாகச் செய்வது, **வழிநூல் ஆகும்** – வழிநூல் என்று சொல்லப்படும்.

> 'வேண்டும் விகற்பம்' என்பது முதனூலிருப்பவும் வழி நூல் செய்யப் புகுந்தோன் தான் நூல் செய்தற்கு ஏதுவாயுள்ள பொருள் வேறுபாடுகளை.

## மோசகு பொன்னையா

முன்பு நூல் செய்தவர் சொன்ன பொருளை மட்டுமேயல்லாமல், அவரது சொற்களையும் பொன்போல் பேணு வோம் என்பதற்கு அடையாளமாகவும், அவர் செய்த நூலினும் வேறுபட்ட நூலைச் செய்வது கொள்கையன்று என்பதற்கும், ஒரோவழி அவர் சொல்லிய பழஞ் சூத்திரங்களை மேற்கோளாக எடுத்துச் சொல்லுக, எ–று.

**(8)**

# நாற்பொருட் பயன்

9. அறம்பொரு ளின்பம்வீ டடைதனூற் பயனே.

**அறம் பொருள் இன்பம் வீடு அடைதல் நூல் பயனே**

aṛam poruḷ iṉpam vītu ataiṭal nūl payaṉē

## என்றி பவர் –ஆங்கில மொழிபெயர்ப்பு

### The benefits from any classical work

The four cardinal blessings, or ultimate objects to be aimed at in the study of work, are the attainment of virtue, wealth, pleasure and heaven.

## ஒப்புமைப் பகுதி

............ அறம்ஆதி பயன் (சுவாமி.:9:2)

அறம்பொரு ளின்பம்வீடு அவைபகவர் நாற்பொருளே (மாறஅலங்: 14)

## மயிலை நாதர்

இ–ள்.: இந் நாற்பொருளையும் பெறுதல் நூற்குப் பயனாவது, எ– று.

## சங்கர நமச்சிவாயர் - சிவஞான முனிவர்

எ – னின், 'நாற்பொருட்பயன்' என்றதனை வகுத்து உணர் – ற்று.

இ–ள்.: *அறமும், பொருளும், இன்பமும், வீடடைதலும் ஆகிய இந்நான்கும் நூல் தழுவப்படும் பயனாம், எ – று.*

> **வீடு என வாளா கூறாது வீடடைதல் என்றார்; வீடு என்பது பேரின்பமாகிய சாத்தியமாகலின். நான்கும் என்னும் செவ்வெண்ணின் தொகையோடு முற்றும்மை விகாரத்தால் தொக்கன.**

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், முறையே நாற்பொருட் பயன் ஆமாறு கூறுகின்றது.

இ–ள்.: **அறம் பொருள் இன்பம் வீடு** – அறப்பயன் எனவும் பொருட் பயன் எனவும் காமப்பயன் எனவும் வீட்டுப்பயன் எனவும், **அடைதல்** –இந்நால் வகைப் பொருட்பயனையும் அடைதல், **நூற் பயனே**–நூற்குப் பயனாவது, எ–று.

## விசாகப் பெருமாளையர்

இது, முன்னே நாற்பொருட் பயனென்றதை வகுத்துச் சொல்லுகின்றது.

இ–ள்.: **அறம்**–தருமமும், **பொருள்**–அர்த்தமும், **இன்பம்**–காமமும், **வீட்டைதல்**–மோக்ஷமடைதலும், **நூல்** – நூலிற் சொல்லப்படும், **பயன்**–பிரயோசனமாம், எ–று.

## முகவை இராமானுச கவிராயர்

இது, நிறுத்தமுறையே நாற்பொருட் பயனென்றதை வகுத்துணர்த்துகின்றது.

இ–ள்.: இந்நான்கினையும் நூலை யோதினோர் அடைவது நூலால் வரும் பிரயோசனமாம், எ – று.

> **அறம்** – தருமம், **பொருள்** – அர்த்தம், **இன்பம்** – காமம், **வீடு** – மோக்ஷம். அறமும் பொருளும் இன்பமும் வீடடைதலும் நூற்பயனெனினும் அமையும்.

## கா.கோபாலாசாரி - தி.கோ.ரங்காசாரி

**உரை :– அறம்பொருள் இன்பம் வீடு அடைதலே** – அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பொருளையும் அடைவதே, **நூல்பயன்** – நூலிற் பெறப்படும் பயனாகும்.

குறிப்பு :–

இவற்றை முறையே **தர்மார்த்தகாமமோக்ஷ** மென்பர் வடநூலார். ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: அறம் பொருள் இன்பம் வீடு அடைதல்** – தருமமும் அர்த்தமுங் காமமும் மோக்ஷமடைதலுமாகிய நான்கும், **நூற் பயன்** – நூலால் எய்தும் பிரயோசனமாம், **எ – று.**

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். அறம் பொருள் இன்பம் வீடு அடைதல்** – தருமமும் அருத்தமுங் காமமும் மோக்ஷ மடைதலுமாகிய நான்கும், **நூற்பயன்** – நூலால் எய்தும் பிரயோசனமாம். **எ–று.**

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: அறம்** – தருமமும், **பொருள்** – அர்த்தமும், **இன்பம்** – காமமும், **வீடு** – மோக்ஷமும், (ஆகிய இந்நான்கு புருஷார்த்தங் களையும்), **அடைதல்** – அடைவது, **நூல் பயன்** – நூலால் அடையும் பிரயோசனமாம்; **எ – று.**

## பவானந்தம்பிள்ளை

**இ–ள்.: அறம் பொருள் இன்பம் வீடு அடைதல்** – தருமமும் அர்த்தமுங் காமமும் மோக்ஷமடைதலுமாகிய நான்கும், **நூற்பயன்** – நூலால் எய்தும் பிரயோசனமாம். **எ–று.**

இவ்வெண்பா மயிலைநாதர் உரைப் பிரதியில் தனிச் சூத்திரமாகவின்றி மேற்சூத்திர உரையில் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ–ரை.:** அறம், பொருள், இன்பம், மோட்சம் ஆகிய (இவைகளை) அடைதல் நூலிற் சொல்லப்படும் பயனாம். **எ–று.**

## கா.நமச்சிவாய முதலியார்

அறம் – தருமமும், பொருள் – பொருளும், இன்பம் – இன்பமும், வீடு – முத்தியும், அடைதல் – பெறுதல், நூல் பயன் – நூலினால் அடையத்தகும் பயனாகும்.

ஈதலறம் வினைவிட் டீட்டல்பொருள் எஞ்ஞான்றும்
காத லிருவர் கருத்தொருமித் – தாதரவு
பட்டதே யின்பம் பரனைநினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு.

என்பதால் நாற்பொருள் இன்னது என்பது அறிக.

## மோசசு பொன்னையா

அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பொருளையும், ஓதினார் அடைவதே நூலால் வரும் பயனாம், எ–று.

(9)

# எழுவகை மதம்

10. எழுவகை மதமே [1]யுடம்படன் மறுத்தல்
பிறர்தம் மதமேற் கொண்டு களைவே
தாஅ னாட்டித் தனாது நிறுப்பே
இருவர் மாறுகோ ளொருதலை துணிவே
பிறர்நூற் குற்றங் காட்ட லேனைப்
பிறிதொடு படாஅன் றன்மதங் கொளலே.

எழு வகை மதமே உடம்படல் மறுத்தல்
பிறர் தம் மத மேல் கொண்டு களைவே
தா அன் நாட்டித் தனாது நிறுப்பே
இருவர் மாறுகோள் ஒருதலை துணிவே
பிறர் நூல் குற்றம் காட்டல் ஏனைப்
பிறிதொடு படாஅன் தன் மதம் கொளலே

eḻu vakai maṭamē utampatal maṟuṭṭal
piṟar ṭam maṭa mēl koṇṭu kaḻaivē
ṭāan̲ nāttiṭ ṭan̲āṭu niṟuppē
iruvar māṟukōḻ oruṭalai ṭuṇivē
piṟar nūl kuṟṟam kāttal ēn̲aip
ṟiṭotu patāan̲ ṭan̲ maṭam koḻalē

---

பாட வேறுபாடு:–

1. உடன்படல்

## என்றி பவர் -ஆங்கில மொழிபெயர்ப்பு

### The seven objects contemplated by an author

The seven *madams* or principles of authorship, or rather objects to be contemplated by an author are; agreement or acquiescence; rejection or reputation; conditional adoption and rejection of other's tenets; establishing and maintaining an hypothesis; inclining to, and adopting one or other of two contrary opinions; exposing the faults of other works; unyielding and positive adherence to one's own opinions (dogmatism).

## ஒப்புமைப் பகுதி

**மறுத்தல் உடன்படல் பிறர்நூற் புரையுரைத்தல் இருவர்**
**மற்றொருபால் துணிவு பிறர்மதங் கொண்டுதிறத்தொடு**
**சொற்றவை நிறுத்தல் பிறர்மதம்**
**தீர்த் தேதன்**
**திறம் கொளலில் ஏழுமதங்கள்.........** (சுவாமி.: 9:1–2)

## மயிலை நாதர்

இ–ள்.: இவ் வெழுமதமும்பட வருதல் நூற்கு இயல்பு, எ – று.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், எழுமதம் என்றதனை வகுத்து உணர்–ற்று.

இ–ள்.: மேல் எழுவகை மதம் என்று சொல்லப்பட்டன, இங்ஙனம் பிறர் மதத்தை உடன்படல் முதலியவாக விதந்தன வாம், எ–று.

நூல் தழுவிய மதங்கள் பலவாயினும், தலைமை பற்றிய மதம் ஏழென்பது நூல்வழக்காம் என்க. குற்றம் பத்து, அழகு பத்து, உத்தி முப்பத்திரண்டு என்பனவும் அன்ன.

இவ் எழுவகை மதங்கட்கும், பதப்பொருளோடு உதாரணம் விளங்க இந்நூலுள் வந்துழி வந்துழிக் காட்டுதும்; ஆங்காங்கு உணர்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், ஏழுவகை மதமாவது இவையெனக் கூறுகின்றது.

**இ—ள்.: எழுவகை மதமே** — எழுவகை ஆசிரியர் மத விகற்பமாவன, **உடன்படல்** — முன்னூலார் கூறிய கோட்பாடு ஆகியவற்றிற்கு உடன்படுதலும், **மறுத்தல்** — சிலவற்றை வினாவும் விடையுங் கூறி மறுத்தலும், **பிறர்தம் மதம் மேற் கொண்டு களைவே** — பிறர் நூலிற் கூறிய கோட்பாட்டைத் தன்னூலில் எடுத்துக்காட்டி அவையிற்றைக் களைதலும், **தாஅனாட்டித் தனாது நிறுப்பே** — தானே புதிதாய் ஓர் இலக்கணம் நாட்டித் தன்னுடைய உத்திகொண்டு அவை நிலை நிறுத்தலும், **இருவர் மாறுகோள் ஒரு தலை துணிவே** — இருவர் மாறுபட்ட வழக்கிற்றான் ஒன்றைத் துணிந்து எடுத்தலும், **பிறர்நூல் குற்றங் காட்டல்** — பிறருடைய நூல்களிலேயுள்ள குற்றங்களைத் தோற்றுவித்தலும், **ஏனைப் பிறிதொடு படாஅன் தன் மதம் கொளலே** — தான் கூறிய உவமை உத்தி முதலாகிய கற்பனைகள் தன் நூலொழிந்த பிறிது நூலின் காணாதவை யாய்த் தன் மதத்துக்கே உரித்தாகத் தோற்றுவித்தலுமாம், **எ—று.**

## விசாகப் பெருமாளையர்

**இது,** முன் எழுவகை மதமென்றதை வகுத்துச் சொல்லுகின்றது.

**இ—ள்.: எழுவகை மதம்** — எழுவகை மதமாவன, **உடன்படல்** — பிறர் மதத்திற்கு உடன்படலும், **மறுத்தல்** — பிறர் மதத்தை மறுத்தலும், **பிறர்தம் மதமேற் கொண்டு களைவு**—பிறர் மதத்திற்கு உடன்பட்டுப் பின்பு மறுத்தலும், **தா அனாட்டித் தனாது நிறுப்பு** —தானொரு பொருளை எடுத்து நாட்டி அதனை வருமிடந் தோறும் நிறுத்துதலும், **இருவர் மாறுகோளொரு தலை துணிவு** — இருவர் ஒன்றற்கொன்று விரோதமாகக் கொண்ட விரண்டனுள் ஒன்றனிடத்துத் துணிதலும், **பிறர் நூற் குற்றங் காட்டல்** — பிறர் நூல்களிலிருக்கின்ற குற்றத்தைக் காட்டுதலும், **பிறிதொடு படாஅன் றன் மதங் கொளல்** — பிறர் மதத்திற்கு உடன்படானாகித் தன்மதத்தையே கொள்ளுதலுமாம், **எ—று.**

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** நிறுத்தமுறையே எழுவகை மதமென்றதை வகுத்துணர்த்து கின்றது.

**இ—ள்.:** எழுவகை மதமென்பன, **உடன்படல்** — பிறர் மதத்தினுக்குத் தானுடன்படுதலும், **மறுத்தல்** — அதனை விலக்குதலும், **பிறர் தம் மதமேற் கொண்டு களைவு** — பிறர் மதத்தை யங்கிகரித்துத் தள்ளி விடுதலும், **தானாட்டித் தனாது நிறுப்பு** — தானே யொன்றைத் தாபித்து அதனை யிடமிடந் தோறும் நிலை நிறுத்துதலும், **இருவர் மாறுகோளொ ருதலை துணிவு** — இருவராலே மாறுபட்ட விரண்டினுள் ஒன்றை நீக்கி யொன்றைத் துணிந்தெடுத்துக் கொள்ளுதலும், **பிறர்நூல் குற்றங் காட்டல்** — பிறருடைய நூலிலுள்ள குற்றங்களை எடுத்துக்காட்டுதலும், **ஏனை**—மற்று, **பிறிதொடு படான் தன்மதங் கொளல்** — பிறர் மதத்தோடு கலவாதவனாகித் தன் மதத்தைத் தான் ஆண்டு கொள்வதுமாம், **எ—று.**

மதமென்பது – மனத்தின் கொள்கை. நூல் தழுவிய மதங்கள் பலவாயிருக்கத் தலைமை நோக்கி மதமேழென்பது நூல்வழக்கு. குற்றம் பத்து, அழகு பத்து, உத்தி முப்பத்திரண்டு என்பனவு மிப்படியே. இவ்வெழுவகை மதங்களுக்கும் குற்றம் அழகு உத்தி யென்பனவற்றிற்கும் உதாரணமிந்த நூலுள்ளே வந்தவந்த இடங்களிற் காட்டப்படும்; அந்தந்த இடங்களிற் கண்டு கொள்க. எழுவகை மதமென்பன இவை யென முடித்துக் கொள்க.

## கா.கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை:– எழுவகை மதம்** – (முன்சொன்ன) ஏழுவகைப்பட்ட மதங்களாவன: **உடன்படல்** – (பிறர் கொள்கையைத்தான்) ஒத்துக் கொள்ளுதலும், **மறுத்தல்** – (அதனை) மறுப்பதும், பிறர்தம் மதம் **மேற்கொண்டு களைவு** – பிறருடைய கொள்கையை அங்கீகரித்துப் பின்பு தள்ளிவிடுதலும், **தாஅன் நாட்டி** – தானே (ஒரு பொருளை எடுத்துத்) தாபித்து, **தனாது நிறுப்பு** – அதனை (இடந்தோறும்) நிலைநிறுத்தலும், **இருவர் மாறுகோள்** – இருவர் விரோதமாகக் கொண்ட விஷயத்தில், **ஒரு தலை துணிவு** – ஒரு பக்கந் துணிந்து (ஒன்றை நீக்கி மற்றொன்றைக்) கொள்ளுதலும், **பிறர்நூல் குற்றம் காட்டல்** – பிறர் நூலிலுள்ள தோஷங்களை எடுத்துக் காட்டலும், **ஏனை** – மற்றும், **பிறிதொடுபடாஅன் தன்மதம்கொளல்** – பிறர்கொள்கை யோடு கலவாமல் தன் கொள்கையையே கொள்ளுதலுமாம்.

குறிப்பு :– 'மதம்' என்பது மனக்கொள்கை (அபிப்பிராயம்.) நூல்கள் தழுவும்மதங்கள் பலவாயினும் அவற்றுள் சிறப்புடைமை பற்றி ஈண்டு மதம் 'ஏழு' என்றார். மதங்கள் பிறவுமுள என்பதை 'ஏனை' என்றதனால் அமைத்துக் கொள்ளினும் ஒக்கும்.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: எழுவகை மதம்** – எழுவகை மதமாவன, **உடன்படல்**–பிறர் மதத்திற்குத் தான் உடன்படுதலும், **மறுத்தல்**–பிறர் மதத்தை மறுத்தலும், **பிறர்தம் மதம் மேற்கொண்டு களைவு**– பிறர் மதத்திற்கு உடன்பட்டுப் பின்பு மறுத்தலும், **தான் நாட்டித்தனாது நிறுப்பு** – தானே ஒருபொருளை எடுத்து நாட்டி அதனை வருமிடந்தோறும் நிறுத்துதலும், **இருவர் மாறுகோள் ஒருதலை துணிவு**– இருவரால் விரோதமாகக் கொள்ளப்பட்ட இரண்டனுள் ஒன்றனிடத்துத் துணிதலும், **பிறர் நூற் குற்றங் காட்டல்** – பிறர் நூலிலுள்ள குற்றத்தை எடுத்துக் காட்டுதலும், **பிறிதொடு படான் தன்மதம் கொளல்** – பிறர் மதத்திற்கு உடன்படானாகித் தன்மதத்தையே கொள்ளுதலுமாம், **எ–று.**

## வ. குமாரசாமிப் புலவர்

**இ—ள். எழுவகை மதம்** – எழுவகை மதமாவன, **உடன்படல்** – பிறர் மதத்திற்குத் தான் உடன்படுதலும், **மறுத்தல்** – பிறர் மதத்தை மறுத்தலும், **பிறர்தம் மதம் மேற்கொண்டு களைவு** – பிறர்மதத்திற்கு உடன்பட்டுப் பின்பு மறுத்தலும், **தாஅன் நாட்டித் தனாது நிறுப்பு** – தானே ஒருபொருளை எடுத்துகாட்டி அதனை வருமிடந் தோறும் நிறுத்துதலும், **இருவர் மாறுகோள் ஒருதலை துணிவு** – இருவரால் விரோதமாகக் கொள்ளப்பட்ட இரண்டனுள் ஒன்றனிடத்துத் துணிதலும், **பிறர்நூற் குற்றம் காட்டல்** – பிறர் நூலிலுள்ள குற்றத்தை எடுத்துக் காட்டுதலும், **பிறிதொடு படாஅன் தன்மதம் கொளல்** – பிறர் மதத்திற்கு உடன்படானாகித் தன்மதத்தையே கொள்ளுதலுமாம்.

> பிறர்தம்மதமேற் கொண்டு களைவு என்பது பிறர்மதத்தை ஏற்றுக் கொண்டு தள்ளிவிடுதலாயின், அது விரோதமன்றோ வெனின்; ஒருவிதத்தாலுடன்பட்டு மற்றொரு விதத்தான் றள்ளி விடுதலாதலின் விரோதமன் றென்க. இவ்வகையாகக் கொண்டு விடுதலாகிய இதனை வடநூலார் **பக்ஷாந்தரமென்பர்.**

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ—ள்.: எழுவகை மதம்** – எழுவகை மதங்களாவன, **உடன்படல்**– (பிறர் மதத்திற்குத் தான்) உடன்படுதலும், **மறுத்தல்** – (பிறர் மதத்தை) மறுத்தலும், **பிறர்தம் மதம் மேற் கொண்டு களைவே** – பிறர் மதத்தை ஒருவாறு அங்கீகரித்து (ப்பின்பு) மறுத்து விடுதலும், **தான் நாட்டி தனாது நிறுப்பே**–தானே ஒருபொருளை எடுத்துத் தாபித்து அதனை (இடந்தோறும்) நிலைநிறுத்துதலும், **இருவர் மாறுகோள் ஒருதலை துணிவே** – ஒன்றற்கு ஒன்று விரோதமாக இருவராலே கொள்ளப்பட்ட இரண்டு விஷயங்களுள் (ஒன்றை நீக்கி) மற்றொன்றைத் துணிந்து எடுத்துக் கொள்ளுதலும், **பிறர் நூல் குற்றம் காட்டல்**–பிறர்செய்த நூல்களிலுள்ள குற்றங்களை எடுத்துக் காட்டுதலும், **ஏனை**– மற்றும், **பிறிதொடுபடாஅன் தன் மதம் கொளல்** – பிறர் மதத்தோடு கலவாதவனாய்த் தன்மதத்தையே தான் கொள்ளுதலுமாம்; எ – று.

> மதம் – கொள்கை. இம் மதங்கட்கும், மேற்சொல்லப்படும் அழகு உத்தி யென்பவற்றிற்கும் உதாரணம், இந்நூலுட் பின்வரு மிடங்களிற் பெரும்பாலும் காட்டப்படும்.

## பவானந்தம் பிள்ளை

**இ—ள்.: எழுவகை மதம்** –எழுவகை மதமாவன: **உடன்படல்**–பிறர் மதத்திற்குத் தான் உடன்படுதலும், **மறுத்தல்** – பிறர்மதத்தை மறுத்தலும்,

**பிறர்தம் மதம் மேற்கொண்டு களைவு** – பிறர்மதத்திற்கு உடன்பட்டுப் பின்பு மறுத்தலும், **தான் நாட்டித் தனாது நிறுப்பு** – தானே ஒரு பொருளை எடுத்து நாட்டி அதனை வருமிடந்தோறும் நிலை நிறுத்துதலும், **இருவர் மாறுகோள் ஒருதலை துணிவு** – இருவரால் விரோதமாகக் கொள்ளப்பட்ட இரண்டனுள் ஒன்றைத் துணிந்தெடுத்துக் கொள்ளுதலும், **பிறர்நூற் குற்றங் காட்டல்** – பிறர் நூலிலுள்ள குற்றங்களை எடுத்துக் காட்டுதலும், **பிறிதொடு படான் தன் மதம்கொளல்** – பிறர் மதத்திற்கு உடன்படானாகித் தன்மதத் தையே கொள்ளுதலுமாம். **எ–று.**

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ–ரை.:** எழுவகை மதமாவன: (பிறர்மதத்திற்குத்) தான் உடன் படுதலும், (அதனை) மறுத்தலும், பிறர் மதத்திற்கு உடன் பட்டுப் பின்பு மறுத்தலும், தான் ஒரு பொருளை எடுத்து நாட்டி (அதனை) வருமிடந்தோறும் நிறுத்தலும், இருவராலே விரோதமாகக் கொண்ட (இரண்டனுள்) ஒன்றனிடத்துத் துணிதலும், பிறர்நூல்களிலுள்ள குற்றத்தைக் காட்டுதலும், பிறர் மதத்திற்கு உடன்படானாகித் தன் மதத்தையே கொள்ளுதலுமாம். **எ–று.**

(மதம் – கொள்ளை) நூல் தழுவிய மதங்கள் பலவா யிருக்கத்
தலைமை நோக்கி மதம் ஏழென்பது நூல் வழக்கு.

## கா.நமச்சிவாய முதலியார்

**எழுவகை மதம்** – எழுவகைப்பட்ட மதங்களாவன, **உடன்படல்** – (பிறர் மதத்திற்குத் தான்) உடன்படுதலும், **மறுத்தல்** – (பிறர் மதத்தை) மறுத்தலும், **பிறர் தம் மதம் மேற் கொண்டு களைவு** – பிறர் மதத்திற்கு உடன்பட்டுப் பின்பு மறுத்தலும், **தான் நாட்டி தானாது நிறுப்பு** – தான் ஒரு பொருளை எடுத்து நாட்டி அதனை (வருமிடந்தோறும்) நிறுத்துதலும், **இருவர் மாறுகோள் ஒருதலை துணிவு** – இருவர் ஒன்றற்கொன்று மாறாகக்கொண்ட (இரண்டனுள்) ஒன்ற னிடத்துத் துணிதலும், **பிறர் நூல் குற்றம் காட்டல்** – பிறர் நூல்களி லிருக்கின்ற குற்றத்தை எடுத்துக் காட்டுதலும், **பிறிதொடு படான் தன் மதம் கொளல்** – பிறர் மதத்திற்கு உடன்படானாகித் தன் கொள்கையினைக் கொள்ளுதலுமாம்.

## மோசகு பொன்னையா

ஏழுவகை மதங்களாவன: பிறர் மதத்தினுக்குத் தான் உடன்படல், பிறர் மதத்தை மறுத்தல், பிறர் மதத்தை ஏற்றுப் பின்னர் விடுதல், தானே ஒன்றை எடுத்து நாட்டி அதனையிடந் தோறும் நிலைநிறுத்துதல், ஒன்றற்கு ஒன்று மாறுபட இருவராலே கொள்ளப்பட்ட இரண்டினுள் ஒன்றைக் களைந்து மற்றையதைத் துணிதல், பிறர் மதத்திற்கு உடன்படாதவனாகத் தன் மதத்தையே தான் ஆண்டு கொள்ளுதல் என்பனவாம், **எ–று.**

மதம் என்பது மனத்தின் கொள்கை, நூல்கள் தழுவும் மதங்கள் பலவாயினும் தலைமை பற்றி மதங்களை ஏழு எனல் நூல் வழக்கு என அறிக. குற்றம், அழகு, உத்தி என்பவற்றிற்கும் இவ்வாறே கொள்க.

(10)

# பத்துக் குற்றம்

11. குன்றக் கூறன் மிகைபடக் கூறல்
கூறியது கூறன் மாறுகொளக் கூறல்
வழூஉச்சொற் புணர்த்தன் மயங்க வைத்தல்
வெற்றெனத் தொடுத்தன் மற்றொன்று விரித்தல்
சென்றுதேய்ந் திறுத னின்றுபய னின்மை
என்றிவை யீரைங் குற்ற நூற்கே.

குன்றக் கூறல் மிகை படக் கூறல்
கூறியது கூறல் மாறுகொளக் கூறல்
வழூஉச் சொல் புணர்த்தல் மயங்க வைத்தல்
வெற்று எனத் தொடுத்தல் மற்று ஒன்று விரித்தல்
சென்று தேய்ந்து இறுதல் நின்று பயன் இன்மை
என்று இவை ஈர் ஐம் குற்றம் நூற்கே.

kuṉṟak kūṟal mikai patak kūṟal
kūṟiyaṭu kūṟal māṟukoḻak kūṟal
vaḻūus sol puṇarttal mayaṅka vaittal
veṟṟu eṉaṭ ṭotuttal maṟṟu oṉṟu virittal
seṉṟu ṭēyntu iṟuṭal niṉṟu payaṉ iṉmai
eṉṟu ivai īr aim kuṟṟam nūṟkē.

## என்றி பவர் -ஆங்கில மொழிபெயர்ப்பு

### The Ten faults

The ten faults or improprieties to be avoided be every writer are: paucity of words; prolixity; tautology; contradiction; the use of incorrect or inappropriate words; confusion or ambiguity; too great simplicity or unrefinedness; irrelevancy or farfetchedness; unequalness (from the sublime descending to the ridiculous); unmeaningness, or unprofitableness.

# ஒப்புமைப் பகுதி

சொல்லப் பட்டன எல்லாம் மாண்பும்
மறுதலை ஆயினும் மற்று அது சிதைவே (தொல்.பொருள்.:)

சிதைவில் என்ப முதல்வன் கண்ணே (தொல்.பொருள்.:)

முதல்வழி ஆயினும் யாப்பினும் சிதையும்
வல்லோன் புணரா வாரம் போன்றே (தொல்.பொருள்.:)

சிதைவு எனப்படுபவை வசைஅற நாடின்
கூறியது கூறல் மாறுகொளக் கூறல்
குன்றக்கூறல் மிகைப்படக் கூறல்
பொருள்இல கூறல் மயங்கக் கூறல்
கேட்போர்க்கு இன்னா யாப்பிற்று ஆதல்
பழித்த மொழியான் இழுக்கம் கூறல்
தன்னான் ஒருபொருள் கருதிக் கூறல்
என்ன வகையினும் மனம்கோள் இன்மை
அன்ன பிறவும் அவற்று விரி ஆகும் (தொல்.பொருள்.:)

எதிர்மறுத்து உணரின் அத்திறத்தவும் அவையே (தொல்.பொருள்.:)

............குற்றம்
குறைத்தல் மிகை மயக்கல் வழூஉப் பயனிலி மாறு அகன்று
குறுகல் புனருத்தம் மற்றொன்று உரைத்தல் வெளிற்றுரை ஆம்
(சுவாமி.:9:2–3)

ஈரைங் குற்றமும் நேரிதின் நாடின்
கூறியது கூறல் மாறுகொளக் கூறல்
குன்றக் கூறல் மிகைபடக் கூறல்
பொருளில மொழிதல் மயங்கக் கூறல்
கேட்போர்க் கின்னா யாப்பிற் றாதல்
பழித்த மொழியான் இழுக்கங் கூறல்
தன்னா னொருபொருள் கருதிக் கூறல்
என்ன வகையினும் மனங்கோள் இன்மை
அன்ன பிறவும் அவற்றுவிரி யாகும் (இல.விள.:897)

பொருளில கூறல் மருள்நிலைத் தாதல்
இன்னாச் சொற்பெறல் வெளிறுபட் டழிதல்
மொழிந்ததை மொழிதல் முரண்கொள மொழிதல்
குறைபடக் கூறல் மிகைபட விளம்பல்
சந்த பின்பந் தழுவுத லின்மை
எதிர்மறுத் துணர்த்த லென்றிவை உளப்படக்
கூறினர் ஈரைங் குற்றம் நூற்கே (மாற.அலங்.:23)

### மயிலை நாதர்

**இ—ள்.:** இப் பத்துக் குற்றமும் சாராமல் வருவது நூலாவது, **எ — று.**

### சங்கர நமச்சிவாயர்

**எ — னின்,** ஐயிருகுற்றம் என்றதனை **வகுத்து உணர்—ற்று.**

**இ—ள்.:** நூற்குப் பத்துக் குற்றங்களாவன, குன்றக் கூறல் முதலிய இவைகளாம், **எ — று.**

நூல்கள் இக்குற்றங்கள் சாராது வருதல் காண்க.

### கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** பத்து வகைக் குற்றமாவன இவையெனக் கூறுகின்றது.

**இ—ள்.: குன்றக் கூறல்** — எழுத்துச் சொல் பொருள் யாப்பு அலங்காரம் கூறகின்றோமெனத் தொடங்கி அவையிற்றிற் குறையச் சொல்லுவதும், **மிகைபடக் கூறல்** — எழுத்தும் சொல்லும் பொருளும் சொல்லுமெனத் தொடங்கி யாப்பிலக்கணம் கூறுதலும், **கூறியது கூறல்** — எழுத்திலக்கணம் கூறிச் சொல் லிலக்கணம் கூறப் புகுந்தவர் மீண்டும் எழுத்திலக் கணத்தைக் கூறுதலும், **மாறுகொளக் கூறல்** — தாம் முன்னர் விதித்த இலக்கணத்திற்குப் பின்னர் மாறு பாடாகக் கூறுதலும், **வழூஉச் சொற் புணர்த்தல்** — இலக்கண விதி யில்லாத வழுவான சொற்களைப் புணர்த்தலும், **மயங்க வைத்தல்** — கற்றோர்க்கும் பொருள் மயங்க வைத்தலும், **வெற்றெனத் தொடுத்தல்** — பயனில்லாத சொற்களைப் பயத்தலும், **மற்றொன்று விரித்தல்** — தமிழ் இலக்கணம் சொல்லுவோமெனத் தொடங்கி வடசொல் இலக்கணம் சொல்லுதலும், **சென்று தேய்ந்து இறுதல்** — சொல்லின்பம் பொருளின்பம் பயப்பத் தொடங்கி வரவரத் தேய்தலும், **நின்று பயன் இன்மை** — மோனை முதலாகிய இலக்கணம் வழுவாது வைத்துப் பொருளிற் பயனின்றி முடித்தலும், **என்றிவை ஈரைங் குற்ற நூற்கே**— எனக் கூறிய இப்பத்து நூற்குக் குற்றமாம், **எ—று.**

### விசாகப் பெருமாளையர்

**இது,** முன் பத்துக் குற்ற மென்றதை வகுத்துச் சொல்லுகின்றது.

**இ—ள்.: குன்றக்கூறல்**—குறித்த பொருளைக் காட்டுதற்குரிய சொல்களிற் குறைவுபடச் சொல்லுதலும், **மிகைப்படக் கூறல்**—அதிகப்படச் சொல்லுதலும், **கூறியது கூறல்**—முன்சொன்ன ஒருபொருளையே பின்னுஞ் சொல்லுதலும், **மாறுகொளக் கூறல்**—முன்சொன்ன பொருளோடு பின் சொல்லும் பொருள் விரோதங் கொள்ளச் சொல்லுதலும், **வழூஉச் சொற் புணர்த்தல்**—குற்றமான சொற்களைச் சேர்த்தலும், **மயங்க வைத்தல்** — ஒன்றை மற்றொன்றாக மயங்க வைத்தலும், **வெற்றெனத் தொடுத்தல்**—பொருள் வெளிப்படையாகத் தோன்றச்

சூத்திரித்தலும், **மற்றொன்று விரித்தல்**– சொல்லத் தொடங்கியதை விட்டு மற்றொரு பொருளை விரித்தலும், **சென்று தேய்ந்து திறுதல்**–சொல்லின் முடிபும் பொருளின் முடிபும் முன் சிறப்பாக நடந்து அந்நடை பின்னே தேய்ந்து முடிதலும், **நின்று பயனின்மை**–சொற்களிருந்தும் ஒருபிரயோசனமு மில்லாமற் போதலும், **என்றிவை** என்று – சொல்லப்பட்ட யிவை, **நூற்கு**–நூலுக்கு, **ஈரைங் குற்றம்**– பத்துக் குற்றங்களாகும், **எ – று.**

## முகவை இராமானுச கவிராயர்

**இது**, நிறுத்தமுறையே பத்துக் குற்றமென்றதை வகுத்துணர்த்து கின்றது.

**இ–ள்.: குன்றக் கூறல்** – பொருள் குறைபடச் சொல்லுதலும், **மிகைபடக் கூறல்** – சொல் அதிகப்படச் சொல்லுதலும், **கூறியது கூறல்** – சொன்னதைத்தானே மறுபடியுஞ் சொல்லுதலும் **மாறு கொளக் கூறல்** – முன் சொன்னதற்குப் பின் சொல்வது, விரோதப்படச் சொல்லுதலும், **வழூஉச் சொல் புணர்த்தல்** – குற்றமுடைய சொற்களைச் சேர்த்து வைத்தலும், **மயங்க வைத்தல்** – இதற்குப் பொருளிதுவோ அதுவோ வெனத் துணியப் படாமற் சொல்லுதலும், **வெற்றெனத் தொடுத்தல்** – (பொருளென்னுங் கருக்கொள்ளாமல்) வெளிறுபடச் சொற்களைச் சேர்த்து வைத்தலும், **மற்றொன்று விரித்தல்**– சொல்லத் தொடங்கியது சிறுக்க மற்றொன்றை யிடையிலே விரித்துச் சொல்லுதலும், **சென்று தேய்ந்திறுதல்** – செல்லச் செல்லச் சொல்வலி பொருள்வலி தேய்ந்து முடியச் சொல்லுதலும், **நின்று பயனின்மை** – சொல்நின்று அதற்குப் பயனிலாதொழியச் சொல்லுதலும், **என்றிவை** – எனவிவையாம், **ஈரைங் குற்ற நூற்கு** – நூலுக்குப் பத்து வகைக் குற்றமாவன.

ஈரைங் குற்றமிவ்வை யென முடித்துக் கொள்க.

## கா.கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– குன்ற கூறல்** – (சொல்ல வேண்டுவனவற்றைக்) குறைவுபடச் சொல்லுதலும், **மிகைபடகூறல்** – (சொல்ல வேண்டும் அளவுக்கு) அதிகப்படச் சொல்லுதலும், **கூறியது கூறல்** – முன் சொன்னதையே பின்னும் சொல்லுதலும், **மாறு கொள கூறல்** – (முன்னே சொன்னதற்கு) விரோதமாகப் (பின்னே) சொல்லுதலும், **வழூஉச்சொல் புணர்த்தல்** – குற்றமான சொற்களைச் சேர்த்து வைத்தலும், **மயங்க வைத்தல்** – (இன்னதென்று துணிதல் கூடாமல்) மயங்கும்படி வைத்தலும், **வெற்றென தொடுத்தல்** – பயனற்ற சொற்களைச் சேர்த்து வைத்தலும், மற்று ஒன்று **விரித்தல்** – (சொல்லத் தொடங்கியதைத் குறைத்து இடையில்) வேறொன்றை விரித்துச் சொல்லுதலும், **சென்று தேய்ந்து இறுதல்** – போகப்போக (சொல்நடை பொருள் நடை) குறைந்து முடிதலும், நின்று பயன் **இன்மை** – சொற்களிருந்தும் பயனில்லா தொழியச் சொல்லுதலும், என்ற **இவை** – என்று சொல்லப்பட்ட இவை, **நூற்கு** –, **ஈர் ஐங் குற்ற** – பத்துக் குற்றங்களாம்.

குறிப்பு :–

*அவ்யாப்தி, அதிவ்யாப்தி, அஸம்பவம், விபரீதம்* முதலிய வடநூலார் கூறுங் குற்றங்களும் இவற்றுள் அடங்குமாறு உய்த்துணர்க.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:– குன்றக் கூறல்** – குறித்த பொருளை விளக்குதற்கு வேண்டுஞ் சொற்களிற் குறைவுபடச் சொல்லுதலும், **மிகைபடக் கூறல்** – குறித்த பொருளை விளக்குதற்கு வேண்டுஞ் சொற்களினும் அதிகப்படச் சொல்லுதலும், **கூறியது கூறல்** – முன் சொன்ன பொருளையே பின்னுஞ் சொல்லுதலும், **மாறு கொளக் கூறல்** – முன் சொன்ன பொருளுக்குப் பின் சொல்லும் பொருள் விரோதப்படச் சொல்லுதலும், **வழூஉச் சொற் புணர்த்தல்** – குற்றமுடைய சொற்களைச் சேர்த்தலும், **மயங்க வைத்தல்** – இதற்குப் பொருள் இதுவோ அதுவோ என மயங்க வைத்தலும், **வெற்றெனத் தொடுத்தல்** – பொருள் வெளிப்படையாகத் தோன்றச் சொற்களைச் சேர்த்தலும், **மற்று ஒன்று விரித்தல்** – சொல்லத் தொடங்கிய பொருளை விட்டு இடையிலே மற்றொரு பொருளை விரித்தலும், **சென்று தேய்ந்து இறுதல்** – செல்லச் செல்லச் சொன்னடை பொருணடை தேய்ந்து முடிதலும், **நின்று பயன் இன்மை** – சொற்களிருந்தும் ஒரு பிரயோசனமுமில்லாமற் போதலும், **என்ற இவை நூற்கு ஈரைங் குற்றம்** – என்று சொல்லப்பட்ட இவை நூலுக்குப் பத்துக் குற்றமாம், **எ – று.**

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.:– குன்றக் கூறல்** – குறித்த பொருளை விளங்குதற்கு வேண்டுஞ் சொற்களிற் குறைவுபடச் சொல்லுதலும், **மிகை படக் கூறல்** – குறித்த பொருளை விளக்குதற்கு வேண்டுஞ் சொற்களி னும் அதிகப்படச் சொல்லுதலும், **கூறியது கூறல்** – முன் சொன்ன பொருளையே பின்னுஞ் சொல்லுதலும், **மாறுகொளக் கூறல்** – முன் சொன்ன பொருளுக்குப் பின் சொல்லும் பொருள் விரோதப்படச் சொல்லுதலும், **வழூஉச் சொற் புணர்த்தல்** – குற்றமுடைய சொற்களைச் சேர்த்தலும், **மயங்க வைத்தல்** – இதற்குப் பொருள் இதுவோ அதுவோ எனச் சந்தேகிக்க வைத்தலும், **வெற்றெனத் தொடுத்தல்** – பொருள் வெளிப்படை யாகத் தோன்றச் சொற்களைச் சேர்த்தலும், **மற்று ஒன்று விரித்தல்** – சொல்லத் தொடங்கிய பொருளைவிட்டு இடையிலே மற்றொரு பொருளை விரித்தலும், **சென்று தேய்ந்து முடிதலும்,** செல்லச் செல்ல சொன்னடை பொருணடை தேய்ந்து முடிதலும் – **நின்று பயன் இன்மை என்று** – சொற்களிருந்தும் ஒருபிரயோசனமுமில்லாமற்போதலும், **இவை நூற்கு ஈரைங்குற்றம்** – ஆகிய இவை நூலுக்குப் பத்துக் குற்றமாம். **எ–று.**

என்று என்பதெண்ணுப்பொருளில் வந்தது. அது ஓரிடத்து நின்றதெனினும் பிரிந்து குன்றக் கூறலென்று, மிகைபடக் கூறலென்று என மற்றவற்றோடுஞ் சேர்ந்து எண்ணுதற்காகும்.

*"என்றும் எனவும் ஒடுவுமோரோவழி,*

*நின்றும் பிரிந்தெண் பொருடொறு நேரும்"* என் ற இடைச் சொல்லியலில் விதியறிக. "தெய்விரதனென் றிவன்பெயர்" என்பதிற்போலப் பெயர்ப்பொருளில் வந்ததெனினுமாம்.

*"வினை பெயர் குறிப்பிசை எண்பண்பாறினும்,*
*என எனுமொழி வருமென்றுமற்றே"*

என்றிடைச் சொல்லியல் கூறுவதறிக. நூற்கு ஈரைங்குற்றம் இவை என முடிப்பினுமாம்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: குன்ற கூறல்** – (குறித்த பொருளை விளக்குதற்கு வேண்டுஞ் சொற்களிற்) குறைவுபடச் சொல்லுதலும், **மிகை பட கூறல்** – (குறித்த பொருளை விளக்குதற்கு வேண்டுஞ் சொற்களினும்) அதிகப்படச் சொல்லுதலும், **கூறியது கூறல்** – (முன் தான் ஒருகால்) சொன்ன தொரு பொருளையே (பின்னும் காரணமின்றி) அவசியமில்லாமற் சொல்லுதலும், **மாறு கொள கூறல்** – (முன்சொன்னதற்குப் பின்சொல்வது) விரோதப்படச் சொல்லுதலும், **வழூஉ சொல் புணர்த்தல்** – குற்றமுடைய சொற்களைச் சேர்த்து வைத்தலும், **மயங்க வைத்தல்** – (இதற்குப் பொருள் இன்னதென்று துணியக்கூடாமல் இதுவோ அதுவோ என்று) மயங்கும்படி வைத்தலும், **வெற்றென தொடுத்தல்** – (பொருள் என்னுங் கருக் கொள்ளாது) வெளிறு படச் சொற்களைச் சேர்த்து வைத்தலும், **மற்று ஒன்று விரித்தல்** – (சொல்லத் தொடங்கிய பொருளைச் சுருக்கி) மற்றொரு பொருளை (இடையிலே) விரித்துச் சொல்லுதலும், **சென்று தேய்ந்து இறுதல்** – செல்லச்செல்ல (ச் சொற்செறிவு பொருட்பொலிவுகள்) தேய்ந்து முடியச் சொல்லுதலும், **நின்று பயன் இன்மை** – (சொற்கள்) இருந்தும் (அவற்றுக்கு) ஒரு பிரயோஜனமும் இல்லாதொழியச் சொல்லுதலும், **என்ற இவை**–நூற்கு நூலுக்கு, **ஈர் ஐங் குற்றம்** – பத்துக் குற்றங்களாம்; எ–று.

என்றிவை – விகாரம். வெற்றெனத் தொடுத்தல் – வியங்கியார்த்தப் பிரதானமாக வல்லாமற் கூறுதல்; (வியங்கியார்த்தம் – குறிப்புப்பொருள்.)

வடநூலார் கூறுகிற ***அவ்யாப்தி, அதிவ்யாப்தி, அஸம்பவம்*** என்னுங் குற்றங்களும் இவற்றுள்ளே அடங்குமாறு அறிந்து அடக்கிக்கொள்க.

## பவானந்தம் பிள்ளை

**இ—ள்.: குன்றக் கூறல்** – குறித்த பொருளை விளக்குதற்கு வேண்டுஞ் சொற்களிற் குறைவுபடச் சொல்லுதலும், **மிகை படக் கூறல்** – குறித்த பொருளை விளக்குதற்கு வேண்டுஞ் சொற்களினும் அதிகப்படச் சொல்லுதலும், **கூறியது கூறல்** – முன் சொன்ன பொருளையே பின்னுஞ் சொல்லுதலும், **மாறு கொளக் கூறல்** – முன் சொன்ன பொருளுக்குப் பின் சொல்லும் பொருள் விரோதப்படச் சொல்லுதலும், **வழூஉச் சொற் புணர்த்தல்** – குற்றமுடைய சொற்களைச் சேர்த்தலும், **மயங்க வைத்தல்** – இதற்குப் பொருள் இதுவோ அதுவோ என மயங்க வைத்தலும், **வெற்றெனத் தொடுத்தல்** – (பொருள் எனும் கருக்கொள்ளாமல்) வெளிறுபடச் சொற்களைச் சேர்த்தலும், **மற்று ஒன்று விரித்தல்**—சொல்லத் தொடங்கிய பொருள் சிறுக்க இடையிலே மற்றொரு பொருளை விரித்தலும், **சென்று தேய்ந்து இறுதல்** – செல்லச் செல்லச் சொன்னடை பொருணடை தேய்ந்து முடிதலும், **நின்று பயன் இன்மை** – சொற்களி லிருந்தும் ஒரு பிரயோசமுமில்லா மற் போதலும், **என்ற இவை நூற்கு ஈரைங் குற்றம்** – என்று சொல்லப்பட்ட இவை நூலுக்குப் பத்துக் குற்றமாம். **எ—று.**

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ—ரை.:** (குறித்த பொருளைக் காட்டுதற்குரிய சொற்களில்) குறைவுபடச் சொல்லுதலும், (குறித்த பொருளை விளக்குதற் குரிய சொற்களில்) அதிகப்படச் சொல்லுதலும், (முன் சொன்ன ஒரு பொருளையே) பின்னுஞ் சொல்லுதலும், (முன் சொன்ன பொருளோடு பின்சொல்லும் பொருள்) விரோதப்படச் சொல்லுதலும், குற்றமான சொற்களைச் சேர்த்தலும், (இதற்குப் பொருள் இதுவோ அதுவோ என) மயங்கவைத்தலும், பொருள் வெளிப்படையாகத் தோன்றச் சொற்களைச் சேர்த்தலும், (சொல்லத் தொடங்கியதைச் சுருக்கி) மற்றொரு பொருளை இடையிலே விரித்தலும், (சொல்லின் முடிபும் பொருளின் முடிபும்) முன் (சிறப்பாக) நடந்து அந்நடை பின்னே தேய்ந்து முடிதலும், சொற்களிருந்தும் ஒரு பயனும் இல்லாமற் போதலும் என்று சொல்லப்பட்ட இவை நூலுக்குப் பத்துக் குற்றங்களாகும். **எ—று.**

என்ற இவை என்பது என்றிவை என விகாரமாயிற்று.

## கா.நமச்சிவாய முதலியார்

**குன்றக் கூறல்** – (குறித்தபொருளை விளக்குதலின்றிப் பொருளை) குறைவுபடச் சொல்லுதலும், **மிகைபடக் கூறல்** – அளவுகடந்து சொல்லுதலும், **கூறியது கூறல்** – (முன் சொன்ன பொருளையே) பின்னுஞ் சொல்லுதலும், **மாறுகொளக் கூறல்** – (முன்சொன்ன பொருளோடு பின்சொல்லும் பொருள்) மாறுபடச் சொல்லுதலும், **வழூஉச்சொல் புணர்த்தல்** – இலக்கண மலைவுடைய சொற்களைச் சேர்த்தலும், **மயங்க வைத்தல்** – ஒன்றை (மற்றொன்றாக) மயங்க

வைத்தலும், **வெற்றெனத் தொடுத்தல்** – பொருட்செறிவில்லாத சொற்களைச் சேர்த்தலும், **மற்றொன்று விரித்தல்** – (சொல்லத் தொடங்கியதை விட்டு) மற்றொரு பொருளை இடையிலே விரித்தலும், **சென்று தேய்ந்து இறுதல்** – (சொல்லும் பொருளும் முன்னே சிறப்பாக) நடந்து அந்நடை பின்னே தேய்ந்து முடிதலும், **நின்று பயன் இன்மை** – சொற்களிருந்தும் ஒரு பயனு மில்லாமற் போதலும், **என்ற இவை** – என்று சொல்லப்பட்ட இவை, **நூற்கு ஈரைங் குற்றம்** – நூலுக்குப் பத்துக் குற்றங்களாகும்.

## மோசசு பொன்னையா

பத்துவகை குற்றங்களாவன: பொருள் விளக்கத்திற் குறைபடச் சொல்லுதல், பொருள் விளக்கத்தில் மிகைபடக் கூறுதல், முன் சொன்ன பொருளையே பின்னுஞ் சொல்லுதல், முன்பின் முரண்படச் சொல்லுதல், குற்றமுடைய சொற்களையுந் தழுவிச் சொல்லுதல், பொருள் இதுவோ, அதுவோ என்னும் மயக்கம் தோன்றச் சொல்லுதல், பொருளின்றி வெளிறுபடச் சொற்களைத் தொடுத்து வைத்தல், சொல்லத் தொடங்கியது இருக்க மற்றொன்றை இடையிலே விரித்துச் சொல்லுதல், செல்லச் செல்லச் சொல்நடையும், பொருள் அமைதியும் தேய்ந்து முடியுமாறு சொல்லுதல், சொற்கள் பயனின்றி நிற்குமாறு சொல்லுதல் என்பனவாம், **எ–று.**

**(11)**

# பத்து அழகு

**12. சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்**
**நவின்றோர்க் கினிமை நன்மொழி புணர்த்தல்**
**ஓசை யுடைமை யாழமுடைத் தாதல்**
**முறையின் வைப்பே யுலகமலை யாமை**
**விழுமியது பயத்தல் விளங்குதா ரணத்த**
**தாகுத னூலிற் கழகெனும் பத்தே.**

**சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்**
**நவின்றோர்க்கு இனிமை நல் மொழி புணர்த்தல்**
**ஓசை உடைமை ஆழம் உடைத்து ஆதல்**
**முறையின் வைப்பே உலக மலையாமை**
**விழுமியது பயத்தல் விளங்கு உதாரணத்தது**
**ஆகுதல் நூலிற்கு அழகு எனும் பத்தே.**

surunkas sollal vil̲anka vaiṭṭal
navin̲r̄orkku in̲imai nal mol̲i puṇarttal

ōsai utaimai āḷam utaiṭṭu āṭal
muṟaiyiṉ vaippē ulaka malaiyāmai
viḷumiyaṭu payaṭṭal viḻaṅku uṭāraṇaṭṭaṭu
ākuṭal nūliṟku aḻaku eṉum paṭṭē.

## என்றி பவர் -ஆங்கில மொழிபெயர்ப்பு

### The ten beauties of style

The ten beauties or proprieties to be courted by authors are: brevity or conciseness; perspicuity or comprehensiveness, agreeableness; use of appropriate or reputable words; harmony or rhythm; profundity of thought; regularity of method; conformity with the opinions of the good and great, so as not to puzzle the world; sterling worthiness of subject matter; appropriate examples and illustrations.

## ஒப்புமைப் பகுதி

முறைச் சுருக்கல் விளக்கல் உதாரணம் இசை நற்பொருள்
நன்மொழியின்
இன்பம் முறை ஆழம் மயங்காமை குணமே (சுவாமி.:9:1)

அழகெனத் தகுவ தரில்தப நாடின்
அகலா நடைத்தாய் ஆழமது உடைத்தாய்
பொருள் புலப்பாட்டின் பொருள்நலன் சொல்நலன்
ஓசை இனிமையோடு ஊதியம் பயத்தல்
உலகம் மலையாமை உதாரணம் புணர்த்தல்
நவில்தொறும் புதுவதுவாய் நயன் அளிப்பதின்
ஈரைந் தாமென இயம்பினர் புலவர் (மாற.அலங்.:24)

உரையெடுத் ததன்முன் யாப்பினும் சூத்திரம்
புரைதப உடன்படக் காண்டிகை புணர்ப்பினும்
விளம்பலும் விலக்கலும் உடையோர் வகையொடு
புரைதப நாடிப் புணர்க்கவும் பட்டுச்
சில்வகை எழுத்தின் செய்யுட் டாகிச்
சொல்லுங் காலை உரையகத் தடக்கி
நுண்மையொடு புணர்ந்த வண்மைத் தாகித்
துளக்க லாகாத் துணைமை யெய்தி
அளக்க லாகா அரும்பொருட் டாதல்
சூத்திரத் தழகென யாத்தனர் புலவர் (இல.விள.:893)

## மயிலை நாதர்

இ – ள்.: இப்பத்து 'மாட்சியும் வேண்டும் நூற்கு, எ – று.

## சங்கர நமச்சிவாயர்

எ – னின், பத்தழகு என்றதனை வகுத்துஉணர் – ற்று.

இ – ள்.: நூலிற்கு அழகு என்று சொல்லப்படும் பத்தாவன, சுருங்கச்சொல்லல் முதலியவாம், எ–று.

நூல்கள் இப்பத்தழகோடும் கூடி வருதல் காண்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், பத்துப் பெருமையாவன இவையெனக் கூறுகின்றது.

இ–ள்.: **சுருங்கச் சொல்லல்** – பல் வகைப்பட்ட பொருளும் விளங்கத் தொகைநிலைச் சொல்லாகச் சுருங்கச் சொல்லுதலும், **விளங்க வைத்தல்** – இலை மறை காய்போல ஆழ்ந்த பொருளையும் விளங்கிக் கிடக்க வைத்தலும், **நவின்றோர்க்கு இனிமை நன்மொழி புணர்த்தல்** – கூறினோர்க்கு இனிமையாகிய மொழிகளைப் புணர்த்தலும், கதலி பாகம் என்றுமாம், **ஓசை உடைமை** – நாவுக்கு இசைந்த ஒழுங்குள்ள ஓசையைப் பயத்தலும், **ஆழம் உடைத்தாதல்** – கயிற்றுக் கோணி விளங்காய் போல வெளிப்பட்டும் எடுக்கக் கூடாது ஆழ்ந்த பொருளாக வைத்தலும், நாளிகேர பாகம் என்றுமாம், **முறையின் வைப்பே**–ஒன்றற்கு ஒன்று ஏற்றம் குறைவு கண்டு ஒன்றன் பின்னொன்று வரன் முறையாக வைத்தலும், **உலக மலையாமை** – கற்றுணர்ந்தோர்க்கு மலையாத பொருளாகக் கொடுத்துக் கூறலும், **விழுமியது பயத்தல்** – உயர்ச்சியுள்ள பயனாகத் தோற்றுதலும், **விளங்கு உதாரணத்தாகுதல்** – யார்க்கும் விளக்கமாகிய உதாரணங்களைப் பெற வைத்தலும், **நூலிற்கு அழகெனும் பத்தே** – இப்பத்துக் குணப்பெருமையும்பட வருவது நூலுக்கு அழகாம், எ–று.

## விசாகப் பெருமாளையர்

இது, முன் பத்தழ கென்றதனை வகுத்துச் சொல்லுகின்றது.

இ–ள்.: **சுருங்கச் சொல்லல்**–சொல்லுகள் வீணாக விரியாமற் சுருங்கி நிற்கச் செல்லுதலும், **விளங்க வைத்தல்** – பொருளைச் சந்தேகத்துக்கு இடமாகாமல் விளங்க வைத்தலும், **நவின்றோர்க் கினிமை**–வாசித்தவருக்கு இன்பத்தைத் தருதலும், **நன்மொழி புணர்த்தல்** – நல்ல சொற்களைச் சேர்த்தலும், **ஓசையுடைமை**–சந்தவின்ப முடைத்தாதலும், **ஆழமுடைத்தாதல்**– ஆழ்ந்த கருத்தை யுடைத்தாதலும், **முறையின்வைப்பு** – அதிகார

முதலானவைகளைக் காரணகாரிய முறையாக வைத்தலும், **உலக மலையாமை** – உயர்ந்தோர் வழக்கத்தோடு மாறுகொள்ளாமையும், **விழுமியது பயத்தல்**– சிறப்பாகிய பெருளைத் தருதலும், **விளங்கு உதாரணத்தது ஆகுதல்** – விளங்கிய உதாரணத்தை யுடையதாதலும், **நூலிற்கு**–நூலினுக்கு, **அழகெனும்**– அழகென்று சொல்லப்படும், **பத்து**–பத்தும், **எ – று.**

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** நிறுத்த முறையே பத்துவகை யழகென்றதை வகுத் துணர்த்துகின்றது.

**இ–ள்.: சுருங்கச் சொல்லல்** – சொற் சுருங்கச் சொல்லுதலும், **விளங்க வைத்தல்** – (அப்படிச்சொல்லினும் யாவர்க்கும்) பொருள் விளங்கித் தோன்ற வைத்தலும், **நவின்றோர்க் கினிமை** – படித்தவர்க்கு இன்பந் தருதலும், **நன்மொழி புணர்த்தல்**–நல்ல சொற்களைச் சேர்த்து வைத்தலும், **ஓசையுடைமை** – சந்தவின்ப முடைத்தா யிருத்தலும், **ஆழமுடைத்தாதல்** – (பார்க்கும்தோறு மோரோர் பொருளை வெளியிட்டுக் கொண்டு இவ்வளவுதானென்று வரையறுக்கக் கூடாமல்) பொருள் ஆழ்ந்து கிடத்தலும், **முறையின் வைப்பு** – (சொற்களையும் பொருள்களையும் இயல்களையும் அதிகாரங்களையும் காரண காரிய முறைப்படி) வரிசைப்பட வைத்தலும், **உலக மலையாமை** – உலக மலைவில்லாமற் சொல்லுதலும், **விழுமியது பயத்தல்** – சிறந்த பயனைத் தருதலும், **விளங்குதாரணத்த தாகுதல்** – தெரியத்தக்க வுதாரணங்களை யுடையதாதலுமாம், **நூற்கழகெனும் பத்து** – நூலுக்கு அழகென்றுரைத்த பத்து, **எ–று.**

நூற்குப் பத்துவகை யழகாவன சுருங்கச்சொல்லல் முதலியவாமென முடித்துக்கொள்க. உலக மலைவாவது, உலக நடைக்கு விரோதம்; பிரிபொருட் சொற்றொடரென்னும் அணியியல் தொகைச்சூத்திரத்தில் "கலையே யுலக நியாயமா கமமெனு, மலைவுள் ளுறுத்தவும் வரைந்தனர் புலவர்" என்பதினாலும், "உலகெனப் படுவதீண் டொழுக்கின் மேற்றே" என்னும் அதன் வகைச் சூத்திரத்தாலு முணர்க.

## கா.கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– சுருங்க சொல்லல்** – (சொற்கள் பயனின்றி விரியாமல்) சுருங்கி நிற்கச் சொல்லுதலும், **விளங்கவைத்தல்** – (சந்தேகத்துக்கு இடமின்றிப் பொருள்) தெரியவைத்தலும், **நவின்றோர்க்கு இனிமை** – படிப்போர்க்கு இன்பம் தருதலும், **நல்மொழி புணர்த்தல்** – நல்லசொற்களைச் சேர்த்தலும், **ஓசை உடைமை** – இன்னோசை (சந்த இன்பம்) உடையதாதலும், **ஆழம் உடைத்து ஆதல்** – (பார்க்குந்தோறும் ஒவ்வொரு பொருளை வெளியிட்டுக்கொண்டு)

ஆழ்ந்த பொருள்களை உடையதாதலும், **முறையின் வைப்பு** – (அதிகார முதலியவற்றைக் காரணகாரியக்) கிரமப்படி வைத்தலும், **உலகம் மலையாமை** – உயர்ந்தோர் வழக்கத்தோடு மாறுபடாமற் சொல்லுதலும், **விழுமியது பயத்தல்** – மேன்மையான பொருளைத் தருதலும், **விளங்கு உதாரணத்தது ஆகுதல்** – தெரியத்தக்க உதாரணங்களை உடைத்தாதலும் (ஆகிய இவை), **நூலிற்கு** –, **பத்து அழகு எனும்** – பத்தழகு என்று சொல்லப்படும்.

குறிப்பு :– 'உலகம்' என்னும் பலபொருளொருசொல் இங்கு உயர்ந்தோரைக் குறித்தது. **"உலகமென்ப துயர்ந்தோர்மாட்டே"** என்றதறிக.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: சுருங்கச் சொல்லல்** – சொற்கள் வீணாக விரியாது சுருங்கி நிற்கச் சொல்லுதலும், **விளங்க வைத்தல்** – சுருங்கச் சொல்லினும் பொருளைச் சந்தேகத்துக்கு இடமாகாது விளங்க வைத்தலும், **நவின்றோர்க்கு இனிமை** – வாசித்தவருக்கு இன்பத்தைத் தருதலும், **நன்மொழி புணர்த்தல்** – நல்ல சொற்களைச் சேர்த்தலும், **ஓசை உடைமை** – சந்தவின்ப முடைத்தாதலும், **ஆழம் உடைத்து ஆதல்** – பார்க்கப் பார்க்க ஆழ்ந்த கருத்தையுடைத்தாதலும், **முறையின் வைப்பு** – படலம் ஒத்து முதலியவைகளைக் காரண காரிய முறைப்படி வைத்தலும், **உலகம் மலையாமை** – உயர்ந்தோர் வழக்கத்தோடு மாறுகொள்ளாமையும், **விழுமியது பயத்தல்** – சிறப்பாகிய பொருளைத் தருதலும், **விளங்கு உதாரணத்தது ஆகுதல்** – விளங்கிய உதாரணத்தை யுடையதாதலும், **நூலிற்கு அழகு எனும் பத்து** – நூலினுக்கு அழகென்று சொல்லப்படும் பத்து, **எ–று.**

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். சுருங்கச் சொல்லல்** – சொற்கள் வீணாக விரியாது சுருங்கி நிற்கச் சொல்லுதலும், – **விளங்க வைத்தல்** – சுருங்கச் சொல்லினும் பொருளைச் சந்தேகத்துக்கு இடமாகாது விளங்க வைத்தலும், **நவின்றோர்க்கு இனிமை** – வாசித்தவருக்கு இன்பத்தைத் தருதலும், **நன்மொழி புணர்த்தல்** – நல்ல சொற்களைச் சேர்த்தலும், – ஓசை உடைமை – சந்தவின்பமுடைத்தாதலும், **ஆழம் உடைத்து ஆதல்** – நோக்க நோக்க ஆழ்ந்த கருத்தையுடைத்தாலும், **முறையின் வைப்பு** – படலம் ஒத்து முதலியவைகளைக் காரண காரிய முறைப்படி வைத்தலும், – **உலகம் மலையாமை** – உயர்ந்தோர் வழக்கத்தோடு மாறுகொள்ளாமையும், – **விழுமியது பயத்தல்** – உயர்வாகிய பொருளைத் தருதலும், – **விளங்கு உதாரணத்தது ஆகுதல்** – விளங்கிய உதாரணத்தை யுடையதாதலும், – **நூலிற்கு அழகு எனும் பத்து** – நூலினுக்கு அழகென்றுசொல்லப்படும் பத்து. எ–று.

கருத்து ஆழமாயும் உதாரணம் வெளிப்படையாயுமிருத்தல் வேண்டும்.

## வை.மு. சடகோபாராமானுசாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.: **சுருங்கச் சொல்லல்** – (சொற்கள் வீணாக விரியாமற்) சுருங்கி நிற்கச் சொல்லுதலும், **விளங்க வைத்தல்** – (அவ்வாறு சொல்லினும் யாவர்க்கும் பொருளைச் சந்தேகத்துக்கு இடமாகாமல்) விளங்கித் தோன்ற வைத்தலும், **நவின்றோர்க்கு இனிமை** – படிப்பவர்க்கு இன்பத்தைத் தருதலும், **நல்மொழி புணர்த்தல்** – நல்ல சொற்களைச் சேர்த்து வைத்தலும், **ஓசை உடைமை** – சந்தவின்ப முடையதாதலும், **ஆழம் உடைத்து ஆதல்** – (பார்க்கப்பார்க்க இவ்வளவென்று வரையறுக்கப்படாமல்) ஆழ்ந்த கருத்துக்களை யுடையதாதலும், **முறையின் வைப்பே** – (சொல் பொருள் இயல் அதிகாரம் முதலியவற்றை யாதாயினும் ஓர் ஏற்ற) முறைப்படி (வரிசைப்பட) வைத்தலும், **உலகம் மலையாமை** – உயர்ந்தோர் வழக்கத்தோடு விரோதப்படாமற் சொல்லுதலும், **விழுமியது பயத்தல்** – சிறந்த பொருளைத் தருதலும், **விளங்கு உதாரணத்தது ஆகுதல்** – (எளிதில்) விளங்கத் தக்க உதாரணங்களை யுடையதாதலும், (என்னும் இவை), **நூலிற்கு அழகு எனும் பத்து** – நூலுக்கு அழகென்று சொல்லப்படும் பத்தாகும்; எ – று.

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.: **சுருங்கச் சொல்லல்** – [1]சொற்கள் வீணாக விரியாது சுருங்கி நிற்கச் சொல்லுதலும், **விளங்க வைத்தல்** –[2]சுருங்கச் சொல்லும் பொருளைச் சந்தேகத்துக் இடமாகாது விளங்க வைத்தலும், **நவின்றோர்க்கு இனிமை** – [3]வாசித்தவருக்கு இன்பத்தைத் தருதலும், **நன்மொழி புணர்த்தல்**– [4]நல் சொற்களைச் சேர்த்தலும், **ஓசை உடைமை** – [5]சந்தவின்ப முடைத்தாதலும், **ஆழம் உடைத்து ஆதல்** –[6]பார்க்கப் பார்க்க ஆழ்ந்த கருத்தை யுடைத்தாதலும், **முறையின் வைப்பு** – [7]படலம் ஒத்து முதலியவைகளைக் காரண காரிய முறைப்படி வைத்தலும், **உலகம் மலையாமை** – [8]உயர்ந்தோர் வழக்கத்தோடு மாறு கொள்ளாமையும், **விழுமியது பயத்தல்** – [9]சிறப்பாகிய பொருளைத் தருதலும், **விளங்கு உதாரணத்தது ஆகுதல்** – [10]விளங்கிய உதாரணத்தை யுடையதாதலும், **நூலிற்கு அழகு எனும் பத்து** – நூலினுக்கு அழகென்று சொல்லப்படுத் பத்து. எ–று.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

பொ–ரை.: (சொற்கள் வீணாக விரியாமல்) சுருங்கி நிற்கச் சொல்லுதலும், (அப்படிச் சொல்லினும் யாவருக்கும் பொருள்) விளங்கவைத்தலும், படித்தவருக்கு இன்பத்தைத் தருதலும், நல்ல சொற்களைச் சேர்த்தலும், சந்த இன்பம் உடைத்தாதலும், ஆழ்ந்த கருத்தை யுடைத்தாதலும், (அதிகாரம்

முதலானவைகளைக் காரணகாரிய) முறையாக வைத்தலும், உயர்ந்தோர் வழக்கத்தோடு மாறு கொள்ளாமையும், சிறப்பாகிய பொருளைத் தருதலும், விளங்கிய உதாரணத்தையுடைய தாதலும் என்னும் இவை நூலினுக்கு அழகென்று சொல்லப்படும் பத்தாம். **எ–று.**

## கா.நமச்சிவாய முதலியார்

**சுருங்கச் சொல்லல்** – (சொற்கள் வீணாக விரியாமல்) சுருங்கி நிற்கச் சொல்லுதலும், **விளங்க வைத்தல்**– (ஐயத்திற்கு இடமாகாமல் பொருள்) விளங்க வைத்தலும், **நவின்றோர்க்கு இனிமை** – படிப்பவருக்கு இன்பத்தைத் தருதலும், **நன்மொழி புணர்த்தல்** – நல்ல சொற்களைச் சேர்த்தலும், **ஓசை உடைமை** – சந்தவின்ப முடைத்தாதலும், **ஆழம் உடைத் தாதல்** – ஆழ்ந்த கருத்தையுடைத் தாதலும், **முறை யின் வைப்பு** – (பொருளைக் காரணகாரிய) முறையாக அமைத்தலும், **உலகம் மலையாமை** – உயர்ந்தோர் வழக்கத் தோடு மாறுகொள்ளாமையும், **விழுமியது பயத்தல்** – சிறப்பாகிய பொருளைத் தருதலும், **விளங்கு உதாரணத்தது ஆகுதல்** – விளங்கிய உதாரணத்தை யுடையதாதலும், **பத்து** – ஆகிய பத்தும், **நூலிற்கு** – நூலினுக்கு, **அழகு என்னும்** – அழகென்று சொல்லப்படும்.

## மோசசு பொன்னையா

பத்து அழகுகளாவன: சொற் சுருங்கச் சொல்லுதல், பொருள் விளங்கித் தோன்ற வைத்தல், படிப்பவருக்கு இன்பத்தைத் தருதல், நல்ல சொற்களைத் தழுவிச் சொல்லுதல், சந்த இன்ப முறச் சொல்லுதல், படிக்குந்தோறும் கருத்துச் சுரக்குமாறு சொல்லுதல், காரண காரிய முறைப்படி அமைத்துச் சொல்லுதல், உயர்ந்தோர் வழக்கோடு மாறுபடாது சொல்லுதல், சிறந்ததை விளங்குமாறு சொல்லுதல், தெளிவான எடுத்துக்காட்டுகளுடன் அமையச் சொல்லுதல் என்பனவாம், **எ–று.**

**(12)**

# முப்பத்திரண்டு உத்தி

**நுதலிப் புகுத லோத்துமுறை வைப்பே**
**தொகுத்துச் சுட்டல் வகுத்துக் காட்டல்**
**முடித்துக் காட்டன் முடிவிடங் கூறல்**
**தானெடுத்து மொழிதல் பிறன்கோட் கூறல்**
**சொற்பொருள் விரித்த றொடர்ச்சொற் புணர்த்தல்**
**இரட்டுற மொழித லேதுவின் முடித்தல்**
**ஒப்பின் முடித்தன் [1]மாட்டெறிந் தொழுகல்**

---

**பாட வேறுபாடு:–**

**1. மாட்டெறிந்தொழிதல்.**

இறந்தது விலக்க லெதிரது போற்றல்
முன்மொழிந்து கோடல் பின்னது நிறுத்தல்
விகற்பத்தின் முடித்தன் [1]முடிந்தவை முடித்தல்
உரைத்து மென்ற [2]னுரைத்தா மென்றல்
ஒருதலை துணித லெடுத்துக் காட்டல்
எடுத்த மொழியி னெய்த வைத்தல்
இன்ன தல்ல திதுவென மொழிதல்
எஞ்சிய சொல்லி னெய்தக் கூறல்
பிறநூன் முடிந்தது [3]தானுடம் படுதல்
தன்குறி வழக்க மிகவெடுத் துரைத்தல்
சொல்லின் முடிவி னப்பொருண் முடித்தல்
[4]ஒன்றின முடித்த றன்னின முடித்தல்
உய்த்துணர வைப்பென வுத்தியெண் ணான்கே

தொகுத்துச் சுட்டல் வகுத்துக் காட்டல்
முடித்துக் காட்டல் முடிவு இடம் கூறல்
தான் எடுத்து மொழிதல் பிறன்கோள் கூறல்
சொல்பொருள் விரித்தல் தொடர்ச்சொல் புணர்த்தல்
இரட்டுற மொழிதல் ஏதுவின் முடித்தல்
ஒப்பின் முடித்தல் மாட்டு எறிந்து ஒழுகல்
இறந்தது விலக்கல் எதிரது போற்றல்
முன் மொழிந்து கோடல் பின்னது நிறுத்தல்
விகற்பத்தின் முடித்தல் முடிந்தவை முடித்தல்
உரைத்தும் என்றல் உரைத்தாம் என்றல்
ஒருதலை துணிதல் எடுத்துக் காட்டல்
எடுத்த மொழியின் எய்த வைத்தல்
இன்னது அல்லது இது என மொழிதல்
எஞ்சிய சொல்லின் எய்தக் கூறல்
பிற நூன் முடிந்தது தான் உடம்படுதல்
தன் குறி வழக்கம் மிக எடுத்து உரைத்தல்
சொல்லின் முடிவின் அப் பொருள் முடித்தல்
ஒன்று இனம் முடித்தல் தன் இனம் முடித்தல்
உய்த்து உணர வைப்பு என உத்தி எண் நான்கே

---

பாட வேறுபாடு ;

1. முடிந்தது.
2 உரைப்பாமென்றல்.
3. தானுடன்படுதல்.
4. ஒன்றன முடித்தல்.

ṭokuṭṭus suttal vakuṭṭuk kāttal
mutiṭṭuk kāttal mutivu itam kūṟal
ṭāṉ etuṭṭu moḷiṭal piṟaṉkōḻ kūṟal
solporuḻ viriṭṭal ṭotarssol puṇarṭṭal
irattuṟa moḷiṭal ēṭuviṉ mutiṭṭal
oppiṉ mutiṭṭal māttu eṟinṭu oḷukal
iṟanṭaṭu vilakkal eṭiraṭu pōṟṟal
muṉ moḷinṭu kōtal piṉṉaṭu niṟuṭṭal
vikaṟpaṭṭiṉ mutiṭṭal mutinṭavai mutiṭṭal
uraiṭṭum eṉṟal uraiṭṭām eṉṟal
oruṭalai ṭuṇiṭal etuṭṭuk kāttal
etuṭṭa moḷiyiṉ eyṭa vaiṭṭal
iṉṉaṭu allaṭu iṭu eṉa moḷiṭal
eñsiya solliṉ eyṭak kūṟal
piṟa nūṉ mutinṭaṭu ṭāṉ utampatuṭal
ṭaṉ kuṟi vaḷakkam mika etuṭṭu uraiṭṭal
solliṉ mutiviṉ ap poruḻ mutiṭṭal
oṉṟu iṉam mutiṭṭal ṭaṉ iṉam mutiṭṭal
uyṭṭu uṇara vaippu eṉa uṭṭi eṇ nāṉkē

## என்றி பவர் -ஆங்கில மொழிபெயர்ப்பு

### The Thirty-two methods

There are thirty-two **Yuktis**, or rules or criticism, which an author employs in reference to literary subjects; viz.

stating the author's aim beforehand; proper arrangement of parts of the antecedent and consequents; giving the substance, or summary, specification or subdivision; adducing eminent examples and applying them to practice; reference to authorities; citations from ancient authors; mere mention of the principles of others; explication, or supplying terms to bring out the author's meaning; using related or compound words; using terms by which one thing is employed and another implied (double meaning); subsequent explanation of what was previously introduced or left unsettled; applying one rule to another when subjects are similar; tacking on one rule to another when subjects depend on one another; rejection of obsolete usage; adoption of modern usage; frequent recurrence to a previously established hypothesis; transposition of words and subjects according to

circumstances; using a particular expression to render a subject intelligible; making apparent a particular by a general subject; a hint put forth with a view to subsequent explanation, referring to a subject already explained; siding with one or other of two contrary authorities; producing examples for rules or opinions laid down; making adduced examples apparent (combining theory and practice); resolution of dubious passages; inferring an omitted subject by its dependence upon what has been already stated; adoption of, or acquiescence in, the opinions or conclusions of others; continuation of the use of technical terms and phrases peculiar to an author; an evident and easy transition from words to thoughts, (the meaning being transparent); statement of all kindred subjects in one view, for the sake of conciseness; use of such terms, descriptions or definitions in a written work, as may require the exercise of thought, and reference to other parts in order to comprehend them.

## ஒப்புமைப் பகுதி

ஒத்த காட்சியின் உத்திவகை விரிப்பின்
நுதலிய தறிதல் அதிகார முறையே
தொகுத்துக் கூறல் வகுத்துமெய் நிறுத்தல்
மொழிந்த பொருளொடு ஒன்ற அவ்வயின்
மொழியா ததனை முட்டின்று முடித்தல்
வாரா ததனால் வந்தது முடித்தல்
வந்தது கொண்டு வாராதது உணர்த்தல்
முந்து மொழிந்ததன் தலைதடு மாற்றே
ஒப்பக் கூறல் ஒருதலை மொழியே
தன்கோள் கூறல் முறைபிற ழாமை
பிறன்உடம் பட்டது தான்உடம் படுதல்
இறந்தது காத்தல் எதிரது போற்றல்
மொழிவாம் என்றல் கூறிற்று என்றல்
தான்குறி யிடுதல் ஒருதலை அன்மை
முடிந்தது காட்டல் ஆணை கூறல்
பல்பொருட்கு ஏற்பின் நல்லது கோடல்
மறுதலை சிதைத்துத் தன்துணிபு உரைத்தல்
பிறன்கோள் கூறல் அறியாது உடம்படல்
பொருளிடை யிடுதல் எதிர்பொருள் உணர்த்தல்
சொல்லின் எச்சம் சொல்லியாங் குணர்த்தல்
தந்து புணர்ந் துரைத்தல் ஞாபகங் கூறல்
உய்த்துக்கொண் டுணர்த்தலொடு மெய்ப்பட நாடிச்

சொல்லிய அல்ல பிறவவண் வரினும்
சொல்லிய வகையாற் சுருங்க நாடி
மனத்தி னெண்ணி மாசறத் தெரிந்துகொண்டு
இனத்திற் சேர்த்தி உணர்த்தல் வேண்டும்
நுனித்தகு புலவர் கூறிய நூலே (இல.விள.:898)

உள்ளுறுத்து அமைத்த உத்திவகை உணர்த்தின்
உள்ளிய துணர்த்தல் உரைமுறை வைப்பே
தொகைபெற நாட்டல் வகைபெறக் காட்டல்
விரிந்தவை இவையென விழுமிதின் கூட்டல்
தொகுத்த மொழியின் வகுத்த கோடல்
முந்து மொழிந்ததன் தலைதடு மாற்றே
பலபொருட்டு ஏற்பின் நல்லவை கோடல்
மொழிந்த பொருளோடு ஒன்ற வைத்தல்
மொழிந்தனம் என்றல் மொழிவாம் என்றல்
இறந்தது காத்தல் எதிரது போற்றல்
மொழியா ததனை முட்டின்றி முடித்தல்
வந்தது கொண்டு வாராதது முடித்தல்
பிறன்கோள் கூறல் தன்கோள் கூறல்
பிறன் உடம் பட்டது தான்உடம் படுதல்
அறியாது உடன்படல் ஆணை கூறல்
தன்குறி பிடுதல் தந்துகொணர்ந் துரைத்தல்
மறுதலை சிதைத்துத் தன்துணிவு உரைத்தல்
மாட்டெ றிந்தொழிதல் தன்இனம் முடித்தல்
மாட்டுறுப் பினவா மனக்கொளக் கூறல்
உய்துக்கொண் டுணர்தலின் உரன்உடை யனவாய்த்
தீபக வைகயால் சிறப்புறக் கூறல்
சொல்லி னெச்சம் சொல்லியாங் குணர்த்த லென்று
அமைத்ததின் அகப்பட அமையா தனவும்
சுருங்கக் கூறிய தொடர்பி னைநாடி
ஒருங்கமைத் துணர்த்துத லுரவோர் கடனே. (மாற.அலங்.:25)

## மயிலை நாதர்

இ–ள்.: இவை முப்பத்திரண்டும் தந்திரவுத்தியாவன, எ–று.

இவை ஒருசாரார் வேண்டுவன. இவற்றுட் சிலவற்றை மாற்றிச் சொல்லுவாரும் முப்பத்திரண்டின் மேலும் பல வென்பாருமுளர்; அவையும் அறிந்து கொள்க.

## சங்கர நமச்சிவாயர்

**எ — னின்,** எண்ணான்கு உத்தி என்றதனை வகுத்து **உணர் — ற்று.**

**இ—ள்.:** முப்பத்திரண்டு உத்தியாவன, நுதலிப்புகுதல் முதலியவாம், **எ—று.**

இவற்றுள் ஒன்றினமுடித்தல் தன்னினமுடித்தல் என்பது ஓர் உத்தி. உய்த்துணர வைப்பு என்பதனை உத்திக்கு அடையாக்கி, உய்த்துணர வைப்பெனும் உத்தி எண்ணான்கே எனப் பாட மோதி, அதனை இரண்டு உத்தியாக்கினும் அமையும்.

இவ்வுத்திகட்குப் பதப்பொருளோடு உதாரணம் விளங்க இந்நூலுள் வந்துழி வந்துழிக் காட்டுதும்; ஆங்காங்குணர்க.

மதத்தினுள்ளும் அழகினுள்ளும் வருவன சிலவற்றை உத்தியுள்ளும் கூறியது என்னை எனின்:— கொள்கை வகையான் மதம் என்றும், சிறப்பு வகையான் அழகு என்றும், இம்மதம் அழகு முதலிய எல்லாம் புத்தி நுட்பத்தமையும் வகையான் உத்தி என்றும் கூறப்படுமென்க. அங்ஙனமாயின், மதம் அழகு எல்லா வற்றையும் உத்தியின்பாற்படுத்துக் கூறாது சிலவற்றைக் கூறியது என்னை யெனின்:— வரம்பின்றி வரும் உத்தியுள் தலைமை பற்றிக் கூறும் முப்பத்திரண்டில் வந்தன கூறினார் என்க.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** உத்தி முப்பத்திரண்டாவது இவையெனக் கூறுகின்றது.

**இ—ள்.:** நுதலிப் புகுதல். . . உய்த்துணர வைப்பு எனக்கூறிய முப்பத்திரண்டு நூலினது உத்தியாம், **எ—று.**

## விசாகப் பெருமாளையர்

**இது,** முன் முப்பத்திரண்டு உத்தியென்றதனை வகுத்துச் சொல்லுகின்றது.

**இ—ள்.: நுதலிப் புகுதல்**—இதனைச் சொல்லுவேனென்று சொல்லிப் புகுதலும், **ஒத்து முறை வைப்பு** — இயல்களைக் காரண காரிய முறையால் வைத்தலும், **தொகுத்துச் சுட்டல்** — பலவுந் தொகுத்துக் காட்டலும், **வகுத்துக் காட்டல்** — அப்படித் தொகுத்துக் காட்டியவைகளை வேறுவேறு பிரித்துக் காட்டுதலும், **முடித்துக் காட்டல்** — தான் மேலோர் முடித்தவாறு முடித்துக் காட்டுதலும், **முடிவிடங் கூறல்** — தான் சொல்லும் இலக்கணத் திற்கு இலக்கியந் தோன்றுமிடத்தைச் சொல்லுதலும், **தானெடுத்து மொழிதல்** — தான் பழைய சூத்திரத்தை யெடுத்துச் சொல்லுதலும், **பிறன்கோட் கூறல்** — தன்னூலிற் பிறனது கோட்பாட்டைச் சொல்லுதலும், **சொற்பொருள் விரித்தல்** —

சொல்லினது பொருள் விளங்குதற்கு உருபு முதலானவைகளை விரித்துச் சொல்லுத லும், **தொடர்ச்சொற் புணர்த்தல்**– ஒன்றற்கொன்று சம்பந்த முடைய சொல்லுகளைச் சேர்த்து வைத்தலும், **இரட்டுற மொழிதல்**– ஒரு வாக்கியத்தில் இரண்டு பொருள்படச் சொல்லுத லும், **ஏதுவின் முடித்தல்** – முன்காரணம் விளங்காததாகச் சொல்லப்பட்ட ஒன்றற்குப் பின் காரணம் விளங்கக் காட்டி முடிவு செய்தலும், **ஒப்பின் முடித்தல்** – ஒன்றற்குச் சொல்லப்பட்ட இலக்கணம் வேறொன்றற்கும் ஒத்து வருமாயின் அதற்கும் அதுவே இலக்கணமாக முடிவு செய்தலும், **மாட்டெறிந் தொழுகல்** – ஒன்றற்குச் சொல்லப்பட்ட இலக்கணத்தை அதனைப் பெறுதற்குரிய மற்றொன்றற்கு மாட்டிச் சொல்லி நடத்தலும், **இறந்தது விலக்கல்** – முற் காலத்து வழங்கிய இலக்கணங் களுள்ளே பிற் காலத்து வழங்காமற் போனதை நீக்குதலும், **எதிரது போற்றல்** – முற்காலத்து வழங்காமற் பிற்காலத்து வழங்கி வருகின்ற இலக்கணத்தைத் தழுவிக் கொள்ளுதலும், **முன் மொழிந்து கோடல்** – முன்னே ஒன்றனைச் சொல்லிப் பின்பு அதனை வேண்டுமிடந்தோறும் எடுத்துக் கொள்ளுதலும், **பின்னது நிறுத்தல்** – ஒரு பொருளுக்குக் கருவியாக முன் வைத்தற்குரியது அங்கே வைத்தற்கு இடம் பெறாதாயின் அப்பொருளின் பின்னே அதனை வைத்தலும், **விகற்பத்தின் முடித்தல்** – விளங்குதற் பொருட்டுப் பலவேறுபாடுகளின் சிறப்பு வாய்பாட்டான் முடித்தலும், **முடிந்தது முடித்தல்** – சிறப்பு வாய்பாட்டான் முடிந்ததைப் பொது வாய்பாட்டான் முடித்தலும், **உரைத்து மென்றல்** – பின்னே சொல்லப்படுவதை முன்னே ஒரு நிமித்தத்தினாலே சொல்ல வேண்டின் இதனைப் பின்னே சொல்லுவோ மென்பது தோன்ற அங்கே சுருக்கிச் சொல்லுதலும், **உரைத்தா மென்றல்** – முன்னே ஒரு நிமித்தத்தினாலே சொல்லப்பட்டதைப் பின்னே சொல்ல வேண்டிய விடத்து இதனை முன்னே தானே சொல்லினோ மென்பது தோன்றச் சொல்லாது விடுதலும், **ஒருதலை துணிதல்** – ஒன்றற்கொன்று மாறுபாடாகக் கொண்ட விரண்டு பட்சத்துள் ஒரு பட்சந் துணிதலும், **எடுத்துக் காட்டல்** – தான்சொல்லும் இலக்கணத்திற்குத் தானே இலக்கியத்தை எடுத்துக் காட்டுதலும், **எடுத்த மொழியி னெய்தவைத்தல்** – தான் சொல்லும் இலக்கணத்தைத் தானெடுத்துக் காட்டிய இலக்கியத்தில் இருக்க வைத்தலும், **இன்ன தல்ல திதுவென மொழிதல்** – சந்தேகிக்க நின்றவிடத்து இப்படிப் பட்ட தல்லாதது இதுவெனச் சொல்லுதலும், **எஞ்சிய சொல்லி னெய்தக் கூறல்**– சொல்லாது விடப்பட்டவற்றிற்குஞ் சொல்லப் பட்டதனால் இலக்கணம் பொருந்தச் சொல்லுதலும், **பிறநூன் முடிந்தது தானுடன்படுதல்** – பிறநூலிலே முடிந்த முடிபைத் தான் அங்கீகரித்தலும், **தன்குறி வழக்க மிக வெடுத்துரைத்தல்** – நூதனமாகத் தான்குறித்து வழங்கும் வழக்கத்தையே பலவிடங்களிலு மெடுத்துச் சொல்லுதலும், **சொல்லின் முடிவினப் பொருண் முடித்தல்** – சொல்லின் முடிவிலே அதன் பொருளையு முடித்தலும், **ஒன்றின முடித்தல்** – ஒன்றைச் சொல்லுமிடத்தில் அதற்கு இனமாகிய மற்றொன்றையும் விரியாதிருக்க வேண்டி அதனுடன் முடித்தலும், **தன்னின முடித்த** லென்பதற்கும் பொருளதுவே, **உய்த்துணர வைப்பு** – சில சூத்திர விதிகளைக் கொண்டு ஆராய்ந்தறிய

ஒருபொருளை வைத்தலும், **என வுத்தி** – எனத் தந்திர வுத்திகள், **எண்ணான்கு** – முப்பத்திரண்டாம், **எ–று.**

ஒன்றின முடித்தல், தன்னின முடித்தல், இரண்டும் ஒருத்தி. முன்சொன்ன மதங்களுக்கும் இவ்வுத்திகளுக்கும் உதாரணம் இந்நூலுள்ளே பின்வருமிடந்தோறும் காட்டப்படும்.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** நிறுத்த முறையே உத்தி முப்பத்திரண் டென்றதை வகுத்துணர்த்து கின்றது.

**இ–ள்.: நுதலிப்புகுதல்** – இதைச் சொல்லுவே னென்று குறித்துத் (துணிந்து) நடத்தலும், **ஒத்து முறை வைப்பு** – இயல்களைக் காரணகாரிய முறைப்படி வைத்தலும், **தொகுத்துச் சுட்டல்** – பலவற்றையுங் தொகையாக்கிச் சொல்லுதலும், **வகுத்துக் காட்டல்**–அவ்வாறு தொகுத்ததை யொவ்வொன்றாகப் பிரித்துச் சொல்லுதலும், **முடித்துக் காட்டல்** – (தான்சொல்லிய இலக்கண விதிகளிருக்கும்படி இலக்கியங்களை) முடித்துக் காட்டுதலும், **முடிவிடங்கூறல்** – அது முடியுமிடத்தைச் சொல்லுதலும், **தானெடுத்து மொழிதல்**–(ஆசிரிய வசனங் களைத்) தானெடுத்துச் சொல்லுதலும், **பிறன் கோட் கூறல்** – பிறன்கொண்ட கோட்பாட்டைச் சொல்லுதலும், **சொற் பொருள் விரித்தல்** – சொல்லின் பொருளை வெளிப்படும்படி விரித்துச் சொல்லுதலும், **தொடர்ச்சொல் புணர்த்தல்**–ஒன்றிற் கொன்று சம்பந்தப்படும்படி சொற்களைச் சேர்த்து வைத்தலும், **இரட்டுற மொழிதல்** – இரு பொருட்படச் சொல்லுதலும், **ஏதுவின் முடித்தல்** – முடிவு பெறாததைக் காரணத்தால் முடியவைத்தலும், **ஒப்பின் முடித்தல்** – (அங்கே சொல்லக்கூடாதாயினும் தான் சொல்லு மிலக்கண மொத்திருத்தலால் இயைபில்லாததையும் அவ்விடத்துக் கூட்டிச் சொல்லுதலும், **மாட்டெறிந் தொழுகல்** – இது இதற்கு மாமென மாட்டுதலும், (இதுவுமதுவென எடுத்தெறிந்து போதலும், **இறந்தது விலக்கல்** – முன்புள்ளதாய்ப் பின்பு வழங்காதாயின் அதனை விலக்குதலும், **எதிரது போற்றல்** – முன்பில்ல தாய்ப் பின்பு வழங்கி வருமாயின் அதைத் தழுவிக் கொள்ளுதலும், **முன் மொழிந்து கோடல்** – முன் ஓரிடத்தொன்றைச் சொல்லிப் பின் வேண்டுமிடந்தோறும் அதனை யெடுத்துக் கொள்ளுதலும், **பின்னது நிறுத்தல்** – முறை பிறழாமல் முன் வைக்க வேண்டியதைப் பின் வைத்தலும், **விகற்பத்தின் முடித்தல்** – தலைதடுமாற்றமாகச் சொல்லி முடித்தலும், **முடிந்தது முடித்தல்** – அவ்வாறு சொல்லி முடிந்ததைத் தொகுத்து முடித்தலும், **உரைத்து மென்றல்** – இவ் விதி பின்பு சொல்வோ மென்றலும், **உரைத்தா மென்றல்** – அது முன் சொன்னோ மென்றலும், **ஒருதலை துணிதல்** –இருவராலே மாறுபட்டவிரண்டினு ளொன்றைத் துணிந்தெடுத்துக் கொள்ளு தலும், **எடுத்துக்காட்டல்** – தான் சொல்லப்படு மிலக்கணம் அமைந்த சொற்களை யெடுத்துக் காட்டுதலும், **எடுத்த**

**மொழியி னெய்த வைத்தல்**–அவ்வாறெடுத்துச் சொன்ன சொற்களிலே தானே தான் சொல்லு மிலக்கணம் பொருந்த வைத்தலும், **இன்னதல்ல திது வென மொழிதல்** – சந்தேகப்பட வந்தவிடத்து இதுவன்று இதுதானெனத் துணிந்து சொல்லுதலும், **எஞ்சிய சொல்லி னெய்தக் கூறல்** – சொல்லாதனவற்றிற்குச் சொல்லிய வற்றா னிலக்கணம் பொருந்தச் சொல்லுதலும், **பிறநூன் முடிந்தததுதானுடன் படுதல்** – பிறநூலிலே சொல்லப்பட்ட விதிகளுக்குத்தான் சம்மதிப்படுதலும், **தன்குறி வழக்க மிக வெடுத்துரைத்தல்**–தான் புதிதாகச் சொல்லி வழங்குவதை யிடமிடந் தோறும் அதிகப்பட வெடுத்தெடுத்துச் சொல்லுதலும், **சொல்லின் முடிவினப் பொருண் முடித்தல்** – சொல் முடிந்த விடத்து அதன் பொருளு முடிய வைத்தலும், **ஒன்றின் முடித்த றன்னின் முடித்தல்** – ஒன்று கூறப் புகுந்தோன் அதை யொத்தி லாததனையும் அதற்கு இனமானதையும் அதனொடு கூட்டி முடித்தலும், **உய்த்துணர் வைப்பு** – நீட்டித்து ஆராய்ந்து பொருளுணர் வைத்தலும், **என** – என்று, **உத்தி யெண்ணான்கு** – தந்திரவுத்தி முப்பத்திரண்டாம், **எ** – **று.**

இவற்றுள், ஒன்றின் முடித்த றன்னின் முடித்த லென்பதை இரண்டு உத்தி யாக்கி, உய்த்துணர்வைப் பென்பதை உய்த் துணர்வைப்பெனு முத்தி யென வுத்திக்கு விசேடணமாக்கினும் அமையும். மதத்தினுள்ளும் அழகினுள்ளும் வருவன சில வற்றை உத்தியுள்ளுங் கூறியதென்னெனின், கொள்கை பற்றி மதமென்றும், சிறப்புப் பற்றி அழகென்றும், இம் மதம், அழகு முதலிய வெல்லாம் புத்தி நுட்பத்தினாலே யமைதல் பற்றி உத்தி யென்றுங் கூறப்படு மென்க. அப்படியாயின் மதம் அழகு எல்லாவற்றையும் உத்தியோடு கூட்டிக் கூறாமற் சிலவற்றைக் கூறியதென் னெனின், அளவின்றி வருமுத்திகளுள்ளே தலைமை பற்றிக் கூறிய இம் முப்பத்திரண்டினுள் வந்தனவற்றைச் சொன்னார்; ஒழிந்தன ஒழிந்தனவற்றுள் விரவி வருமென்க.

## கா.கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– நுதலி புகுதல்** – (முதலில் இதனைச் சொல்வே னென்று) சொல்லித் தொடங்குதலும், **ஓத்துமுறை வைப்பே** – இயல்களைக் கிரமப்படி வைத்தலும், **தொகுத்து சுட்டல்** – (எல்லாவற்றையும்) சேர்த்துச் சொல்லுதலும், **வகுத்து காட்டல்** – (அவ்வாறு தொகுத்துச் சொல்லியவற்றை வேறு வேறாகப்) பிரித்துச் சொல்லுதலும், **முடித்து காட்டல்** – (தான் சொன்ன இலக்கணங்களுக்குப் பொருந்த இலக்கியங்களை) முடித்துக் காட்டுதலும், **முடிவு இடம் கூறல்** – அவை முடியும் இடத்தைச் சொல்லுதலும், **தான் எடுத்து மொழிதல்** – (ஆசிரியவசனங் களை ஒவ்வோரிடத்துத்) தானெடுத்துச் சொல்லுதலும், **பிறன்கோள் கூறல்** – தன் நூலில் பிறனது கொள்கையைச்

சொல்லுதலும், **சொல் பொருள் விரித்தல்** – சொல்லினது பொருள் விளங்கும்படி (உருபு முதலியவற்றை) விரித்துச் சொல்லுதலும், **தொடர்சொல் புணர்த்தல்** – (ஒன்றற்கொன்று) சம்பந்தமான சொற்களைச் சேர்த்தலும், **இரண்டு உற மொழிதல்** – (ஒரு வாக்கியத்தில்) இரண்டுமுதல் பலபொருள் தோன்றச் சொல்லுதலும், **ஏதுவின் முடித்தல்** – (தான் சொல்லுவதற்குக்) காரணங்காட்டி முடித்தலும், **ஒப்பின் முடித்தல்** – ஒன்றற்குச் சொல்லிய இலக்கணம் மற்றொன்றற்கும் ஒத்துவருமாயின் அதற்கும் அதுவே இலக்கணமாக முடித்தலும், **மாட்டு எறிந்து ஒழுகல்** – (முன் ஒன்றற்குச் சொன்னதைப் பின் மன்றொன்றற் கும் ஆம் என்று) மாட்டிச் சொல்லுதலும், **இறந்தது விலக்கல்** – வழங்காதனவற்றை நீக்கலும், **எதிரது போற்றல்** – பிற்காலத்து வழங்குவனவற்றைத் தழுவிக் கொள்ளலும், **முன் மொழிந்து கோடல்** – முன்பு (ஒன்றைச்) சொல்லிப் (பின்பு வேண்டுமிடந் தோறும் அதனை) எடுத்துக் கொள்ளுதலும், **பின் அது நிறுத்தல்** – முன்னே வைக்கவேண்டிய ஒன்றை (முறைதவறாமல்) பின்னே வைத்தலும், **விகற்பத்தின் முடித்தல்** – வேறுவேறாக முடித்தலும், **முடிந்தது முடித்தல்** – அங்ஙனம் முடிந்ததைத் தொகுத்து முடித்தலும், **உரைத்தும் என்றல்** – இதனைப் பின்பு சொல்வோம் என்றலும், **உரைத்தாம் என்றல்** – (அதனை முன்னே) சொன்னோம் என்றலும், **ஒரு தலை துணிதல்** – (இருவரால் மாறுபட்ட இரண்டனுள்) ஒன்றைத் துணிந்தெடுத்துக் கொள்ளுதலும், **எடுத்து காட்டல்** – (தான் சொல்லும் இலக்கணம் அமைந்த இலக்கியத்தை) எடுத்துக்காட்டலும், **எடுத்த மொழி யின் எய்த வைத்தல்** – (தான் சொல்லும் இலக்கணத்தைத் தான் எடுத்துக்காட்டிய இலக்கியத்தில்) பொருந்த வைத்தலும், **இன்னது அல்லது இது என மொழிதல்** – (சந்தேகிக்க நின்றவிடத்து) 'இது அன்று, இது தான்' என்று துணிந்து சொல்லுத லும், **எஞ்சிய சொல்லின் எய்த கூறல்** – சொல்லாது விடப்பட்டவற்றுக்குச் சொல்லியவற்றால் இலக்கணம் பொருந்தச் சொல்லுதலும், **பிறநூல் முடிந்தது தான் உடன்படுதல்** – வேறு நூல்களில் சொல்லப்பட்ட விதிகளைத் தான் ஏற்றுக்கொள்ளலும், **தன் குறி வழக்கம் மிக எடுத்து உரைத்தல்** – (தான் புதிதாகக்) குறித்து வழங்குவதை (ப்பலவிடங்களில்) மிகுதியாக எடுத்துச் சொல்லுதலும், **சொல்லின் முடிவின் அ பொருள் முடித்தல்** – சொல்முடிந்த விடத்து அதன் பொருளையும் முடித்தலும், **ஒன்று இனம் முடித்தல் தன் இனம் முடித்தல்** – ஒன்றைச் சொல்லு மிடத்து அதற்கு இனமான மற்றொன்றையும் (விரியாதிருக்க வேண்டி அதனோடு) முடித்தலும், **உய்த்த உணர வைப்பு** – (சில விதிகளைக் கொண்டு ஒருபொருளை) ஆராய்ந்தறிய வைத்தலும், **என** – என்று (இப்படி), **உத்தி** – தந்திர உத்திகள், **எண்ணான்கு** – முப்பத்திரண்டாகும்.

குறிப்பு :–

'ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல்' என்பதை இரண்டுத்தியாக் கொண்டு, 'உய்த்துணரவைப் பெனுமுத்தி'

எனப்பாட மோதி உத்திக்கு அடைமொழி யாக்கி உரைப்பினும் அமையும் என்ப.

மதத்தினுள்ளும் அழகினுள்ளும் வருவன சிலவற்றை உத்தியுள்ளும் கூறியது என்னையெனின், கொள்கைபற்றி 'மதம்' என்றும், சிறப்புப்பற்றி 'அழகு' என்றும், இம்மதம் அழகு முதலிய வெல்லாம் அறிவு நுட்பத்தால் அமைத்தல் பற்றி 'உத்தி' என்றும் கூறியது என்க. **உரையிற் கோடல், ஏற்புழிக் கோடல், உடம்பொடு புணர்த்தல்** முதலிய உத்திகளும் உளவேனும் தலைமை பற்றி இங்கு முப்பத்திரண்டு என்றார் எனக் கொள்க.

'ஒன்றின் முடித்தல் தன்னின் முடித்தல்' என்றொரு பாடமும் உண்டு. முற்கூறிய மதம் முதலியவற்றுக்கு உதாரணங்களை வந்தவிடங்களிற் காண்க.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: நுதலிப் புகுதல்** – இது செய்யின் இப்படியாகு மென்று கருதிப் புகுதலும், **ஒத்து முறை வைப்பு** – இயல்களைக் காரண காரிய முறைப்படி வைத்தலும், **தொகுத்துச் சுட்டல்** – பலவற்றையுந் திரட்டிக் காட்டுதலும், **வகுத்துக் காட்டல்** – அப்படித் திரட்டிக் காட்டப்பட்டவைகளை வெவ்வேறாகக் கூறுபடுத்துக் காட்டுதலும், **முடித்துக் காட்டல்** – தான் மேலோர் முடித்தவாறு முடித்துக் காட்டுதலும், **முடிவு இடங் கூறல்** – தான் சொல்லும் இலக்கணத்திற்கு இலக்கியந் தோன்றுமிடத்தைச் சொல்லுதலும், **தான் எடுத்து மொழிதல்** – பழைய சூத்திரத்தைத் தான் ஒரோ விடத்து எடுத்துச் சொல்லுதலும், **பிறன்கோட் கூறல்** – தன்னூலிற் பிறனது கோட்பாட்டைச் சொல்லுதலும், **சொற்பொருள் விரித்தல்** – சொல்லினது பொருள் விளங்குதற்கு உருபு முதலியவைகளை விரித்துச் சொல்லுதலும், **தொடர்ச்சொற் புணர்த்தல்** – ஒன்றற் கொன்று சம்பந்தமுடைய வாக்கியங்களைத் தொடுத்தலும், **இரட்டு உற மொழிதல்** – ஒரு வாக்கியத்தை இரண்டு பொருள் படச் சொல்லுதலும், **ஏதுவின் முடித்தல்** – முன் காரணம் விளங்கப் பொறாத தொன்றைப் பின் காரணத்தான் முடிவு செய்தலும், **ஒப்பின் முடித்தல்** – ஒன்றற்குச் சொல்லப்படும் இலக்கணம் வேறொன்றற்கும் ஒத்து வருமாயின் அதற்கும் அதுவே இலக்கணமாக உடன் முடிவு செய்தலும், **மாட்டெறிந்து ஒழுகல்** – ஒன்றற்குச் சொல்லப்பட்ட இலக்கணத்தை அதனைப் பெறுதற்குரிய மற்றொன்றற்கும் மாட்டிவிட்டு நடத்தலும், **இறந்தது விலக்கல்** – முற்காலத்து வழங்கிய இலக்கணங் களுள்ளே பிற்காலத்து வழங்காதொழிந்ததை நீக்குதலும், **எதிரது போற்றல்** – முற்காலத்து வழங்காது பிற்காலத்து வழங்கி வரும் இலக்கணத்தைத் தழுவிக் கொள்ளுதலும், **முன் மொழிந்து கோடல்** – பின்பு வேண்டுமிடந்தோறும் எடுத்தாளும் பொருட்டு முன்னே ஒன்றனைச் சொல்லிக் கொள்ளுதலும், **பின்னது நிறுத்தல்** – ஒரு பொருளுக்குக் கருவியாக

முன் வைத்தற்குரியது அங்கே வைத்தற்கு இடம்பெறாதாயின் அப்பொருளின் பின் அதனை வைத்தலும், **விகற்பத்தின் முடித்தல்** – வெவ்வேறாக முடித்தலும், **முடிந்தது முடித்தல்** – வெவ்வேறாக முடிந்ததைப் புலப்படவேண்டித் தொகுத்து முடித்தலும், **உரைத்தும் என்றல்** – பின்னே சொல்லப்படுவதை முன்னே ஒரு நிமித்தத்தினாலே சொல்ல வேண்டின் இதனைப் பின்னே சொல்வோ மென்பது தோன்ற அங்கே சுருக்கிச் சொல்லுதலும், **உரைத்தாம் என்றல்** – முன்னே ஒரு நிமித்தத்தி னாலே சொல்லப்பட்டதைப் பின்னே சொல்ல வேண்டிய விடத்து இதனை முன்னே தானே சொல்லினோ மென்பது தோன்றச் சொல்லாது விடுதலும், **ஒருதலை துணிதல்** – இருவராலே விரோதமாகக் கொள்ளப்பட்ட இரண்டு பக்கத்துள் ஒரு பக்கந் துணிதலும், **எடுத்துக் காட்டல்** – தான் சொல்லும் இலக்கணத் திற்குத் தானே இலக்கியத்தை எடுத்துக் காட்டுதலும், **எடுத்த மொழியின் எய்த வைத்தல்** – தான் சொல்லும் இலக்கணத் தைத் தானெடுத்துக் காட்டிய இலக்கியத்திலே பொருந்த வைத்தலும், **இன்னது அல்லது இது என மொழிதல்**–சந்தேகிக்க நின்றவிடத்து இப்படிப்பட்ட தல்லாதது இதுவெனச் சொல்லுதலும், **எஞ்சியசொல்லின் எய்தக் கூறல்** – சொல்லாது விடப்பட்ட வைக்குச் சொல்லப்பட்டதனால் இலக்கணம் பொருந்தச் சொல்லுதலும், **பிற நூல் முடிந்தது தான் உடன்படுதல்** – பிறநூலிலே முடிந்த முடிபைத் தான் அங்கீகரித்தலும், **தன் குறி வழக்கம் மிக எடுத்து உரைத்தல்** – தான் புதிதாகக் குறித்து வழங்குவதைப் பலவிடங்களிலும் எடுத்துச் சொல்லுதலும், **சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தல்** – சொல்லின் முடிவிலே அதன்பொருளையு முடித்தலும், **ஒன்றின முடித்தல் தன்இனம் முடித்தல்** – விதியால் ஒற்றுமைப்பட்டவைகளை யொருங்கு கூட்டி முடித்தல் ஒன்றைச் சொல்லுமிடத்து அதற்கினமாகிய மற்றொன்றையும் அதனோடு முடித்தலும், **உய்த்து உணர வைப்பு** – சில சூத்திர விதிகளைக் கொண்டு ஆராய்தறியும்படி ஒருபொருளை வைத்தலும், **என உத்தி எண்ணான்கு** – எனத் தந்திரவுத்திகள் முப்பத்திரண்டாம், **எ – று.**

ஒன்றின முடித்த றன்னின முடித்தல் என்னும் இரண்டும் ஒருத்தி. இம் முப்பத்திரண்டே யன்றி, உரையிற் கோடல், மொழிந்த பொருளோடொன்ற வவ்வயின் மொழியாததனையு முட்டின்று முடித்தல், உடம்பொடு புணர்த்தல், ஏற்புழிக்கோடல் எனப் பிறவும் உள எனக் கொள்க.

முன் சொல்லிய மதங்களுக்கும் உத்திகளுக்கும் உதாரணம் இந்நூலினுள்ளே பின்வரும் இடந்தோறுங் காட்டப்படும்.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். நுதலிப் புகுதல்** – இதுசெய்யின் இப்படியாகு மென்று கருதிப் புகுதலும், **ஓத்து முறை வைப்பு** – இயல்களைக் காரண காரிய முறைப்படி வைத்தலும், **தொகுத்துச் சுட்டல்** – பல வற்றையுந் திரட்டிக் காட்டுதலும்,

**வகுத்துக் காட்டல்** – அப்படித் திரட்டிக் காட்டப்பட்டவைகளை வெவ்வேறாகக் கூறுபடுத்துக் காட்டுதலும், **முடித்துக் காட்டல்** – தான் மேலோர் முடித்தவாறு முடித்துக்காட்டுதலும், **முடிவு இடம் கூறல்** – தான் சொல்லும் இலக்கணத்திற்கு இலக்கியந் தோன்றுமிடத்தைச் சொல்லுதலும், – **தான் எடுத்து மொழிதல்** – பழைய சூத்திரத்தைத் தான் ஓரோ விடத்து எடுத்துச் சொல்லுதலும், **பிறன் கோட் கூறல்** – தன்னூலிற் பிறனது கோட்பாட்டைச் சொல்லுதலும், **சொற் பொருள் விரித்தல்** – சொல்லினது பொருள் விளங்குதற்கு உருபு முதலியவைகளை விரித்துச் சொல்லுதலும், **தொடர்ச் சொற் புணர்த்தல்** – ஒன்றற்கொன்று சம்பந்தமுடைய சொற்களைச் சேர்த்தலும், **இரட்டு உறமொழிதல்** – ஒரு வாக்கியத்தை இரண்டு பொருள்படச் சொல்லுதலும், **ஏதுவின் முடித்தல்** – முன் காரணம் விளங்கப் பெறாததொன்றைப் பின்காரணம் விளங்க வைத்து முடிவு செய்தலும், **ஒப்பின் முடித்தல்** – ஒன்றற்குச் சொல்லப்படும் இலக்கணம் வேறொன்றற்கும் ஒத்து வருமாயின் அதற்கும் அதுவே இலக்கணமாக உடன்முடிவு செய்தலும், **மாட்டெறிந்து ஒழுகல்** – ஒன்றற்குச் சொல்லப்பட்ட இலக் கணத்தை அதனைப் பெறுதற்குரிய மற்றொன்றற்கும் மாட்டி விட்டு நடத்தலும், **இறந்தது விலக்கல்** – முற்காலத்து வழங்கிய இலக்கணங்களுள்ளே பிற்காலத்து வழங்கா தொழிந்ததை நீக்குதலும், **எதிரது போற்றல்** – முற்காலத்து வழங்காது. பிற் காலத்து வழங்கிவரும் இலக்கணத்தைத் தழுவிக் கொள்ளுதலும், **முன்மொழிந்து கோடல்** – பின்பு வேண்டுமிடந் தோறும் எடுத்தாளும் பொருட்டு முன்னே ஒன்றனைச் சொல்லிக் கொள்ளுதலும், **பின்னது நிறுத்தல்** – ஒருபொருளுக்குக் கருவியாக முன் வைத்தற்குரியது அங்கே வைத்தற்கு இடம் பெறாதாயின் அப்பொருளின் பின் அதனை வைத்தலும், **விகற்பத்தின் முடித்தல்**– (விளங்குதற் பொருட்டு) வெவ்வேறாக முடிந்ததைப் புலப்பட வேண்டித் தொகுத்து முடித்தலும், **உரைத்தும் எனறல்** – பின்னே சொல்லப்படுவதை முன்னே ஒரு நிமித்தத்தினாலே சொல்ல வேண்டின் இதனைப் பின்னே சொல்வோ மென்பது தோன்ற அங்கே சுருக்கிச் சொல்லுதலும், **உரைத்தாம் என்றல்** – முன்னே ஒரு நிமிடத்தத்தினாலே சொல்லப்பட்டதைப் பின்னே சொல்ல வேண்டியவிடத்து இதனை முன்னேதானே சொல்லினோம் என்பது தோன்ற சொல்லாது விடுதலும், **ஒருதலை துணிதல்** – இருவராலே விரோதமாகக் கொள்ளப்பட்ட இரண்டு பக்கத்துள் ஒருபக்கம் துணிதலும், **எடுத்துக் காட்டல்** – தான் சொல்லும் இலக்கணத் திற்குத் தானே இலக்கியத்தை எடுத்துக் காட்டுதலும் – **எடுத்த மொழியின் எய்தவைத்தல்** – தான் சொல்லும் இலக்கணத்தைத் தானெடுத்துக் காட்டிய இலக்கியத்திலே பொருந்த வைத்தலும், **இன்னது அல்லது இது என மொழிதல்** – சந்தேகிக்க நின்ற விடத்து இப்படிப்பட்டதல்லாதது இதுவெனச் சொல்லுதலும், **எஞ்சிய சொல்லின் எய்தக் கூறல்** – சொல்லாது விடப்பட்ட னவற்றிற்குச் சொல்லப்பட்டதனால் இலக்கணம் பொருந்தச் சொல்லதலும், **பிற நூல் முடிந்தது தான் உடன் படுதல்** – பிற நூலிலே முடிந்த முடிபைத் தான் அங்கீகரித்ததும்,

**தன்குறி வழக்கம் மிக எடுத்து உரைத்தல்** – தான் புதிதாகக் குறித்து வழங்குவதைப் பலவிடங்களினும் எடுத்துச் சொல்லுதலும், **சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தல்**– சொல்லின் முடிவிலேஅதன் பொருளையு முடித்தலும், **ஒன்றின முடித்தல் தன் இனம் முடித்தல்** – விதியால் ஒற்றுமைப்பட்டவைகளை ஒருங்கு கூட்டி முடித்தல் ஒன்றைச் சொல்லுமிடத்து அதற்கின மாகிய மற்றொன்றையும் அதனோடு முடித்தலும், **உய்த்து உணர வைப்பு** – சில சூத்திர விதிகளைக் கொண்டு ஆராய்ந் தறியும்படி ஒருபொருளை வைத்தலும், **என உத்தி எண் ணான்கு** – எனத் தந்திர வுத்திகள் முப்பத் திரண்டாம். எ–று.

> ஒன்றின முடித்த றன்னின முடித்தல் என்னும் இரண்டும் ஒருத்தி, இம்முப்பத்திரண்டேயன்றி, உரையிற் கோடல், மொழிந்த பொருளோடொன்ற வவ்வயின் மொழியாததனையு முட்டின்று முடித்தல், உடம்பொடு புணர்த்தல், ஏற்புழிக்கோடல் எனப் பிறவும் உள எனக் கொள்க.
>
> முன்சொல்லிய மதங்களுக்கும் உத்திகளுக்கும் உதாரணம் இந்நூலினுள்ளே பின்வரும் இடந்தொறுங் காட்டப்படும்.

## வை.மு. சடகோபராமாநுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ – ள்.: நுதலி புகுதல்** – (இதனைச்சொல்வே னென்று முதலிற்) சொல்லித் தொடங்குதலும், **ஒத்து முறை வைப்பு** – இயல்களை (யாதாயினும் ஓர் ஏற்ற) முறையின்படி வைத்தலும், **தொகுத்து சுட்டல்** – (பலவற்றையும்) திரட்டிச் சொல்லுதலும், **வகுத்து காட்டல்** (அவ்வாறு தொகுத்துச் சொல்லியவற்றை வெவ்வேறாக) விவரித்துச் சொல்லுதலும், **முடித்து காட்டல்** – (மேலோர் முடித்தவாறு தான்) முடித்துக் காட்டுதலும், **முடிவு இடம் கூறல்** – (தான் சொல்லும் இலக்கணத்திற்கு) இலக்கியந் தோன்று மிடத்தைச் சொல்லுதலும், **தான் எடுத்து மொழிதல்** – (பழஞ் சூத்திரங்களைத்) தான் (ஓரோரிடத்திலே) எடுத்துச் சொல்லுதலும், **பிறன் கோள் கூறல்** – பிறன் கொண்ட கொள்கையை (த் தனது நூலிற்) சொல்லுதலும், **சொல் பொருள் விரித்தல்** – சொல்லின் பொருள் வெளிப்படையாக விளங்கும்படி விவரித்துச் சொல்லுதலும், **தொடர் சொல் புணர்த்தல்** – (ஒன்றற்கு ஒன்று) சம்பந்த முடைய சொற்களைச் சேர்த்து வைத்தலும், **இரண்டு உற மொழிதல்** – (ஒரு வாக்கியத்தில்) இரண்டு (பல) பொருள் ஒருங்கே படும்படி சொல்லுதலும், **ஏதுவின் முடித்தல்** – (முன்பு காரணம் விளங்காமற் சொல்லப் பட்ட ஒன்றைப் பின்பு) காரணம் விளங்கக் காட்டி முடிவு செய்தலும், **ஒப்பின் முடித்தல்**– (அங்கே சொல்லக் கூடாதாயினும் ஒன்றற்குத் தான் சொல்லும் இலக்கணம் வேறொன்றற்கும்) ஒத்து வருமாயின் (அதற்கும் அதுவே இலக்கணமாக

இயைபில் லாததையும் அவ்விடத்து) உடன்கூட்டி முடிவு செய்தலும், **மாட் டெறிந்து ஒழுகல்** – (ஒன்றற்குச் சொல்லப்பட்ட இலக்கணத்தை அதனைப் பெறுதற்கு உரிய மற்றொன்றற்கும்) மாட்டிச் சொல்லுதலும், **இறந்தது விலக்கல்** – முன்பு உள்ளதாய்ப் பின்பு வழங்காதாயின் அதனை விலக்குதலும், **எதிரது போற்றல்** – முன்பு இல்லாததாய்ப் பின்பு வழங்கி வருமாயின் அதனைத் தழுவிக் கொள்ளுதலும், **முன் மொழிந்து கோடல்** – முன்பு ஓரிடத்து ஒன்றைச் சொல்லி (ப் பின்பு அதனை வேண்டுமிடந் தோறும்) எடுத்துக் கொள்ளுதலும், **பின் அது நிறுத்தல்** – முறை தவறாமல் முன் வைக்க வேண்டியதைப் பின்னே வைத்தலும், **விகற்பத்தின் முடித்தல்** – (விளங்குதற் பொருட்டுப்) பல வேறுபாடுகளின் (சிறப்பு வாய்பாட்டால்) முடித்தலும், **முடிந்தது முடித்தல்** – (அவ்வாறு சிறப்பு வாய்ப்பாட்டால்) முடிந்ததை (ப் புலப்பட வேண்டிப் பொதுவாய்பாட்டால் தொகுத்து) முடித்தலும், **உரைத்தும் என்றல்** – (பின்னே சொல்லப்படுவதை முன்னே ஒரு நிமித்தத்தினாற் சொல்ல வேண்டின்) இதனைப் பின்னே சொல்வோமென்பது தோன்ற அங்கே சுருக்கிச் சொல்லுதலும், **உரைத்தாம் என்றல்** – (முன்னே ஒரு நிமித்தத்தினாலே சொல்லப்பட்டதைப் பின்னே சொல்ல வேண்டிய விடத்து) இதனை முன்னேதானே சொன்னோமென்பது தோன்ற அங்கே மீளவுஞ் சொல்லாது விடுதலும், **ஒருதலை துணிதல்** – (இருவராலே ஒன்றற்கு ஒன்று விரோதமாகக் கொள்ளப்பட்ட இரண்டு பக்ஷங்களுள்) ஒருபக்ஷத்தைத் துணிந்து எடுத்துக் கொள்ளுதலும், **எடுத்து காட்டல்** – (தான்சொல்லும் இலக்கணத் திற்கு அமைந்த இலக்கியத்தைத் தானே) எடுத்துக் காட்டுதலும், **எடுத்த மொழியின் எய்த வைத்தல்** – தான் எடுத்துக்காட்டிய இலக்கியத்தில் (தான் சொல்லும் இலக்கணத்தைப்) பொருந்தி யிருக்க வைத்தலும், **இன்னது அல்லது இது என மொழிதல்**–(சந்தேகப்பட நின்றவிடத்து) இதுவன்று இதுதானென்று துணிந்து சொல்லுதலும்,**எஞ்சிய சொல்லின் எய்தகூறல்** –சொல்லாதுவிடப் பட்டவற்றிற்குஞ் சொல்லியவற்றால் (இலக்கணம்) பொருந்தச் சொல்லுதலும், **பிற நூல் முடிந்தது தான் உடன் படுதல்**–வேறு நூல்களிலே சொல்லப்பட்ட கொள்கையைத் தான் அங்கீகரித் தலும், **தன் குறி வழக்கம் மிக எடுத்து உரைத்தல்** – தான் (நூதனமாகக்) குறித்து வழங்கியதை (ப் பல இடங்களில்) அதிகமாக எடுத்துச் சொல்லுதலும், **சொல்லின் முடிவின் அ பொருள் முடித்தல்** – சொல் முடிந்தவிடத்து அதன் பொருளையும் முடிய வைத்தலும், **ஒன்று இனம் முடித்தல் தன் இனம் முடித்தல்** – (விதியால்) ஒற்றுமைப்பட்டவற்றை ஒருங்குகூட்டி முடித்தல் = ஒன்றைச் சொல்லுமிடத்து அதற்கு இனமாகிய மற்றொன்றையும் (விரியாதிருக்க வேண்டி அதனுடனே) கூட்டி முடித்தலும், **உய்த்து உணர வைப்பு** – (சில சூத்திர விதிகளைக் கொண்டு) ஆராய்ந்து அறியும்படி (ஒரு பொருளை) வைத்தலும், **என** – என்று; **உத்தி** – தந்திர யுக்திகள், **எண் நான்கு** – முப்பத்திரண்டாம்; **எ – று.**

உத்தி = யுத்தி.

'ஒன்றினமுடித்தல் தன்னினமுடித்தல்' என்பது – ஓர் உத்தி; இதனை இரண்டு உத்தியாகக் கொண்டு, 'உய்த்துணர வைப்பெனும்' எனப் பாடமோதி, அதனை உத்திக்கு விசேஷண மாக்கி உரைப்பாரும் உளர்; அவ்வுரைக்கு, ஒன்றினம் – ஒரு பொருட்கூட்டமும், தன்னினம் – பலபொருளீட்டமுமாம்.

மதத்தினுள்ளும் அழகினுள்ளும் வருவன சிலவற்றை உத்தியுள்ளுங் கூறியது என்னை யெனின், கொள்கை பற்றி மதமென்றும், சிறப்புப் பற்றி அழகென்றும், இந்த மதம் அழகு முதலிய எல்லாம் புத்தி நுட்பத்தால் அமைதல் பற்றி உத்தி யென்றும் கூறப்பட்டன வென்க.

தலைமை பற்றிக் கூறிய இம் முப்பத்திரண்டே யன்றி, உரையிற்கோடல், உடம்பொடு புணர்த்தல், ஏற்புழிக்கோடல், மொழிந்த பொருளோடொன்ற அவ்வயின் மொழியாததனையும் முட்டின்று முடித்தல் முதலாகப் பிறவும் சில உள்ளன வெனக் கொள்க; அவற்றையும் ஒருவாறு இவற்றில் அடக்கவுங் கூடும்.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.: நுதலிப் புகுதல்** – இது செய்யின் இப்படியாகு மென்று கருதிப் புகுதலும், **ஒத்து முறை வைப்பு** – இயல்களைக் காரண காரிய முறைப்படி வைத்தலும், **தொகுத்துச் சுட்டல்** – பலவற்றையுந் திரட்டிக் காட்டுதலும், **வகுத்துக் காட்டல்** – அப்படித் திரட்டிக் காட்டப்பட்டவைகளை வெவ்வேறாகக் கூறுபடுத்துக் காட்டுதலும், **முடித்துக் காட்டல்** – தான் மேலோர் முடித்தவாறு முடித்துக் காட்டுதலும், **முடிவு இடங் கூறல்** – தான் சொல்லும் இலக்கணத்திற்கு இலக்கியந் தோன்று மிடத்தைச் சொல்லுதலும், **தான் எடுத்து மொழிதல்**– பழைய சூத்திரத்தைத் தான் ஒரோ விடத்து எடுத்துச் சொல்லுதலும், **பிறன் கோட் கூறல்**–தன்னூலிற் பிறனது கோட்பாட்டைச் சொல்லுதலும், **சொற் பொருள் விரித்தல்** – சொல்லினது பொருள் விளங்குதற்கு உருபு முதலியவைகளை விரித்துச் சொல்லுதலும், **தொடர்ச் சொற் புணர்த்ல்** – ஒன்றற் கொன்று சம்பந்த முடைய வாக்கியங்களைத் தொடுத்தலும், **இரட்டு உற மொழிதல்**–ஒரு வாக்கியத்தை இரண்டு பொருள் படச் சொல்லுதலும், **ஏதுவின் முடித்தல்** – முன் காரணம் விளங்கப் பெறாததொன்றைப் பின் காரணத்தான் முடிவு செய்தலும், **மாட்டெறிந்து ஒழுகல்** – ஒன்றற்குச் சொல்லப்பட்ட இலக்கணத்தை அதனைப் பெறுதற்குரிய மற்றொன்றற்கும் மாட்டிவிட்டு நடத்தலும், **இறந்தது விலக்கல்** – முற்காலத்து வழங்கிய இலக்ணங்களுள்ளே பிற்காலத்து வழங்கா தொழிந்தை நீக்குதலும், **எதிரது போற்றல்** – முற்காலத்து வழங்காது பிற் காலத்து வழங்கி வரும் இலக்கணத்தைத் தழுவிக் கொள்ளுதலும், **முன்மொழிந்து கோடல்** – பின்பு வேண்டுமிடந் தோறும் எடுத்தாளும் பொருட்டு முன்னே ஒன்றனைச்

சொல்லிக் கொள்ளுதலும், **பின்னது நிற்றல்** – ஒரு பொருளுக்குக் கருவியாக முன் வைத்தற்குரியது அங்கே வைத்தற்கு இடம் பெறதாயின் அப்பொருளின் பின் அதனை வைத்தலும், **விகற்பத்தின் முடித்தல்** – வெவ்வேறாக முடித்தலும், **முடிந்தது முடித்தல்** – வெவ்வேறாக முடிந்ததைப் புலப்படுத்த வேண்டித் தொகுத்து முடித்தலும், **உரைத்தும் என்றல்** – பின்னே சொல்லப்படுவதை முன்னே ஒரு நிமித்தத்தி னாலே சொல்ல வேண்டின் இதனைப் பின்னே சொல்வோ மென்பது தோன்ற அங்கே சுருக்கிச் சொல்லுதலும், **உரைத்தாம் என்றல்** – முன்னே ஒரு நிமித்தத் தினாலே சொல்லப்பட்டதைப் பின்னே சொல் வேண்டியவிடத்து இதனை முன்னே தானே சொல்லினோமென்பது தோன்றச் சொல்லாது விடுதலும், **ஒருதலை துணிதல்** – இருவராலே விரோதமாகக் கொள்ளப்பட்ட இரண்டு பக்கத்துள் ஒரு பக்கந் துணிதலும், **எடுத்துக் காட்டல்** – தான் செல்லும் இலக்கணத் திற்குத் தானே இலக்கியத்தை எடுத்துக் காட்டுதலும், **எடுத்த மொழியின் எய்த வைத்தல்** – தான் சொல்லும் இலக்ணத்தைத் தானெத்துக் காட்டிய இலக்கியத் திலே பொருந்த வைத்தலும், **இன்னது அல்லது இது என மொழிதல்**– சந்தேகிக்க நின்ற விடத்து இப்படிப்பட்ட தல்லாதது இது வெனச் சொல்லுதலும், **பிற நூல் முடிந்தது தான் உடன்படுதல்** – பிற நூலிலே முடிந்த முடிபைத் தான் அங்கீகரித்தலும், **தன் குறி வழக்கம் மிக எடுத்து உரைத்தல்** – தான் குறித்து வழங்குவதைப் பலவிடங்களினும் எடுத்துச் சொல்லுதலும், **சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தல்** – சொல்லின் முடிவிலே அதன் பொருளையும் முடித்லும், **ஒன்றின முடித்தல் தன் இனம் முடித்தல்** – விதியால் ஒற்றுமைப் பட்டவைகளை யொருங்கு கூட்டி முடித்தலின் முடிக்குமிடத்து அதற்கினமாகிய மற்றொன்றையும் அதனோடு முடித்தலும், **உயத்து உணர வைப்பு** – சில சூத்திர விதிகளைக் கொண்டு ஆராய்ந்தறியும்படி ஒரு பொருளை வைத்தலும், **என உத்தி எண்ணான்கு** – எனத் தந்தி உத்திகள் முப்பத்திரண்டாம். **எ–று.**

ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல் என்பது ஒருத்தி. இதை இரண்டு உத்தியாக்கி, 'உய்த்துணர வைப்பு' என்பன ஓர் உத்தியாகாமல் உத்திக்கு விசேஷணமாகக் கொள்ளவும் கூடும்.

'ஒன்றின் முடித்தல் தன்னின் முடித்தல்' – என்பதும் பாடம்.

இம் முப்பத்திரண்டேயன்றி, உரையிற் கோடல், மொழிந்த பொருளோடொன்ற வவ்வயின் மொழியாததனையும் முட்டின்று முடித்தல், உடம்போடு புணர்த்தல், ஒன்றினொன் றெய்தவைத் தல், ஏற்புழிக்கோடல் எனப் பிறவும் உள எனக் கொள்க.

முன் சொல்லிய மதங்களுக்கும் உத்திகளுக்கும் உதாரணம் இந் நூலினுள்ளே பின் வரும் இடந்தோறுங் காட்டப்படும்.

**பொ—ரை.:** (இதனைச் சொல்லுவே னென்று) சொல்லிப் புகுதலும், இயல்களைக் (காரண காரிய) முறையால் வைத்தலும், (பலவும்) தொகுத்துக் காட்டலும், (அப்படித் திரட்டிக் காட்டியவை களை) வேறு வேறு விரித்துக் காட்டுதலும், (தான் மேலோர் முடித்தவாறு) முடித்துக் காட்டுதலும், (தான் சொல்லும் இலக்கணத்திற்கு) இலக்கியந் தோன்றுமிடத்தைச் சொல்லுதலும், தான் (பழைய சூக்திரத்தை) எடுத்துச் சொல்லுதலும், (தன்னூலிற்) பிறனது கோட்பாட்டைச் சொல்லுதலும், சொல்லினது பொருள் (விளங்குதற்கு உருபு முதலானவைகளை) விரித்துச் சொல்லு தலும், ஒன்றற்கொன்று சம்பந்த முடைய சொற்களைச் சேர்த்து வைத்தலும், (ஒரு வாக்கியத்தில்) இரண்டு பொருள்படச் சொல்லுதலும், (முன் காரணம் விளங்கப் பெறாததொன்றைப்) பின் காரணத்தான் முடிவு செய்தலும், (ஒன்றற்குச் சொல்லப்பட்ட இலக்கணம் வேறொன்றற்கும்) ஒத்து வருமாயின் அதற்கும் அதுவே இலக்கணமாக முடிவு செய்தலும், (ஒன்றற்குச் சொல்லப் பட்ட இலக்கணத்தை அதனைப் பெறுதற்குரிய மற்றொன்றற்கு) மாட்டிச் சொல்லி நடத்தலும், (முற்காலத்து வழங்கிய இலக்கணங்களுள்ளே பிற்காலத்து) வழங்காமற் போனதை நீக்குதலும், (முற்காலத்து வழங்காமல் பிற்காலத்து) வழங்கி வருகின்ற இலக்கணத்தைத் தழுவிக்கொள்ளுதலும், முன்னே ஒன்றனைச் சொல்லி (ப்பின்பு அதனை வேண்டு மிடந்தோறும்) எடுத்துக் கொள்ளுதலும், (ஒரு பொருளுக்குக் கருவியாக முன் வைத்தற் குரியது அங்கே வைத்தற்கு இடம் பெறாதாயின் அப்பொருளின்) பின்னே அதனை வைத்தலும், (விளங்குதற் பொருட்டு) வெவ்வேறாக முடித்தலும், (வேவ்வேறாக) முடிந்ததை (த் தொகுத்து) முடித்தலும், (பின்னே சொல்லப்படுவதை முன்னே ஒரு நிமித்தத்தினாலே சொல்லவேண்டின் இதனைப்) பின்னே சொல்லுவோ மென்பது தோன்ற அங்கே சுருங்கிச் சொல்லுதலும், (முன்னே ஒரு நிமித்தத்தினாலே சொல்லப்பட்டதைப் பின்னே சொல்ல வேண்டியவிடத்து இதனை) முன்னே தானே சொல்லினோ மென்பது தோன்றச் சொல்லாது விடுதலும், (ஒன்றற் கொன்று மாறுபாடாகக் கொண்ட இரண்டுபட்சத்துள்) ஒருபட்சந் துணிதலும், (தான் சொல்லும் இலக்கணத்திற்குத் தானே இலக்கியத்தை) எடுத்துக்காட்டுதலும், (தான் சொல்லும் இலக்ணத்தைத்) தான் எடுத்துக்காட்டிய இலக்கியத்தில் இருக்கவைத்தலும், (சந்தேகிக்க நின்றவிடத்து) இப்படிப்பட்ட தல்லாதது இதுவெனச் சொல்லுதலும், சொல்லாது விடப்பட்டவற்றிற்கும் (சொல்லப்பட்டதனால்) இலக்கணம் பொருந்தச் சொல்லுதலும், பிறநூலிலே முடிந்த முடிபைத் தான் அங்கீகரித்தலும், தான் (நூதனமாகக்) குறித்து வழங்கும் வழக்கத்தையே பலவிடங்களிலும் எணாடுத்துச் சொல்லுதலும், சொல்லின் முடிவிலே அதன் பொருளையும் முடித்தலும், (விதியாய்) ஒற்றுமைப்பட்டவைகளை ஒருங்கு கூட்டி முடித்தலும், (ஒன்றைச் சொல்லுமிடத்தில்) அதற்கினமாகிய மற்றொன்றையும் (விரியா திருக்க வேண்டி அதனுடன்) முடித்தலும், (சில சூத்திரவிதிகளைக் கொண்டு) ஆராய்ந்தறிய ஒரு பொருளை வைத்தலும் எனத் தந்திரவுத்திகள் முப்பத்திரண்டாம். எ—று.

ஒன்றின முடித்தல், தன்னின முடித்தல் என்னு மிரண்டும் ஒருத்தி. முன் சொன்ன மதங்களுக்கும் இவ்வுத்திகளுக்கும் உதாரணம் இந்நூலுள்ளே பின்வரு மிடந்தோறும் காட்டப்படும்.

## கா.நமச்சிவாய முதலியார்

1. **நுதலிப் புகுதல்** – (இதனைச் சொல்லுவேனென்று) கருதிப் புகுதலும்.
2. **ஒத்து முறை வைப்பு** – இயல்களைக் காரண காரிய முறையால் வைத்தலும்,
3. **தொகுத்துச் சுட்டல்** – பலவுந் தொகுத்துக் காட்டலும்,
4. **வகுத்துக் காட்டல்** – (தொகுத்துக் காட்டியவைகளை வேறு வேறாக விரித்துக் காட்டுதலும்)
5. **முடித்துக் காட்டல்** – (தான் விரித்த பொருளை முடித்துக் காட்டுதலும்)
6. **முடிவு இடங் கூறல்** – (தான் சொல்லும் இலக்கணத்திற்கு) இலக்கியந் தோன்றுமிடத்தைச் சொல்லுதலும்,
7. **தான் எடுத்து மொழிதல்**– தான் (பழைய சூத்திரத்தை) எடுத்துச் சொல்லுதலும்,
8. **பிறன்கோள் கூறல்** – (தன்னூலிற்) பிறனது கோட்பாட்டைச் சொல்லுதலும்,
9. **சொற்பொருள்** விரித்தல் – சொல்லினது பொருள் (விளங்குதற்கு உருபு முதலானவைகளை) விரித்துச் சொல்லுதலும்,
10. **தொடர் சொல் புணர்த்தல்** – ஒன்றற்கொன்று தொடர்புடைய சொற்களைச் சேர்த்து வைத்தலும்,
11. **இரட்டுற மொழிதல்** – இரண்டு பொருள்படச் சொல்லுதலும்,
12. **ஏதுவின் முடித்தல்** – காரணம் விளங்காததைக் காரணத்தால் முடிவு செய்தலும்,
13. **ஒப்பின் முடித்தல்** – (ஒன்றற்குச் சொல்லப்பட்ட இலக்கணம் வேறொன்றற்கும்) ஒத்துவருமாயின் அதற்கும் அதுவே இலக்கணமாக முடிவு செய்தலும்,
14. **மாட்டெறிந்து ஒழுகல்** – (ஒன்றற்குச் சொல்லப்பட்ட இலக்கணத்தை அதனைப் பெறுதற்குரிய மற்றொன்றற்கும்) மாட்டிச் சொல்லி நடத்தலும்,
15. **இறந்தது விலக்கல்** – (முற்காலத்து வழங்கிய இலக்கணங்களுள்ளே பிற்காலத்து) வழங்காமல் இறந்ததை நீக்குதலும்,

16. **எதிரது போற்றல்** – (முற்காலத்து வழங்காமற் பிற்காலத்து) வழங்கி வருகின்ற இலக்கணத்தைத் தழுவிக்கொள்ளுதலும்,

17. **முன்மொழிந்து கோடல்** – முன்னே ஒன்றனைச் சொல்லிப் (பின்பு அதனை வேண்டுமிடந்தோறும்) எடுத்துக்கொள்ளுதலும்,

18. **பின் அது நிறுத்தல்** – (ஒரு பொருளுக்குக் கருவியாக முன்வைத்தற் குரியது அங்கே வைத்தற்கு இடம்பெறாதாயின் அப்பொருளின்) பின்னே அதனை வைத்தலும்,

19. **விகற்பத்தின் முடித்தல்** – (விளங்குதற் பொருட்டுப்) பல வேறுபாடுகளின் சிறப்பு வாய்பாட்டால் முடித்தலும்,

20. **முடிந்தது முடித்தல்** – சிறப்பு வாய்பாட்டால் முடிந்ததைப் பொது வாய்பாட்டால் முடித்தலும்,

21. **உரைத்தும் என்றல்** – (பின்னே சொல்லப்படுவதை முன்னே ஒரு நிமித்தத்தினாலே சொல்ல வேண்டின் இதனைப்) பின்னே சொல்லுவோமென்பது தோன்ற அங்கே சுருங்கிச் சொல்லுதலும்,

22. **உரைத்தாம் என்றல்** – (முன்னே ஒரு நிமித்தத்தினாலே சொல்லப் பட்டதைப் பின்னே சொல்ல வேண்டியவிடத்து இதனை) முன்னேதானே சொல்லினோம் என்பது தோன்றச் சொல்லாது விடுதலும்,

23. **ஒருதலை துணிதல்** – (ஒன்றற்கொன்று மாறுபாடாகக்கொண்ட இரண்டு பக்கத்துள்) ஒரு பக்கந் துணிதலும்,

24. **எடுத்துக் காட்டல்** – (தான் சொல்லும் இலக்கணத்திற்குத் தானே இலக்கியத்தை) எடுத்துக் காட்டுதலும்,

25. **எடுத்தமொழியின் எய்தவைத்தல்** – (தான் சொல்லும் இலக்கணத்தைத்) தானெடுத்துக் காட்டிய இலக்கியத்தில் பொருந்த வைத்தலும்,

26. **இன்னது அல்லது இது என மொழிதல்** – (ஐயப்பட நின்றவிடத்து) இப்படிப்பட்டதன்று இது எனச் சொல்லுதலும்,

27. **எஞ்சிய சொல்லின் எய்தக் கூறல்** – சொல்லாது விடப்பட்ட வற்றிற்கும் சொல்லப்பட்டதனால் இலக்கணம் பொருந்தச் சொல்லுதலும்,

28. **பிறநூல் முடிந்தது தான் உடன்படுதல்** – பிற நூலிலே முடிந்த முடிவைத் தான் மேற்கொள்ளுதலும்,

**29. தன் குறி வழக்கம் மிக எடுத்து உரைத்தல்** – தான் (புதிதாகக்) குறித்து வழங்கும் வழக்கத்தையே பலவிடங்களிலும் எடுத்துச் சொல்லுதலும்,

**30. சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தல்** – சொல்லின் முடிவிலே அதன் பொருளையும் முடித்தலும்,

**31. ஒன்றின முடித்தல் தன்னினம் முடித்தல்** – விதியால் ஒற்றுமைப்பட்ட வற்றை ஒருங்கு கூட்டி முடித்தலும், ஒன்றைச் சொல்லுமிடத்து அதற்கு இனமாகிய மற்றொன்றையும் (விரியாதிருக்க வேண்டி அதனுடனே) கூட்டி முடித்தலும்,

**32. உய்த்து உணர வைப்பு** – சொல்லியதனைக் கொண்டு சொல்லாத தொன்றை ஊகித்துக் கொள்ள வைத்தலும்,

**என** – என்று, **உத்தி எண்ணான்கு** – தந்திரவுத்திகள் முப்பத்திரண்டாம்.

இவையே யன்றி, உரையிற் கோடல், உடம்பொடு புணர்த்தல், ஏற்புழிக் கோடல், மொழிந்த பொருளோடொன்ற அவ்வயின் மொழியாததனையும் முட்டின்று முடித்தல் முதலாக வேறு சிலவுத்திகளும் நூலுள் வருதல் உண்டு.

முன் சொன்ன மதங்களுக்கும், இவ்வுத்திகட்கும் உதாரணம் இந் நூலுள்ளே பின் வருமிடங்களில் காண்க..

## மோசகு பொன்னையா

இதனைச் சொல்லுவேன் என்று சொல்லிப் புகுதலும், இயல்களைக் காரண காரிய முறைப்படி வைத்துச் சொல்லுதலும், பலவற்றையுந் திரட்டிச் சொல்லுதலும், அவ்வாறு திரட்டியவற்றை ஒவ்வொன்றாகப் பிரித்துச் சொல்லுதலும், மேலோர் முடித்தவாறு தான் முடித்துக் காட்டாலும், தான் சொல்லும், இலக்கணத்திற்கு இலக்கியஞ் சுட்டிக் கூறலும், மேற்கோள்களைத் தான் எடுத்துச் சொல்லுதலும், தன்னூலில் பிறனது கோட்பாட்டைச் சொல்லுதலும், சொல்லினது பொருள் வெளிப்படுமாறு விரித்துச் சொல்லுதலும், ஒன்றற்கொன்று தொடர்பு அமையச் சொற்களையும் வாக்கியங்களையும் அமைத்துச் சொல்லுதலும், இரு பொருட்படச் சொல்லுதலும், முன்னர்க் காரணம் விளங்காத ஒன்றைப் பின்னர்க் காரணத்தால் முடிய வைத்தலும், இயல் பில்லாததையும் இலக்கணம் ஒத்திருத்தலால் கூட்டிச் சொல்லுதலும், இஃது இதற்குமாம் அல்லது இதுவும் அது என மாட்டி யுரைத்தலும், முன் வழங்கிப் பின் வழக்கு ஒழிந்ததை விலக்கிச் சொல்லுதலும், முற்காலத்து இல்லதாய்ப் பின் வழக்கிற் புகுந்ததாயின் அதனைத் தழுவிச் சொல்லுதலும், பின் வேண்டு

மிடந்தோறும் எடுத்து ஆளுவதற்கு முன்னே ஒன்றைச் சொல்லி வைத்தலும், ஒரு பொருளைச் சொல்லுமிடத்துச் சொல்லப்படாத பகுதி உண்டெனில் அதனைப் பின் வைத்துச் சொல்லுதலும், வெவ்வேறாக முடித்துச் சொல்லுதலும், வெவ்வேறாக முடிந்ததைப் பொருளின் தெளிவுக்காகத் தொகுத்து முடித்துச் சொல்லுதலும், பின்னே உரைப்போம் எனச் சொல்லுதலும், முன்னே உரைத்தோம் எனத் சொல்லுதலும், இருவர் மாறுபட உரைத்தவற்றுள் ஒன்றைத் துணிந்து ஏற்றுச் சொல்லுதலும், தான் சொல்லும் இலக்கணத்திற்கு எடுத்துக்காட்டுச் சுட்டிச் சொல்லுதலும், இலக்கியத்தை இலக்கணத்தோடு பொருந்த வைத்துச் சொல்லுதலும், ஐயந்தோன்று மிடங்களில் இன்ன தன்று இதுவே எனத் துணிந்து சொல்லுதலும், சொல்லாது எஞ்சியவற்றிற்குச் சொல்லப்பட்டதனால் இலக்கணம் பொருந்தச் சொல்லுதலும், பிறர் நூல்களில் சொல்லப்பட்ட முடிவைத் தான் ஏற்றுச் சொல்லுதலும், தான் புதிதாகச் சொல்லி வழங்குவதை யிடந்தோறும் எடுத்துச் சொல்லுதலும், சொல்லி முடியும் இடத்திலே அதன் பொருளும் முடியுமாறு சொல்லுதலும், விதியால் ஒற்றுமைப்பட்டவற்றை ஒருங்கு கூட்டுவதோடு,இனமானவற்றை ஒருங்கு கூட்டி முடித்துச் சொல்லுதலும், நீள நெடுக ஆராய்ந்து பொருளறியுமாறு சொல்லுதலும் என நூல்களுள் பயிலும் உத்திகள் முப்பத்திரண்டாம், எ—று.

உத்தி – மதிநுட்பம், ஈண்டுப் பண்பாகுபெயர். தொல்காப்பியம் எழுத்ததிகாரம். இம் முப்பத்திரண்டும் தலைமை பற்றிக் கூறப்பட்டவை, உரையிற் கோடல், மொழிந்த பொருளோ டொன்ற அவ்வயின் மொழியாததனையும் முட்டின்று முடித்தல், உடம்பொடு புணர்த்தல், ஏற்புழிக்கோடல் முதலிய பிற உத்திகளும் உள. (13)

## உத்தி இன்னதென்பது

14. நூற்பொருள் வழக்கொடு வாய்ப்பக் காட்டி
ஏற்புழி யறிந்திதற் கிவ்வகை யாமெனத்
தகும்வகை செலுத்துத றந்திர வுத்தி.

**நூல் பொருள் வழக்கொடு வாய்ப்பக் காட்டி**
**ஏற்பு உழி அறிந்து இதற்கு இவ் வகை ஆம் எனத்**
**தகும் வகை செலுத்துதல் தந்திர உத்தி.**

nūl poruḻ vaḷakkotu vāyppak kātti
ēṟpu uḷi aṟintu iṭaṟku iv vakai ām enaṭ
ṭakum vakai seluṭṭuṭal ṭanṭira uṭṭi.

## என்றி பவர் -ஆங்கில மொழிபெயர்ப்பு

### Critical acumen

True criticism consists in, showing the connection or consistency of the subject of a work with generally received opinions as well as with those of approved authors; and in a nicety of judgement, by the exercise of which fit places are awarded to appropriate topics.

## ஒப்புமைப் பகுதி

**மேலை நுதலிப் புகுதல் தொகுத்தல் பகுத்துணர்த்தல்**
**விகற்பத்தின் முடித்திடல் உய்த்துணர்தல் மாட்டெறிதல்**
**நூலின் முறை வைப்பு ஏதுக்காட்டல் தான்எடுத்து**
**நுவறல் முடித்துக் காட்டல் முடிவுஇடங் கூறுதலே**
**சாலெடுத்துக் காட்டு எடுத்து மொழியின் எய்த வைத்தல்**
**தன்குறி மிக்கு எடுத்துஉரைத்தல் எஞ்சு சொல்லின் விரித்தல்**
**ஏழும் ஒருதலை துணிதல் உரைத்தும் என்றல் உரைத்தாம்**
**என்றல் பிறர் நூன்முடிவு தான் உடன்பா டுறலே. (சுவாமி.:10)**
**உடன்படாபிறன் கோட்கூறுதல் தொடர்ச்சொற் புணர்த்தல்**
**ஒன்றெனத்தன் னினமுடித்தல் ஒப்பின் முடித்திடலே**
**முடிந்ததனை முடித்தல் இரட்டுறமொழிதல் முன்னே**
**மொழிந்து கொளல் பின்னிறுத்தல் இன்னதன்று ஈதுஎன்றல்**
**மிடைந்த சொல்லின் முடிவினில் இப்பொருள் சொலல்சொற்பொருளே**
**விரித்தல் இறப்பகற்றல் எதிர்போற்றல் முப்பான் இரண்டும்**
**இடம்செயநூற் பொருள் வழக்கோடு உணர்த்தி ஏற்புழி**
**யோர்ந்து இதற்கிதாம் எனச் செலுத்துந் தந்திரவுத் திகளே (சுவாமி.:11)**

## மயிலைநாதர்

**இ–ள்.:** இவ்வாறு வழங்குதல் தந்திர'வுத்தியாம், எ – று.

## சங்கர நமச்சிவாயர்

எ – னின், மேல் தொகுத்தும் வகுத்தும் கூறிய உத்திக்கு இலக்கணம் உணர் – ற்று.

இ – ள்.:– ஓரிலக்கண நூலால் உணர்த்தப்படும் பொருளை நூல்வழக்கோடும் உலகவழக்கோடும் பொருந்த உணர்த்தி, அப்பொருளை மற்றோர் இலக்கிய நூற்கண்ணும் ஏற்குமிடம் அறிந்து இவ்விடத்திற்கு இஃதாம் எனக் கருதித் தக்க வகையாகச் செலுத்துவது தந்திரவுத்தியாம், எ – று.

தந்திரம் என்பது நூல். உத்தியான் அமைக்கும் பொருளை உத்தி என்றது ஆகுபெயர்.

## கூழங்கைத் தம்பிரான்

சூ—ம், தந்திர உத்திக்கு இலக்கணம் இன்னதெனக் கூறுகின்றது.

**இ—ள்.: நூற்பொருள் வழக்கொடு** – நூலாகிய செய்யுள் வழக்கொடும் உலகத்துப் பொருள் வழக்கொடும், **வாய்ப்பக் காட்டி** – பொருந்த எடுத்துக்காட்டி, **ஏற்புழி அறிந்து** – இவ் விடத்துக்கு இது பொருந்துமென ஏற்கும் இடமறிந்து, **இதற்கு இவ்வகையாமென** – இப்பொருட் கோட்பாட்டுக்கு இவ்வுத்தி யாமென, **தரும் வகை செலுத்துதல் தந்திர உத்தி** – தக்க வகையாகப் பொருந்துவது நூலுத்தியாம், **எ—று.**

## விசாகப் பெருமாளையர்

இது உத்திக்கு இலக்கணஞ் சொல்கின்றது.

**இ—ள்.: நூல்** – ஓரிலக்கண நூலாலறிவிக்கப்படுகின்ற, **பொருள்** – பொருளை, **வழக்கொடு**—உலகவழக்கோடுஞ் செய்யுள் வழக்கோடும், **வாய்ப்ப**—பொருந்த, **நாட்டி**—காண்பித்து, **ஏற்புழி**—ஏற்குமிடத்தை, **அறிந்து**—மற்றோரிலக்கிய நூலிலுமறிந்து, **இதற்கு**—இவ்விடத்திற்கு, **இவ்வகையா மென**—இவ்வகை யாகு மென்று நினைத்து, **தகும் வகை**—தக்க வகையாக, **செலுத்துதல்** – நடத்துவது, **தந்திர வுத்தி** – தந்திர வுத்தியாம், **எ—று.**

தந்திரம்—நூல், உத்தியாலமைக்கப்படு பொருளை உத்தி யென்றதாகுபெயர்.

## முகவை இராமானுச கவிராயர்

இது, உத்திக்கு இலக்கண முணர்த்துகின்றது.

**இ—ள்.: நூற்பொருள்** – ஓரிலக்கண நூலினாலே சொல்லப்படும் பொருளை, **வழக்கொடு** – செய்யுள்வழக்கு உலக வழக்கென்னு மிருவகை வழக்கொடும், **வாய்ப்பக் காட்டி** – பொருந்தக் காண்பித்து, **ஏற்புழி யறிந்து** – (அதை மற்றோரிலக்கிய நூலிலும்) பொருந்து மிடத்தை யறிந்து, (பொருந்தப் பார்த்து) **இதற்கிவ் வகை யாமென** – இவ்விடத்திற்கு இவ்வகை உத்தியாமென் றெண்ணி, **தகும் வகை செலுத்துதல்** – தக்கபடியாக அவ்விடத்திலே யந்த வுத்தியைச் செலுத்துவது, **தந்திரவுத்தி** – நூலுத்தி யாம், **எ – று.**

உத்தி என்றது ஆகுபெயர். தந்திரமென்றுது நூல். செலுத்துவது உத்தியென முடித்துக் கொள்க.

## கா.கோபாலாசாரி - தி.கோ.ரங்காசாரி

**உரை :– நூல் பொருள்** – ஓரிலக்கண நூலால் அறிவிக்கப்படும் பொருளை, **வழக்கொடு** – உலகவழக்கு செய்யுள் வழக்குகளோடு, **வாய்ப்ப காட்டி** – பொருந்தக் காண்பித்து, **ஏற்புழி அறிந்து** – (அதுமற்றொரு நூலிலும்) பொருந்துமிடத்தைத் தெரிந்து, **இதற்கு** – இவ்விடத்திற்கு, **இ வகை ஆம் என** – இந்தவிதம் ஆகுமென்று கருதி, **தகும்வகை செலுத்துதல்** – தக்கபடி நடத்துதல், **தந்திர உத்தி** – தந்திரவுத்தியாம்.

> **குறிப்பு :– உத்தி** – யுக்தி என்பதன் திரிபு. **தந்திரம்** – நூல், **உத்தி** – செலுத்தல், இதுகாரணவாகுபெயராய் உத்தியால் அமைக்கப்படும் பொருளை உணர்த்திற்று.

## ஆறுமுக நாவலர்

**இ – ள்.: நூற்பொருள்** – ஒரு நூலால் அறிவிக்கப்படும் பொருளை, **வழக்கொடு வாய்ப்பக் காட்டி** – நூல் வழக்கோடும் உலக வழக்கோடும் பொருந்தக் காண்பித்து, **ஏற்புழி அறிந்து** –ஏற்கு மிடத்தை அறிந்து, **இதற்கு இவ்வகை ஆம் எனத் தகும் வகை செலுத்துதல் –** இவ்விடத்திற்கு இப்படியாகு மென்று நினைத்துத் தக்கபடியாகச் செலுத்துவது, **தந்திரவுத்தி** – தந்திர வுத்தியாம், எ – று.

தந்திர மென்பது நூல், உத்தி யென்பது பொருந்துமாறு.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். நூற்பொருள்** – ஒரு நூலால் அறிவிக்கப்படும் பொருளை, – **வழக்கொடு வாய்ப்பக்காட்டி** – நூல்வழக்கோடும் உலக வழக்கோடும் பொருந்தக் காண்பித்து, **ஏற்புழி அறிந்து** – ஏற்குமிடத்தை அறிந்து, – **இதற்கு இவ்வகை ஆம் எனத் தகும் வகை செலுத்துதல்,** – இவ்விடத்திற்கு இப்படியாகுமென்று நினைத்துத் தக்கபடியாகச் செலுத்துவது, – **தந்திரவுத்தி** – தந்திரவுத்தியாம். எ–று.

தந்திரமென்பது நூல். உத்தியென்பது பொருந்துமாறு.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: நூல் பொருள்** – ஓர் இலக்கண நூலினாற் சொல்லப்படுகின்ற பொருளை, **வழக்கொடு வாய்ப்ப காட்டி** – உலகவழக்குச் செய்யுள் வழக்குக்களோடு பொருந்தக் காண்பித்து, **ஏற்பு உழி அறிந்து** – (மற்றோரிலக்கிய நூலிலும்) ஏற்கும் இடத்தை அறிந்து, **இதற்கு இவகை ஆம் என** – இவ்விடத்துக்கு இப்படி ஆமென்று நினைத்து, **தகும் வகை** – தக்கபடியாக, **செலுத்துதல்** – நடத்துவது, **தந்திரம் உத்தி** – தந்திர யுக்தியாம்; எ – று.

தந்த்ரம், யுக்தி என்னும் வடசொற்களுக்கு – முறையே
நூல் என்றும், பொருந்தும் விதம் என்றும் பொருள்.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.: நூற்பொருள்** – ஒரு நூலால் அறிவிக்கப்படும் பொருளை, **வழக்கொடு வாய்ப்பக் காட்டி** – நூல் வழக்கோடும் உலக வழக்கோடும் பொருந்தக் காண்பித்து, **ஏற்புழி அறிந்து** – ஏற்குமிடத்தை அறிந்து, **இதற்கு இவ்வகை ஆம் எனத் தகும் வகை செலுத்துதல்** – இவ்விடத்திற்கு இப்படி யாகுமென்று நினைத்துத் தக்கபடியாகச் செலுத்துவது, **தந்திரவுத்தி** – தந்திர உத்தியாம். எ–று. தந்திரம் = நூல்; உத்தி = பொருந்தும்விதம்.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

பொ–ரை.: (ஒரு) நூலாலறிவிக்கப்படுகின்றபொருளை, உலக வழக்கோடும் செய்யுள் வழக்கோடும் பொருந்தக் காண்பித்து, ஏற்குமிடத்தை யறிந்து, இவ்விடத்திற்கு இவ்வகை யாகுமென்று நினைத்துத் தக்க வகையாக நடத்துவது நூலுத்தியாம். எ–று.

தந்திர–நூல். உத்தியா லமைக்கப்படுபொருளை உத்தி யென்றது ஆகுபெயர். உத்தி–புத்திநுட்பம்; பொருந்தும் விதம்.

## கா.நமச்சிவாய முதலியார்

**நூல் பொருள்** – (ஓர் இலக்கண) நூலால் அறிவிக்கப்படுகின்ற பொருளை, **வழக்கொடு** – உலக வழக்கோடும் செய்யுள் வழக்கோடும், **வாய்ப்பக் காட்டி** – பொருந்தக் காட்டி, **ஏற்புழி அறிந்து** – ஏற்குமிடத்தை மற்றோர் இலக்கிய நூலிலும் அறிந்து, **இதற்கு** – இவ்விடத்திற்கு, **இவ்வகை ஆம் என** – இவ்வகை யாமென்று உணர்ந்து, **தகும் வகை செலுத்துதல்** – தக்க வகையாக நடத்துவது, **தந்திர உத்தி** – நூலுத்தியாம்.

**தந்திரம்** – நூல். உத்தியால் அமைக்கப்படுபொருளை
உத்தியென்றது ஆகுபெயர்.

## மோசசு பொன்னையா

ஒரு நூல் அறிவிக்கும் பொருள் நூல்வழக்கு உலகவழக்கு என்னும் இருவகை வழக்குகளோடும் பொருத்திக் காட்டிப், பொருந்துமிடம் அறிந்து இவ்விடத்தில் இவ்வாறு செலுத்திச் சொல்லுதல் பொருந்தும் எனத் துணிந்து தக்கவாறு செலுத்திச் சொல்லுதல் நூலின்கண் மேற்கொள்ளப்படும் மதிநுட்பமாகும், **எ–று.** தந்திரம் – நூல்

# ஓத்திலக்கணம்

15. நேரின மணியை நிரல்பட வைத்தாங்
கோரினப் பொருளை யொருவழி வைப்ப
தோத்தென மொழிப வுயர்மொழிப் புலவர்

**நேர் இன மணியை நிரல் பட வைத்து ஆங்கு**
**ஓர் இனப் பொருளை ஒரு வழி வைப்பது**
**ஓத்து என மொழிப உயர்மொழிப் புலவர்**

nēr iṉa maṇiyai niral paṭa vaiṭṭu āṅku
ōr iṉap poruḷai oru vaḻi vaippaṭu
ōṭṭu eṉa moḻipa uyarmoḻip pulavar

## என்றி பவர் -ஆங்கில மொழிபெயர்ப்பு

### Section

'*Ottu*', the sectional division of a work, is said by the most learned to be that arrangement in which kindred subjects are placed under particular heads, just as precious stones of the same description are strung together on the same string.

## ஒப்புமைப் பகுதி

நேரின மணியை நிரல்பட வைத்தாங்கு
ஓரினப் பொருளை ஒருவழி வைப்பது
ஓத்து எனமொழிப உயர்மொழிப் புலவர் (தொல்.பொருள்.:)

உய்த்த பொருள் ஓரின ஓத்தாம்...... (சுவாமி.:12:1)

நேரின மணியை நிரல்பட வைத்தாங்
கோரினப் பொருளை ஒருவழி வைப்பது
ஒத்தென மொழிப உயர்மொழிப் புலவர் (இல.விள.:894)

ஒத்தெனப் படுவ தோரினப் பொருளைக்
கோத்தொரு நெறிபடக் கூறுவது ஆகும் (மாற.அலங்.:17)

## மயிலை நாதர்

இ–ள்.: இவ்வகைத்தாவது ஓத்து, எ–று.

## சங்கரநமச்சிவாயர் - சிவஞான முனிவர்

**எ–னின், இருவகை உறுப்பினுள் ஒத்துறுப்பாமாறு உணர்–ற்று**

**இ–ள்.:** ஒரு சாதியாயுள்ள மணிகளை முறையே பதித்தாற்போல ஒரு சாதியாயுள்ள பொருள்களை ஒரு வழிப்படக் கூறுவது ஒத்துறுப்பாம் எனச் சொல்லுவர், உயிர்க்குறுதி பயக்கும் மெய்ம்மொழிகளை யுடைய புலவர், **எ–று.**

நேர்தல் – ஒன்றுபடுதல்

இவ்வாறு வருதல் இந்நூலுறுப்பினுள் காண்க

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** இயல் உறுப்பாவது இதுவெனக் கூறுகின்றது.

**இ–ள்.: நேரின மணியை –** ஒத்த ஒரு வருக்கமாயுள்ள மணிகளை நிரல்பட, **வைத்தாங்கு –** நிரையாக வைத்துக் கோத்தாற்போல, **ஓரினப் பொருளை –** ஓர் இனமாயுள்ள சொற்பொருளையும், **ஒரு வழி வைப்பது –** ஒரு நெறிப்பட முறையே வைத்துச் சொல்லுவதும், **இயலெனமொழிப –** இயலுறுப்பு என்று கூறுவர், **உயர்மொழிப்புலவர் –** உயர்ச்சியுள்ள சொற்கூறெல்லாம் அறிந்த புலவர், **எ–று.**

## விசாகப் பெருமாளையர்

இது, ஒத்துறுப்பாமாறு சொல்லுகின்றது.

**இ–ள்.: நேரின –** ஒரு சாதியாயுள்ள, **மணியை –** மணிகளை, **நிரல்பட –** வரிசையாக, **வைத்தாங்கு –** பதித்ததுபோல, **ஓரினம் –** ஒரு சாதியாயுள்ள, **பொருளை –** பொருள்களை, **ஒருவழி –** ஒருவழிப்பட, **வைப்பது –** சொல்லுவது, **ஒத்தென –** இயலுறுப்பென்று, **மொழிப –** செல்லுவர், **உயர்மொழி –** உயிர்க்குறுதியைத் தருகின்ற உண்மைச் சொற்களையுடைய புலவர், வித்துவான்கள், **எ–று.**

## முகவை இராமானுச கவிராயர்

இது, ஒத்தென்கின்ற நூலுறுப்பி னிலக்கண முணர்த்துகின்றது.

**இ–ள்.: நேர் –** சமமான, **இனமணியை –** ஒரு சாதி மணிகளை, **நிரல்பட –** வரிசைப்பட, **வைத்தாங்கு –** வைத்தது போல, **ஓரினப் பொருளை –** ஒரு சாதியாயுள்ள பொருள்களை, **ஒருவழி வைப்பது –** ஒரு வழிப்பட வைக்கப்படுவது, **ஒத்தென மொழிப –** இயலென்று சொல்லுவர், **உயர்மொழிப் புலவர் –** உயர்ந்த மொழி யிலக்கணங்களை யுணர்ந்த புலவர், **எ–று.**

ஒத்து – இயல். உறுப்பு – அங்கம்.

## கா.கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– நேர் இனம் மணியை** – சமமான ஒரு சாதி இரத்தினங்களை, **நிரல்பட** – வரிசையாக, **வைத்தாங்கு** – பதித்து வைத்ததுபோல, **ஓர் இனம் பொருளை** – ஒரு சாதியாயுள்ள பொருள்களை, **ஒருவழி வைப்பது** – ஒருவழிப்பட அமைத்துச் சொல்வது, **ஓத்து என** –– இயல் என்னும் உறுப்பாகுமென்று, **உயர்மொழி புலவர்** – சிறந்த சொல்லிலக்கணங்களை உணர்ந்த அறிவுடையோர், **மொழிப** – கூறுவர்.

குறிப்பு :–

நேர்தல் – ஒத்திருத்தல். 'நேரினமணி' என்றதனால் தம்முள் ஒத்தனவாய ஒருசாதிப் பொருள் கொண்டது **'இயல்'** என்றதாயிற்று. **'இயல்'** எனினும் **'ஓத்து'** எனினும் ஒக்கும். இங்ஙனமே **'படலம்'**, **'அதிகாரம்'** என்பனவும். 'ஓத்து' என்பது முன்பு வேதத்துக்குப் பெயராய், பின்பு அதன் அங்க மாகிய வியாகரணத்துக்காகி, அதனங்கமாகிய இயலுக்கு ஆனது இருமடி யாகுபெயர். 'உயர்மொழிப் புலவர்' என்பதற்கு உயிர்க்கு உறுதியைத் தருகின்ற உண்மைச் சொற்களையுடைய புலவர் எனப்பொருள் கூறுவாருமுளர்.

இயல் என்பதற்கு உதாரணம் :– எழுத்தியலில் எழுத்தி னிலக்கணமே வருதலும், பதவியலில் பதத்தினிலக்கணமே வருதலும், புணரியல்களில் புணர்ச்சிகளினிலக்கணமே வருதலும் காண்க.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: நேர் இன மணியை நிரல்பட வைத்து ஆங்கு** – ஒரு சாதியாயுள்ள மணிகளை வரிசையாகப் பதித்தாற் போல, **ஓரினப் பொருளை ஒருவழி வைப்பது** – ஒரு சாதியாயுள்ள பொருள்களை ஒரு வழிப்படச் சொல்வது, **ஓத்து என மொழிப** – ஓத்துறுப்பா மென்று சொல்லுவர், **உயர் மொழிப் புலவர்** – உயிர்க்கு உறுதி பயக்கும் மெய்ம்மொழிகளை யுடைய புலவர், **எ–று.**

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். நேர் இன மணியை நிரல்பட வைத்து ஆங்கு** – ஒருசாதியாயுள்ள மணிகளை ஒருவரிசையாகப் பதித்தாற் போல, – **ஓரினப்பொருளை ஒருவழி வைப்பது** – ஒருசாதியாயுள்ள பொருள்களை ஒருவழிப்படச் சொல்வது, – **ஓத்து என மொழிப** – ஓத்துறப்பாமென்று சொல்லுவர், **உயர் மொழிப் புலவர்** – உயிர்க்கு உறுதி பயக்கும் நூல்களே அறிந்த புலவர். **எ–று.**

நேர்தல் – ஒன்றுபடுதல்.

இயலென்றும், படலமென்றும் பாகப்படுவது நூலாதலால் நூல்களை யுணர்ந்தவரே அப்பகுப்பை அறிந்துகூற வல்லுந ரென்பதுணர்த்துதற்கு உயர்மொழிப் புலவரென்றார்.

மொழி ஆகுபெயர்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: நேர் இனம் மணியை** – ஒரு சாதியாயுள்ள இரத்தினங்களை, **நிரல் பட** – வரிசையாக, **வைத்து ஆங்கு** – பதித்து வைத்தாற் போல, **ஓர் இனம் பொருளை** – ஒரு சாதியாயுள்ள பொருள்களை, **ஒரு வழி வைப்பது** – ஒரு வழிப்பட வைத்துச் சொல்வது, **ஒத்து** – இயலென்னும் உறுப்பாம், **என** – என்று, **உயர்மொழி புலவர்** – சிறந்த நூல்களை யறிந்த புலவர்கள், **மொழிப** – சொல்லுவார்கள்; **எ–று.** மொழி நூலுக்குக் கருவியாகுபெயர்.

நேர்தல் – ஒன்றுபடுதல். 'நேரினம்' எனவே, ஒரு சாதியாயினும் தம்மில் ஒத்தனவே கூறல் வேண்டும் என்பதாம். 'உயர்மொழிப் புலவர்' என்றது, அங்ஙனம் நூல்செய்தல் உயர்ந்தோர் கடனென்றவாறு. ஒத்தெனினும் இயலெனினும் ஒக்கும்.

இதுவும் வருஞ் சூத்திரமும் தொல்காப்பியத்தினின்று இவ்வாசிரியரால் எடுத்துக் கொள்ளப்பட்டன.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.: நேர் இன மணியை** – ஒரு சாதியாயுள்ள மணிகளை, **நிரல் பட வைத்தாங்கு** – வரிசையாகப் பதித்தாற் பேல, **ஓரினப் பொருளை** – ஒரு சாதியாயுள்ள பொருள்களை, **ஒருவழி வைப்பது** – ஒரு வழிப்படச் சொல்வது, **ஒத்து என மொழிப** – ஒத்துறுப்பாமென்று சொல்லுவர், **உயர் மொழிப் புலவர்**– உயிர்க்கு உறுதி பயக்கும் மெய்ம் மொழிகளையுடைய புலவர். எ–று.

நேர்தல் = ஒன்றுபடுதல்.

## கா.நமச்சிவாய முதலியார்

**நேர் இன மணியை** – ஒத்த ஓரினமான மணிகளை, **நிரல் பட வைத்தாங்கு** – வரிசையாகப் பதித்துவைத்தாற்போல, **ஓர் இனப் பொருளை** – ஒரே வகையான பொருள்களை, **ஒரு வழி வைப்பது** – ஒருவழிப்படச் சொல்லுவது, **ஒத்து என** – இயலுறுப்பென்று, **மொழிப** – சொல்லுவர், **உயர்மொழி புலவர்** – சொல்லாராய்ச்சியிற் சிறந்த புலவர்கள்.

## மோசசு பொன்னையா

இனம் ஒத்த மணிகளை வரிசைப்பட வைப்பதே போல், இனமொத்த பொருளை ஒருவழிப்படச் சொல்வது ஒத்துறுப்பாகும் என மொழிப் புலமை மிக்கோர் கூறுவர், எ—று.

ஒத்து – இயல் (15)

# படலவிலக்கணம்

16. **ஒருநெறி [1]யின்றி விரவிய பொருளாற்**
**பொதுமொழி தொடரினது படல மாகும்.**

ஒரு நெறி இன்றி விரவிய பொருளால்
பொதுமொழி தொடரின் அது படலம் ஆகும்.

oru neṟi iṉṟi viraviya poruḷāl
poṭumoḻi ṭotariṉ aṭu patalam ākum.

## என்றி பவர் -ஆங்கில மொழிபெயர்ப்பு

### Chapter

***Padalam***, or chapter, is that division of work which contains common and connected subjects, though in some respects they may be diverse and various, (as branches of one main stem)

## ஒப்புமைப் பகுதி

ஒருநெறி இன்றி விரவிய பொருளான்
பொதுமொழி தொடரின் அதுபடல மாகும் (தொல்.பொருள்.:)

.........விரைவிற் படலம் (சுவாமி.:12:1)

படல மென்பது பன்னெறிப் பொருளால்
புடைபட விரவிய பொதுமொழித் தொடர்பே (மாற.அலங்.:18)

ஒருநெறி யின்றி விரவிய பொருளால்
பொதுமொழி தொடரின் அதுபட லமாகும். (இல.விள.:895)

## மயிலை நாதர்

இ—ள்.: இப்படி நடப்பது [1]படலமாம், எ—று.

## சங்கர நமச்சிவாயர்

எ—னின், படலவுறுப்பாமாறு உணர்—ற்று.

**இ—ள்.:** ஒருவழிப்படாது விராய பொருளோடு பொருந்திப் பலபொருளை உணர்த்தும் பொதுச்சொற்கள், ஒரோவழி யின்றித் தொடர்ந்துவரின் அது படலவுறுப்பாம், **எ—று.**

> படல வுறுப்பினை யுடைய காப்பியங்களுள் பாட்டுடைத் தலைவனது சரிதையே யன்றி மலை கடல் நாடு முதலிய பல பொருட்டிறங்களும் விரவி வருதலும், பலபொருளை உணர்த்தும் பொதுச்சொற்கள் ஒரோவழி யின்றித் தொடர்ந்து வருதலும் காண்க.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** படல உறுப்பாவது இவையெனக் கூறுகின்றது.

**இ—ள்.: ஒரு நெறியன்றி** – ஒத்த ஒரு நெறிப்பட்ட பொருளே யன்றி, **விரவிய பொருளால்** – அப்பொருட்கு உயர்ந்ததும் தாழ்ந்ததும் ஆகக் கூடிய பல பொருளினாலும், **பொதுமொழி தொடரின்** – தான் கூறிய பொருட்கும் பிற பொருட்கும் பொதுவாகி வழக்கினாலும் தொடர்ந்து வருவது, **அது படலமாகும்** – இதுவே படல உறுப்பாம், **எ—று.**

## விசாகப் பெருமாளையர்

**இது,** அதிகாரவுறுப்பைச் சொல்லுகின்றது.

**இ—ள்.: ஒரு நெறி யின்றி** – ஒரு வழிப்படாமல், **விரவிய பொருளால்** – கலந்த பொருள்களோடு பொருந்தி, **பொதுமொழி** – பல பொருள்களைத் தரும் பொதுச்சொல்லுகள், **தொடரின்** – ஒரோவிடத் தன்றித் தொடர்ந்து வந்தால், **அது** – அது, **படலமாகும்** – படலவுறுப்பாகும், **எ—று.**

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** படல மென்னும் நூலுறுப்பினிலக்கண முணர்த்து கின்றது.

**இ—ள்.: ஒரு நெறி யின்றி** – ஒரு வழிப்படாமல், **விரவிய பொருளால்** – கலந்த பொருளோடு, **பொதுமொழி தொடரின்** – (பல பொருள்களை யுணர்த்தும்) பொதுச்சொற்கள் மிகுதியுந் தொடர்ந்து வருமாயின், **அது படலமாகும்** – அது படலவுறுப்பாம், **எ—று.**

> எனவே இயலென்றது ஒரு சாதிப்பொருள் கொண்ட தென்பதும், படலமென்பது பல சாதிப்பொருள் கொண்ட தென்பது மாயிற்று. இயலென்பதற்கு உதாரணம், இந்த நூலிலே எழுத்திய லென்பதில் எழுத்திலக்கணமே வருதலும், பதவியலென்பதிற் பதத்திலக்கணமே வருதலும், புணரியலென்பதிற்

புணர்ச்சி யிலக்கணமே வருதலும். படலமென்பதற்கு உதாரணம், படலவுறுப்பைக் கொண்டிருக்கிற காவியங்களிலே (இதைப்போல ஒரு வழிப்படாமல்) பாட்டுடைத் தலைவன் கதையைச் சொல்வது மல்லாமல் மலை வருணனை, கடல் வருணனை, நாடு நகர முதலிய பல வருணனைகளுங் கலந்து வருதலுங் காண்க.

## கா.கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– ஒருநெறி இன்றி** – ஒரு சாதியாயிராமல், **விரவிய பொருளால்** – கலந்த (பலசாதிப்) பொருளோடு (பொருந்தி), **பொது மொழி தொடரின்** – பொதுவகையாற் பொருள்கள் கூறப்பட்டால், **அதுபடலம் ஆகும்** – அதுபடலம் என்னும் உறுப்பாம்.

**குறிப்பு :–**

எனவே, படலம் பலசாதிப் பொருள் கொண்டது என்றதாயிற்று;

இதற்கு காரணம்:–

எழுத்ததிகாரத்தில் எழுத்து, பதம், புணர்ச்சி ஆகிய இவற்றின் இலக்கணமெல்லாம் கலந்து வருதல் காண்க. இங்ஙனமே, காவியங்களிலும் படலம் என்பது கதாநாயகனது சரிதம் கூறுவதல்லாமல் காடு, மலை, கடல், நாடு, நகர், சந்திரன், சூரியன் இவற்றின் வர்ணனைகளையுந் தழுவி வருதல் காண்க.

இதுவும் இதன் முற்சூத்திரமும் இவ்வாசிரியர் தொல்காப்பியத் தினின்று எடுத்துக் கொண்ட மேற்கோள்.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: ஒரு நெறி இன்றி விரவிய பொருளால்** – ஒரு வழிப்படாது கலந்த பல பொருள்களினாலே, **பொது மொழி தொடரின்** – பொதுமொழியாகத் தொடரப் பெறின், **அது படலம் ஆகும்** – அது படலவுறுப்பாம், **எ–று.**

பொதுமொழி பொதுவாகச் சொல்லப்படுவது. ஒரு பொருளையே நுதலி வருவது சூத்திரம்; ஓரினப் பொருள் களையே தொகுப்பது ஓத்து; பலவினப் பொருள்களுக்கும் பொதுவாகிய இலக்கணங் கூறுவது படலம். பல சூத்திரங்களினது தொகுதி ஓத்து; பல வோத்துக்களினது தொகுதி படலம். ஓத்தென்றது இயலை. படலமென்றது அதிகாரத்தை.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ—ள். ஒரு நெறி இன்றி விரவிய பொருளால்** – ஒருவழிப் படாது கலந்த பலபொருள்களினாலே, **பொது மொழி தொடரின்** – பொதுமொழியாகத் தொடரப் பெறின், **அது படலம் ஆகும்** – அது படலவுறப்பாம்.

பொதுமொழி பொதுவாகச் சொல்லப்படுவது. ஒரு பொருளையே நுதலி வருவது சூத்திரம்; ஓரினப் பொருள் களையே தொகுப்பது ஒத்து; பலவினப் பொருள்களுக்கும் பொது வாகிய இலக்கணங் கூறுவது படலம். பலசூத்திரங்களினது தொகுதி ஒத்து; பல வோத்துக்களினது தொகுதி படலம். ஒத்தொன்றது இயலை. படலமென்றது அதிகாரத்தை.

## வை.மு. சடகோபராமானுசாசாரியர் சே. கிருஷ்ணமாசாரியார்

**இ—ள்.: ஒரு நெறி இன்றி விரவிய பொருளால்** – ஒரு வழிப்படாமற் கலந்த (பலவேறு வகைப்பட்ட) பொருள்களோடு பொருந்தி, **பொது மொழி தொடரின்** – பொதுவகையாகக் கூறினால், **அது, படலம் ஆகும்** – படலமென்னும் உறுப்பாம்; எ—று.

படலமெனினும் அதிகாரமெனினும் ஒக்கும். இயலென்பது – ஒரு சாதிப் பொருள்கொண்டது, படலமென்பது – பல சாதிப் பொருள் கொண்டது என அறிக.

இயலென்பதற்கு உதாரணம் – இந்நூலில் எழுத்தியலில் எழுத்திலக்கணமே வருதலும், பதவியலில் பதவிலக்கணமே வருதலும், புணரியலில் புணர்ச்சி யிலக்கணமே வருதலும்; அதிகார மென்பதற்கு உதாரணம் – எழுத்ததிகாரத்தில் இவ் விலக்கணங்களெல்லாம் பொருந்தி வருதலும் காண்க.

## பவானந்தம் பிள்ளை

**இ—ள். ஒரு நெறி இன்றி விரவிய பொருளால்** – ஒருவழிப் படாது கலந்த பல பொருள்களினாலே, **பொதுமொழி தொடரின்** – பொது மொழியாகத் தொடரப் பெறின், **அது படலம் ஆகும்** – அது படலவுறுப்பாம். எ—று.

பொதுமொழி = பொதுவாகச் சொல்லப்படுவது.

ஒரு பொருளையே நுதலி வருவது சூத்திரம்; ஓரினப் பொருள்களையே தொகுப்பது ஒத்து; பலவினப் பொருள்களுக்கும் பொதுவாகிய இலக்கணங்களைக் கூறுவது படலம். பல சூத்திரங்களினது தொகுதி ஒத்து; பல வோத்துக்களினது தொகுதி படலம். ஒத்தென்பது இயல்.

படலமென்பது அதிகாரம். இயல் என்பது ஒரு சாதிப் பொருள் கொண்டது: படலம் என்பது பல சாதிப் பொருள் கொண்டது. .

## கா.நமச்சிவாய முதலியார்

ஒருநெறி யின்றி விரவிய பொருளால் பொதுமொழி தொடரின் அதுபடல மாகும்.

**ஒருநெறி இன்றி** – ஒரேவழிப்படாமல், **விரவிய பொருளால்** – கலந்த பொருள்களினால், **பொதுமொழி** – பொதுவான பொருள்கள், **தொடரின்** – தொடர்ந்து வந்தால், **அது படலம் ஆகும்** – அது படலம் என்னும் உறுப்பாகும்.

## மோசசு பொன்னையா

ஓரினமாகாது கலந்து அமைந்த பொருளாகி, ஒரு பொதுக் கூற்றாகத் தொடர்ந்து நிற்பின், அது படல உறுப்பாகும், **எ–று.** படலம் – அதிகாரம்.

**(16)**

**சூத்திர இலக்கணம்**

**17.சில்வகை யெழுத்திற் [1]பல்வகைப் பொருளைச்
செவ்வ னாடியிற் செறித்தினிது விளக்கித்
திட்ப நுட்பஞ் சிறந்தன சூத்திரம்**

**சில் வகை எழுத்தின் பல் வகைப் பொருளைச்
செவ்வன்ஆடியின் செறித்து இனிது விளக்கித்
திட்ப நுட்பம் சிறந்தன சூத்திரம்**

sil vakai eḷuṭṭiṉ pal vakaip poruḷais
sevvaṉātiyiṉ seṛiṭṭu iṉiṭu viḷakkiṭ
ṭitpa nutpam siṛanṭaṉa sūṭṭiram

## என்றி பவர் -ஆங்கில மொழிபெயர்ப்பு

### Verse

*Sutram*, a rule, canon, axiom, formula or aphorism, is a poetical composition containing much matter in as few words as possible. Without

---

பாட வேறுபாடு.:–

1. பல்பயப் பொருளைச்

injury to the force or minuteness of the sense, and appearing as clear as the reflection of large object in a small mirror.

## ஒப்புமைப் பகுதி

சூத்திரம் தானே
ஆடிநிழலின் அறியத் தோன்றி

நாடுத லின்றிப் பொருள்நனி விளங்க
யாப்பினுள் தோன்ற யாத்து அமைப்பதுவே (தொல்.பொருள்.:)

...........உருக்காட்டும் ஆடியிற்சில் லெழுத்தேபல் பொருளும்
ஒய்ந்து நுட்பந் திட்பம் உறுஞ் சூத்திரம் (சுவாமி.:12:1–2)

அவற்றுள்
சூத்திரந் தானே
யாடி நிழலின் அறியத் தோன்றி
நாடுத லின்றிப் பொருள்நனி விளங்க
யாப்பினுள் தோன்ற யாத்தமைப் பதுவே (இல.விள.:891)

நூலின் ஒருபொருள் நுதலியது ஒன்றாய்ச்
சில்வகை எழுத்தின் செறிந்திருடும் யாப்பாய்ப்
பல்திறம் பயன்தெரிவு உடையதோர் பண்பாய்ப்
படிமக் கலத்துள் படுநிழல் பொருவ
ஒண்மையும் நுண்மையும் உறுவது சூத்திரம் (மாற.அலங்.:15)

## மயிலை நாதர்

இ–ள்.: இப் பெற்றியான் வருவன [1]சூத்திரங்கள், எ–று.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், சூத்திரமாமாறு உணர்–ற்று.

இ–ள்.: சிறிய கண்ணாடியில் பெரிய சரீர முதலியவற்றின் சாயை செவ்வாகச் செறிந்து இனிதாக விளங்கினாற்போல, செவ்வாகச் செறிந்து இனிதாக விளங்கச் சில்வகை எழுத்துக் களான் இயன்ற யாப்பின்கண் பல்வகைப்பட்ட பொருள்களைச் செவ்வாகச் செறித்து இனிதாக விளக்கி, அப் பல பொருட் டிண்மையும் நுண்மையும் சிறந்து வருவன சூத்திரங்களாம், எ–று.

திட்பம் – குற்றமின்மையின் அலைவற நிற்றல். இவ்வாறு வருதல் இச்சூத்திரத்துள்ளும் காண்க.

---

பாட வேறுபாடு–.:

1. சூத்திரங்களாவன

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** சூத்திரத்திற்கு இலக்கணம் இதுவெனக் கூறுகின்றது.

**இ–ள்.: சில்வகை எழுத்திற்** – பல சொற்பொருளையும் அடக்கிய சில எழுத்துக் கூடிய சில சொற்களாலே, **பல்வகைப் பொருளைச்** – பலவேறு வகைப்பட்ட தொலைவற்ற பொருளை யும் பயப்பதாய், **செவ்வன் ஆடியிற்**–செவ்விதாகிய கண்ணாடி யிற் சிறிய பொருள் பெரிய பொருளாகத் தோன்றுவ போலவும் அல்லது சிறிய கண்ணாடியிற் பெரிய பொருளெல்லாம் காட்டினது போலவும், **செறிந்து இனிது விளக்கி** – பொருந்திய பல பொருளையும் இனிதாக விளக்கி, **திட்பம்** – வலிதாகிய கட்டுரையாகவும், **நுட்பம்** – நுணுக்கமாகிய பொருளாகவும், **சிறந்தன சூத்திரம்** – சிறந்து விளங்கப்படுவன சூத்திர நிலையாம், **எ–று.**

## விசாகப்பெருமாளையர்

**இது,** சூத்திரமாமாறு சொல்லுகின்றது.

**இ–ள்.: ஆடியின்** – பெரிய சரீர முதலானவைகளின் சாயையைத் தனக்குள்ளே செவ்வையாக வடக்கி இனிதாகக் காட்டுகின்ற கண்ணாடியைப் போல, **சில்வகை யெழுத்தில்** – சிலவகை எழுத்துகளாகிய சொற்களில், **பல்வகைப் பொருளை** – பலவகைப்பட்ட பொருள்களை, **செவ்வன்** – செவ்வையாக, **செறித்து** – அடக்கி, **இனிது** – இனிதாக, **விளக்கி** – காட்டி, **திட்பம்** – பலபொருளினுடைய திண்மையும், **நுட்பம்** – அவற்றினுடைய நுண்மையும், **சிறந்தன** – சிறந்து வருவன, **சூத்திரம்** – சூத்திரங்களாகும், **எ–று.**

## முகவை இராமாநுச கவிராயர்

**இது,** சூத்திரதிற்கு இலக்கண முணர்த்துகின்றது.

**இ–ள்.: ஆடியில்** – சிறிய கண்ணாடியைப் போல, **சில் வகை யெழுத்தில்** – சில வெழுத்துக்களால் முடிந்து சிறுகிய செய்யுளில், **பல் வகைப் பொருளை** – பலவகைப்பட்டு அகன்ற பொருளை, **செவ்வன்**–செவ்வாக, (ஒழுங்காக) **செறித்து** – அடக்கி, **இனிது விளக்கி** – (பார்ப்பவர்க்கு) இனிதாக அப்பொருள் விளங்கச் செய்து, **திட்பம்** – (குற்ற மில்லாததினாலே) சொல்வலி பொருள் வலிகளும், **நுட்பம்** (ஆழமுடைத்தாதலால்) பொருள் நுணுக்கங் களும், **சிறந்தன சூத்திரம்** – சிறந்து வருவன சூத்திர யாப்புக்களாம், **எ–று.**

> 'சில்வகை யெழுத்'தென்ற பொருளடையாற் சிறிய கண்ணாடி யென்பது பெறப்பட்டது. சிறிய கண்ணாடி பெரிய தேக முதலியவற்றின் சாயையைச் செவ்வாகச் செறித்து இனிதாக விளக்கினாற் போல என உவமையையும் விரித்துக் கொள்க, செவ்வன் செறித்தெனக் கூட்டுக. இவ்வாறு வருதற்கு உதாரணம்,

இச் சூத்திரதுள்ளுங் காண்க. சிறந்தன சூத்திரம் என முற்றும் பயனிலையுமாக முடித்துக் கொள்க.

## கா.கோபாலாசாரி - தி.கோ.ரங்காசாரி

**உரை :– ஆடியின்** – கண்ணாடிபோல, **சில்வகை எழுத்தின்** – சில வகை எழுத்துக்களாலாகிய செய்யுளில், **பல வகை பொருளை** – பலவிதமான பெரிய பொருளை, **செவ்வன்** – செம்மையாக, **செறித்து** – அடக்கி, **இனிது விளக்கி** – இனிமை யாகத் தெரிவித்து, **திட்பம்** – சொல்வன்மை பொருள் வன்மைகளும், **நுட்பம்** – பொருளின் நுணுக்கங்களும், **சிறந்தன** – சிறந்து நிற்பன, **சூத்திரம்** – சூத்திரமாம்.

குறிப்பு :–

சிறிய கண்ணாடி பெரிய உருவத்தையும் தன்னுள் அடக்கித் தெளிவாகக் காட்டுவது போல, சில எழுத்துக்களாலாகிய சிறிய செய்யுள் அரியவும் பெரியவுமான பொருள்களைத் தன்னுள் அடக்கித் தெளிவாகத் தெரிவிப்பது சூத்திரம் என்பது கருத்து. இதற்குதாரணம் இச்சூத்திரத்திலுங்காண்க.

எழுத்து – ஆகு பெயர்.

## ஆறுமுக நாவலர்

**இ—ள்.: ஆடியின்** – பெரிய சரீர முதலியவைகளின் சாயையைத் தன்னுள்ளே செவ்வையாக அடக்கி இனிதாகக் காட்டுஞ் சிறிய கண்ணாடி போல, **சில்வகை எழுத்தில் பல் வகைப் பொருளை** – சிலவகை யெழுத்துக்களாலாகிய வாக்கியத்திலே பலவகைப்பட்ட பொருள்களை, **செவ்வன் செறித்து இனிது விளக்கி** – செவ்வகையாக அடக்கி இனிதாகக் காட்டி, **திட்பம்** – குற்றமில்லாமையாற் சொல்வலி பொருள் வலிகளும், **நுட்பம்** –ஆழமுடைமையாற் பொருணுணுக்கங் களும், **சிறந்தன சூத்திரம்** –சிறந்து வருவன சூத்திரங்களாம், **எ—று.**

## வ. குமாரசாமிப் புலவர்

**இ—ள். ஆடியின்** – பெரிய சரீர முதலியவைகளின் சாயையைத் தன்னுள்ளே செவ்வையாக அடக்கி இனிதாகக் காட்டுஞ் சிறிய கண்ணாடி போல, **சில்வகை எழுத்தில் பல் வகைப் பொருளை** – சிலவகை யெழுத்துக்களாலாகிய வாக்கியத்திலே பலவகைப்பட்ட பொருள்களை, – **செவ்வன் செறித்து இனிது விளக்கி** – செவ்வையாக அடக்கி இனிதாகக் காட்டி, **திட்பம்** – குற்றமில்லாமையாற் சொல்வலி பொருள் வலிகளும், **நுட்பம்** – ஆழமுடைமையாற் பொருணுணுக்கங் களும், **சிறந்தன சூத்திரம்** – சிறந்து வருவன சூத்திரங்களாம். **எ—று.**

விரித்து மிக்கபல சொற்களால் மாணாக்கர்க்கு விளக்கப் படும் பலபொருளைச் சிலசொற்களிலடக்கிச் சுருக்கித் திட்ப நுட்பமாய் நுண்ணியோருணரும்படி சொல்வது சூத்திர மென்பது கருத்து. சொற் சுருக்கமும் பொருளகலமும் வாய்ப்பச் செய்வது சூத்திர மென்றபடியாம். மிக்க சுருக்கமாயென்பார் சிலவகை யெழுத்திலென்றார். சோதிட நூல்களிலும் தருக்கநூலிலும் வடமொழி வியாகரணங்களிலும் எழுத்தாலும் விடய முணர்த்துதல் பற்றி எழுத்தில் என்றார். ஆதலின் எழுத்திலென்பது சொல்லிலென்று பொருடரும்போது ஆகுபெயரும், அக்ஷரங்களிலென்று பொருடரும்போது இயற் பெயருமாம்.

## வை.மு. சடகோபராமாநுசாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: ஆடியின்** – (பெரிய உருவங்களின் பிரதி பிம்பத்தைத் தன்னுள்ளே செவ்வையாக அடக்கி இனிதாகக் காட்டுகின்ற சிறிய) கண்ணா டிபோல, **சில் வகை எழுத்தில்** – சிலவகை யெழுத்துக்களாலாகிய சொற்களில், **பல்வகை பொருளை** – பலவகைப்பட்டு அகன்ற பொருள்களை, **செவ்வன்** – செவ்வையாக, **செறித்து** – அடக்கி, **இனிது விளக்கி** – (நோக்குவார்க்கு) இனியதாக (அப்பொருளை) விளங்கச் செய்து, **திட்பம்** –(குற்றமில்லாமையாற்) சொல்வலிமை பொருள் வலிமைகளும், **நுட்பம்** – (ஆழமுடைமையாற்) பொருள் நுணுக்கங்களும்; **சிறந்தன** – சிறந்து வருவன, **சூத்திரம்** – சூத்திரங்களாம்; **எ–று.**

## பவானந்தம் பிள்ளை

**இ–ள். ஆடியின்** – (பெரிய சரீர முதலியவைகளின் சாயையைத் தன்னுள்ளே செவ்வையாக அடக்கி இனிதாகக் காட்டுஞ் சிறிய) கண்ணாடி போல, **சில்வகை எழுத்தில் பல்வகைப் பொருளை** – சிலவகை யெழுத்துக்களாலாகிய வாக்கியத்திலே பல வகைப்பட்ட பொருள்களையும், **செவ்வன் செறித்து இனிது விளக்கி** – செவ்வையாக அடக்கி இனிதாகக் காட்டி, **திட்பம்**– (குற்றமில்லாமை யாற்) சொல்வலி பொருள் வலிகளும், **நுட்பம்** – (ஆழமுடைமையாற்) பொருள் நுட்பங்களும், **சிறந்தன சூத்திரம்** – சிறந்து வருவன சூத்திரங்களாம். **எ–று.**

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ–ரை.:** (பெரிய சரீர முதலானவைகளின் சாயையைத் தனக்குள்ளே செவ்வையாக அடக்கி இனிதாகக் காட்டுகின்ற) கண்ணாடியைப் போலச் சிலவகை எழுத்துக்களாலாகிய சொற்களில் பலவகைப்பட்ட பொருள்களைச் செவ்வையாக அடக்கி இனிதாகக் காட்டி (ப்பலபொருளினுடைய) திண்மையும் நுண்மையும் சிறந்து வருவன சூத்திரங்களாகும். **எ–று.**

சில்வகை எழுத்தென்ற பொருளடையால் சிறிய கண்ணாடி யென்பது பெறப்பட்டது.

## கா.நமச்சிவாய முதலியார்

**ஆடியின்** – கண்ணாடியைப்போல, **சில்வகை எழுத்தில்** – சிலவகை யெழுத்துக்களாலாகிய சொற்களில், **பல்வகைப் பொருளை** – பலவகைப்பட்ட பொருள்களை, **செவ்வன் செறித்து** – செவ்வையாக அடக்கி, **இனிது விளக்கி** – இனிதாகக் காட்டி, **திட்பம் நுட்பம்** – திண்மையும் நுண்மையும், **சிறந்தன** – சிறந்து வருவன, **சூத்திரம்** – சூத்திரங்களாகும்.

உருவங்களின் சாயையைத் தனக்குள்ளே அடக்கித் தெளிவாகக் காட்டுதல் கண்ணாடியின் தன்மையாதலால், ஆடியை ஒப்பிட்டார்.

## மோசசு பொன்னையா

பேருடலின் சாயையைச் செவ்வையாக அடக்கி, இனிதாகக் காட்டும் காண்ணாடியே போல், சிலவாகிய எழுத்துக்களால் அமைந்த யாப்பினுள், பரந்து விரிந்த பொருளை ஒழுங்கும் செறிவும் பெற இனிதாக அடக்கிச் சொல்வன்மையுடன் பொருள் நுணுக்கமும் சிறக்க அமைந்து விளங்குவன நூற்பாக்களாம், எ–று.

சூத்திரம் – நூற்பா

நூற்பாக்களின் தொகுதி ஒத்து அல்லது இயல்.

ஒத்துக்களின் தொகுதி படலம் அல்லது அதிகாரம் .

**(17)**

### சூத்திர நிலை

**18. ஆற்றொழுக் –**
**[1]கரிமா நோக்கந் தவளைப் பாய்த்துப்**
**[2]பருந்தின் விழுக்கா டன்னசூத் திரநிலை.**

**ஆற்று ஒழுக்கு**
**அரிமா நோக்கம் தவளைப் பாய்த்துப்**
**பருந்தின் விழுக்காடு அன்ன சூத்திர நிலை.**

---

பாட வேறுபாடு.:–

1. கரிமான்
2. பருந்தின் வீழ்வன்ன

āṟṟu oḻukku
arimā nōkkam tavaḷaip pāyttup
paruntin viḻukkātu aṉṉa sūttira nilai.

## என்றி பவர் - ஆங்கில மொழிபெயர்ப்பு

## The order and connection of verses

The course or concatenation in which *Sutras* proceed from one another is of four kinds; ***Fluviatic***, or as a straight flowing river; ***Leonine***, or as a lion which is supposed to see before and behind; ***Ranatic*** or as the jumping of a frog, leaving intermediate space between one subjects and another; and ***Acquiline***, or as the darting of a eagle or kite to seize upon its prey.

## மயிலைநாதர்

**இ–ள்.:** இந் நான்கு வகையால் நிற்பனவாம் சூத்திரங்கள், **எ–று.**

**ஆற்றொழுக்கு** என்பது, ஆற்றுநீர் தொடர்வறாது ஒழுகுமது போலச் சூத்திரங்களும் தம்முள் இயைபுபட்டொழுகுவது. **அரிமாநோக்க** மென்பது சிங்கநோக்கம். சிங்கம் நோக்குமிடத்து முன்னையாரையும் பின்னையாரையும் நோக்குமது போல இறந்த சூத்திரத்தினோடும் எதிர்ந்த சூத்திரத்தினோடும் இயைபு படக் கிடப்பது. **தவளைப் பாய்த்தென்பது,** தவளை பாய்கின்ற விடத்து இடையிடை நிலம் கிடப்பப் பாய்வது போலச் சூத்திரம் இடையிட்டுப் போய் இயைபு கொள்ளுவது. **பருந்தின் விழுக்கா டென்பது,** பருந்து நடுவே விழுந்து தான் கருதும்பொருளை எடுத்துக்கொண்டு போவது போல இதுவும் முடிக்கப்படும் பொருளை முடித்துப்போம் இயைபினது.

## சங்கர நமச்சிவாயர்

**எ–னின்,** இதுவும் அது.

**இ–ள்.:** மேற்கூறிய சூத்திரங்கள் ஒன்றோடு ஒன்று தொடர்ந்து நிற்கும் நிலைகள், ஆற்றொழுக்கு முதலிய நான்கினையும் போலும், **எ–று.**

இவ்வாறு நிற்றல், இந்நூலுள் வந்துழி வந்துழிக் காட்டுதும் ஆங்காங்கு உணர்க.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** சூத்திரப் பொருள்கோள் ஆமாறு கூறுகின்றது.

**இ—ள்.: ஆற்றொழுக்கு** – ஆற்று மணல் அற்றற்று ஒழுகுவது போலச் சொற்றொறும் பொருள் அற்று வருவதும் ஆற்று நீர் ஒழுக்கம் போலப் பொருள் தொடர்ச்சி பின்னோக்காமல் வருவதும், **அரிமா நோக்கம்** – ஒரு காலத்தில் இரு பக்கமும் நோக்கி அறியும் சிங்க நோக்குப் போல இடையினின்ற சொல் முதலினும் ஈற்றினும் சென்று பொருள் கொள்ளுவதும், **தவளைப் பாய்த்து** – தவளை பாய்தல் போல ஒரு சொல் தன்னை யடுத்த சொல்லைவிட்டு அயற் சொல்லொடு தாவிப் பொருள் கொள்வதும், **பருந்தின் வீழ்வு** – ஆகாயத்தின்கண் வட்டமிட்ட பருந்து எவ்விடத்தேனும் இரை கண்டு வீழ்வது போல ஒரு சொல் எவ்விடத்தேனும் சென்று பொருள்களாவது, **அன்ன சூத்திர நிலை** – இவை போல்வன பிறவும் சூத்திரப் பொருள்கோள் நிலையாம், **எ—று.**

## விசாகப்பெருமாளையர்

இதுவுமது.

இ—ள்.: ஆற்றொழுக்கு – நடுவில்விடாது செல்லுகின்ற ஆற்று வெள்ளத்தினது செல்லுகையையும், **அரிமா நோக்கம்** – முன்னும்பின்னும் பார்க்கின்ற சிங்கத்தினது பார்வையும், **தவளைப் பாய்த்து** – நடுவே யிடம்விட்டுக் குதிக்கின்ற தவளை யினது குதித்தலையும், **பருந்தின் வீழ்வு** – நெடுந் தூரத்தி லிருந்து ஒன்றை வெளவிப்போதற்கு வீழ்கின்ற பருந்தினது வீழ்ச்சியை யும், **அன்ன** – போலும், **சூத்திரம்** – முன்சொன்ன சூத்திரங்கள், **நிலை** – ஒன்றோடொன்று தொடர்ந்து நிற்கு நிலைகள், **எ—று.**

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** அச் சூத்திரங்கள் நிற்கும் நிலைகளை யுவமையா லுணர்த்துகின்றது.

**இ—ள்.: ஆற்றொழுக்கு** – (இடையறாமல் ஒரு முகமாகவே யோடுகின்ற) ஆற்றினது நீரோட்டத்தையும், **அரிமானோக்கம்** – (முன்னும் பின்னுந் தெரிகின்ற) சிங்கத்தின் பார்வையையும், **தவளைப் பாய்த்து** – (இடைவிட்டுக் குதிக்கின்ற) தவளையின் பாய்ச்சலையும், **பருந்தின் வீழ்வு** – (தலைகீழாக விழுகின்ற) பருந்தினது வீழ்ச்சியையும், **அன்ன** – ஒப்பனவாம், **சூத்திர நிலை** – சூத்திரங்க ளொன்றோடொன்று தொடர்ந்து நிற்கும் நிலைகள், **எ—று.**

இவ்வாறு நிற்பது இந்நூலுள் வந்தவந்த இடங்களிற் காட்டப்படும்; அந்தந்த விடங்களிற் கண்டுகொள்க.

இச்சூத்திர முடிபும் இனி வருஞ் சூத்திர முடிபும் மேலைச் சூத்திர முடிபு போலக் கொள்க.

## கா.கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– சூத்திரம் நிலை** – சூத்திரங்கள் (ஒன்றை யொன்று தொடர்ந்து நிற்கும்) நிலைகள், **ஆறு ஒழுக்கு** – (இடையறாமல் ஒருமுகமாக ஓடுகின்ற) நதியின் நீரோட்டத்தையும், **அரிமா நோக்கம்** – (முன்னும் பின்னும் பார்க்கின்ற) சிங்கத்தின் பார்வையையும், **தவளை பாய்த்து** – (இடைவிட்டுக் குதிக்கின்ற) தவளையின் பாய்ச்சலையும், **பருந்தின் வீழ்வு** – (நெடுந்தூரத்தினின்று ஒன்றை வௌவிப்போதற்குத் தலைகீழாக விழுகின்ற) பருந்தினது வீழ்ச்சியையும், **அன்ன** – ஒப்பனவாம்.

குறிப்பு :–

இவற்றுக்கு உதாரணங்கள் வருஞ் சூத்திரங்களிற் காண்க.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: சூத்திர நிலை** – மேற் கூறிய சூத்திரங்கள் ஒன்றோடொன்று தொடர்ந்து நிற்கு நிலைகள், **ஆற்றொழுக்கு** – இடையறாது ஓடுகின்ற ஆற்று நீரோட்டத்தையும், **அரிமா நோக்கம்** – முன்னும் பின்னும் பார்க்கின்ற சிங்கத்தினது பார்வையையும், **தவளைப் பாய்த்து** – இடையிட்டுக் குதிக்கின்ற தவளையினது பாய்ச்சலையும், **பருந்தின் வீழ்வு** – நெடுந்தூரத்தி னின்றும் ஒன்றை வௌவிப் போதற்கு வீழ்கின்ற பருந்தினது வீழ்ச்சியையும், **அன்ன** – போல்வனவாம். **எ–று.**

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். சூத்திரநிலை** – மேற்கூறிய சூத்திரங்கள் ஒன்றோடொன்று பொருளால் தொடர்ந்து நிற்கு நிலைகள், – **ஆற்றொழுக்கு** – இடையறாது ஓடுகின்ற ஆற்று நீரோட்டத்தையும், **அரிமா நோக்கம்** – முன்னும் –பின்னும் பார்க்கின்ற சிங்கத்தினது பார்வையையும், **தவளைப்பாய்த்து** – நடுவே சிறிதிடம் விட்டுக் குதிக்கின்ற தவளையினது பாய்ச்சலையும், **பருந்தின் வீழ்வு** – நெடுந்தூரத்தினின்றும் ஒன்றை வௌவிப்போதற்கு வீழ்கின்ற பருந்தினது வீழ்ச்சியையும், **அன்ன** – போல்வனவாம். **எ–று.**

## வை.மு. சடகோபராமானுசசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: சூத்திரம் நிலை** – சூத்திரங்கள் ஒன்றோடொன்று பொருளால் தொடர்ந்து நிற்கும் நிலைகள், **ஆறு ஒழுக்கு** – (இடையறாமல் ஒரு முகமாகவே செல்லுகின்ற) ஆற்று நீரோட்டத்தையும், **அரிமா நோக்கம்** – (முன்னும் பின்னும் பார்க்கின்ற) சிங்கத்தின் பார்வையையும், **தவளை பாய்த்து** – (நடுவே சிறிது இடம் விட்டுக் குதிக்கின்ற) தவளையின் குதிப்பையும், **பருந்தின் வீழ்வு** –

(நெடுந்தூரத்திலிருந்து ஒன்றை வௌவிப் போதற்குத் தலைகீழாக விழுகின்ற) பருந்தின் வீழ்ச்சியையும், **அன்ன** – போல்வனவாம். **எ–று.**

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.: சூத்திர நிலை** – மேற் கூறிய சூத்திரங்கள் ஒன்றோடொன்று தொடர்ந்து நிற்கு நிலைகள், **ஆற்றொழுக்கு** – (இடையறாது ஓடுகின்ற) ஆற்று நீரோட்டத்தையும், **அரிமா நோக்கம்** – (முன்னும் பின்னும் பார்க்கின்ற) சிங்கத்தினது பார்வையையும், **தவளைப் பாய்த்து** – (இடையிட்டுக் குதிக்கின்ற) தவளையினது பாய்ச்சலையும், **பருந்தின் வீழ்வு** – (நெடுந் தூரத்தினின்றும் ஒன்றை வௌவிப் போதற்கு வீழ்கின்ற) பருந்தினது வீழ்ச்சியையும், அன்ன – போல்வனவாம். **எ–று.**

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ–ரை:.** (இடையறாது செல்லுகின்ற) ஆற்று வெள்ளத்தினது செல்லுகையையும், (முன்னும் பின்ம் பார்கின்ற) சிங்கத் தினது பார்வையையும், (நடுவே இடம் விட்டுக் குதிக்கின்ற) தவளையினது குதித்தலையும், (நெடுந் தூரத்திலிருந்து ஒன்றை வவ்விப் போதற்கு வீழ்கின்ற) பருந்தினது வீழ்ச்சியையும் போல்வன, (முன் சொன்ன) சூத்திரங்கள் (ஒன்றோடொன்று தொடர்ந்து நிற்கும்) நிலைகள். **எ–று.**

## கா.நமச்சிவாய முதலியார்

**ஆறு ஒழுக்கு** – (இடையறாது செல்லுகின்ற) ஆற்று நீரின் செல்லுகையையும், **அரிமா நோக்கம்** – (முன்னும் பின்னும் பார்க்கின்ற) சிங்கத்தினது பார்வையையும், **தவளைப் பாய்த்து** – (இடையிடையே இடம் விட்டுக் குதித்துச் செல்கின்ற) தவளையினது பாய்தலையும், **பருந்தின் வீழ்வு** – (ஒன்றைக் கவர்ந்து போவதற்கு மிக்க உயரத்திலிருந்து கீழே வீழ்கின்ற) பருந்தினது வீழ்ச்சியையும், **அன்ன**–போலும், **சூத்திரநிலை** – (முன்சொன்ன) சூத்திரங்களின் (ஒன்றோடொன்று தொடர்ந்து நிற்கும்) நிலைகள்.

## மோசகு பொன்னையா

சூத்திரங்கள் ஒன்றோடொன்று தொடர்ந்து அமையும் நிலைகள், இடையறாது ஓடுகின்ற ஆற்று நீர்ப் போக்கையும், முன்னும் பின்னும் பார்க்கின்ற சிங்கத்தினது நோக்கையும் இடையிட்டுக் குதிக்கின்ற தவளையினது பாய்ச்சலையும், நடுவே விழுந்து தான் கருதும் பொருளைக் கொண்டு போகும் பருந்தின் வீழ்ச்சியையும் போன்றனவாம், **எ–று.**

**(19)**

# சூத்திர வகை

19. பிண்டந் தொகைவகை குறியே செய்கை
கொண்டியல் புறனடைக் கூற்றன சூத்திரம்

பிண்டம் தொகை வகை குறியே செய்கை
கொண்டு இயல் புறனடைக் கூற்றன சூத்திரம்

piṇṭam tokai vakai kuṟiyē seykai
koṇṭu iyal puṟaṉaṭaik kūṟṟaṉa sūttiram

## என்றி பவர் -ஆங்கில மொழிபெயர்ப்பு

### Different kinds of verses

Sutras are of six kinds: viz. the opening of the subjects by giving an abstract of the work; general rules or synopses, giving the divisions in breif, their number&c; particular rules of analysis; individual definitions; synthetical rules for permutation, elision&c and supplementary or exceptional rules to obviate objections, &c.

## மயிலை நாதர்

இ–ள்.: இக் கூற்றனவாம் சூத்திரங்கள், எ–று.

இவற்றுள்ளே பொது முதலான விகற்ப மெல்லாம் அடங்கு மெனக் கொள்க.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், இதுவும் அது.

இ–ள்.: பிண்டம் எனவும், தொகை எனவும், வகை எனவும், குறி எனவும், செய்கை எனவும், இவற்றை அலைவறக் கொண்டு இவற்றின் புறத்து அடையாய் வரும் புறனடை எனவும், கூறும் கூற்றினை யுடையவாம் மேற்கூறிய சூத்திரங்கள், எ–று.

இவற்றுள் பிண்டமாவன : 'பன்னிருபாற்றதுவே' (57) என்றற் றொடக்கத்துத் தொகைபோலாது 'நன்கு இயம்புவன் எழுத்தே' (56) என்றற் றொடக்கத்துப் பொதுப்பட வருவன. தொகையும் வகையும் புறனடையும் வந்துழி வந்துழிக் காட்டுதும்; ஆங்காங்கு உணர்க.

விரி வகையின்பாற்படுதலின் கூறாராயினார்.

குறியாவன: இவை உயிர், இவை ஒற்று, இவை பெயர், இவை வினை என்றற் றொடக்கத்து அறிதன் மாத்திரையாய் வருவன. குறி என்பது அறிதலை உணர்த்திய முதனிலைத் தொழிற்பெயர்.

செய்கையாவன : பதமுன் விகுதியும் பதமும் உருபும் புணரும் புணர்ச்சிவிதி அறிந்து, அங்ஙனம் அறிதன் மாத்திரையாய் நில்லாது, அவ்வாறு வேண்டுழிப் புணர்த்தலைச் செய்தலும், பெயர் வினை முதலிய கொள்ளும் முடிபு விதி அறிந்து அங்ஙனம் அறிதன் மாத்திரையாய் நில்லாது, அவ்வாறு வேண்டுழி முடித்தலைச் செய்தலும் முதலியன. இப் பிண்டம் முதலிய ஆறு பெயரும், அப் பொருளை உணர்த்தும் சூத்திரங்கட்கு ஆகுபெயராய் வந்தன.

> எல்லாச் சூத்திரங்களும் பிண்டம் தொகை வகை, புறனடை யென்னும் நான்கனுள் அடங்குமன்றே? அங்ஙனமாகக் குறியினையும் செய்கையினையும் வேறோதியது, எல்லா நூலுள்ளும் சொல்லப்படுவன அறிவதும் செய்வதுமன்றி வேறின்மையின் பிண்டமாக்கியும் தொகுத்தும் வகுத்தும் புறத்து அடைகொடுத்தும் கூறப்படுவன குறியும் செய்கையுமே என்பது தோன்றற்கு என்க. இங்ஙனம் கூறவே, எல்லா நூலுள்ளும் வரும் எல்லாச் சூத்திரங்களும், குறிச்சூத்திரம் செய்கைச் சூத்திரம் என இரண்டாய் அடங்கும் என்பது பெற்றாம்.
>
> இவ்வாறன்றிக் குறி என்பதற்குப் பெயர்களை உணர்த்துஞ் சூத்திரம் என்றும், செய்கை என்பதற்கு எழுத்துப் புணர்ச்சியை உணர்த்துஞ் சூத்திரம் என்றும் பொருள் கூறுவாரும் உளர். அங்ஙனம் கூறின், ஏனை யிலக்கணங்களைக் கூறும் சூத்திரங் களையும் விதந்து கூற வேண்டும்; அவையின்மையானும், பெயரும் புணர்ச்சியும் இவ்விலக்கண நூற்கன்றிப் பொதுப் பாயிரமாய் எல்லா நூற்கும் பொருந்தாமையானும் அது பொருளன்று என்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ—ம், சூத்திரத்தின் பகுதி இத்துணை யெனக் கூறுகின்றது.

**இ—ள்.: பிண்டம்** – பிண்டச் சூத்திரமாயினும், **தொகை** – தொகைப் பொருளாகச் சொல்லுவது தொகைச் சூத்திரமாயினும், **வகை** – வகைப்படுத்து உரைப்பது வகைச் சூத்திரமாயினும், **குறியே** – பெயராகிய குறியிட வருவது குறிச் சூத்திரமாயினும், **செய்கை** – சொற் புணர்ச்சி முதலாயின இலக்கணம் சொல்லுவது செய்கைச் சூத்திரமாயினும், **கொண்டியல் புறநடை** – இவற்றைக் கொண்டு இவ்விலக்கணம் வழுவாமற்கு வருமியல்பு சொல்லுவது புறநடைச் சூத்திரமாயினும், **கூற்றன சூத்திரம்** – இவ்வாறு வகைக் கூறுபாடு உடையது சூத்திரங்களாம், எ—று.

## விசாகப் பெருமாளையர்

இதுவுமது.

இ–ள்.: **பிண்டம்** – பலதிறப் பொருள்களுக்கும் பொதுவாகப் பின்டமாக்கிச் சொல்லும் பிண்ட சூத்திரமும், **தொகை** – அப் பலதிறப் பொருள்களையும் வேறுவேறாகத் தொகுத்துச் சொல்லுந் தொகைச் சூத்திரமும், **வகை** – அத் தொகுத்துச் சொல்லப்பட்ட வைகளை வகுத்துச் சொல்லும் வகைச் சூத்திரமும், **குறி**–இவையுயிர் இவை மெய்யென வறிய வருங் குறிச் சூத்திரமும், **செய்கை** – புணர்ச்சி விதி யறிந்து புணர்த்தலையும் முடிபு விதி யறிந்து முடித்தலையும் செய்யுஞ் செய்கைச் சூத்திரமும், **கொண்டியல் புறனடை**– இவைகளை அலைவறக் கொண்டு இவைகளின் புறத்து அடையாக வருகின்ற புறனடைச் சூத்திரமுமாகிய, **கூற்றன** – ஆறு பிரிவையுடையன, **சூத்திரம்** – சூத்திரங்கள், **எ–று.**

## முகவை இராமானுச கவிராயர்

இது, தொடர்ந்து நிற்கும் போது அச் சூத்திரங்களுக்குக் காரண வகையால் வரும் பெயர்வேறுபாடு உணர்த்துகின்றது.

இ–ள்.: **பிண்டம்** – (பல தொகைகளையு முள்ளடக்கிக் கொண்டு பொதுப்பட நிற்கும்) பிண்டச் சூத்திர மெனவும், **தொகை** – பலவற்றையுந் தொகுத்துக் கூறுந் தொகைச் சூத்திர மெனவும், **வகை** – அத் தொகையினை வேறுவேறு வகைப்பட வகுத்துக் கூறும் வகைச் சூத்திர மெனவும், **குறி** – பலவற்றையுங் குறித்து அறிய வருங் குறிச் சூத்திரமெனவும், **செய்கை** – புணர்தல் முடிதல் முதலிய செய்கைப்பட நிற்குஞ் செய்கைச் சூத்திர மெனவும், **கொண்டியல் புறனடை** – இவற்றை யெல்லாம் ஏற்றுக் கொண்டு இவற்றின் புறத்து அடையாய் வரும் புறனடைச் சூத்திர மெனவும், (சொல்லப்படும்) **கூற்றன சூத்திரம்** – கூறுகளை யுடையனவாம் மேற்கூறிய சூத்திரங்கள், **எ–று.**

**உதாரணம்.:**

'நன்கியம்புவ னெழுத்தே' என்றாற் போல்வன, பிண்டச் சூத்திரம், 'பன்னிருபாற்றதுவே' என்றாற் போல்வன, தொகைச் சூத்திரம்; எண்ணிலக்கண முதலாகப் பிரித்தோதிய சூத்திரங்கள் வகைச் சூத்திரங்கள்; 'அம்முதலீராறாவி' எனவும், 'வல்லெழுத் தென்ப கசடதபற' எனவும் அறிதல் அளவாய் வருஞ் சூத்திரங்கள் குறிச்சூத்திரங்கள்; 'ணனவல்லினம் வரட்டறவும்' எனவும், 'எழுவாயுரு புதிரிவில்பெயரே, வினை பெயர் வினாக்கொளல் தன்பயனிலையே' எனவும், 'முதலறு பெயரல தேற்பில முற்றே' எனவும், வருவன போல்வன செய்கைச்

சூத்திரங்கள்; 'மொழியாய்த் தொடரினும்' எனவும், 'இதற்கிது முடிபென்று' எனலுவும் 'சொற்றொறு மிற்றிதன் பெற்றி' – எனவும் 'பழையன கழிதலும்' எனவும் வருவன போல்வன, புறனடைச் சூத்திரங்கள்;

இனிப் பிண்டம், தொகை, வகை, புறனடை என்னு மிந்நான்குங் குறியுள்ளுஞ் செய்கையுள்ளு மடங்கும். அடங்கவே, எல்லாச் சூத்திரங்களும் குறிச்சூத்திரம், செய்கைச்சூத்திரமென விரண்டா யடங்கு மெனவுங் காண்க.

## கா.கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**பிண்டம்** – (பலதிறப் பொருள்களையும் உள்ளடக்கிக் கொண்டு பொதுப்படவரும்) பிண்டச்சூத்திரமும், **தொகை** – (அப் பலதிறப் பொருள்களையும் வேறுவேறாகத் தொகுத்துச் சொல்லும்) தொகைச் சூத்திரமும், **வகை** – (அத்தொகுத்துச் சொல்லப் பட்டவைகளை வகுத்துச் சொல்லும்) வகைச்சூத்திரமும், **குறி** – (இவை யின்னவை எனக் குறித்துச் சொல்லும்) குறிச் சூத்திரமும், **செய்கை** – (புணர்ச்சிவிதி யறிந்து புணர்த்தலையும் முடிபு விதியறிந்து முடித்தலையும் செய்யும்) செய்கைச் சூத்திரமும், **கொண்டு இயல் புறனடை** – (இவைகளை) ஏற்றுக் கொண்டு வருகின்ற புறனடைச் சூத்திரமும் ஆகிய, **கூற்றன** – (ஆறு) பிரிவை யுடையன, **சூத்திரம்** – சூத்திரங்கள்.

**உதாரணம்:–**

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | பிண்டச்சூத்திரம் | – | 'நன்கியம்புவனெழுத்தே' | (சூ–56) |
| 2. | தொகைச்சூத்திரம் | – | 'பன்னிருபாற்றதுவே' | (சூ–57) |
| 3. | வகைச்சூத்திரம் | – | 'மொழிமுதற்காரணமாம்' | (சூ–58) |
| 4. | குறிச்சூத்திரம் | – | 'அம்முதலீராறாவி' | (சூ–63) |
| 5. | செய்கைச்சூத்திரம் | – | 'ணனவல்லினம்வரட்டறவும்' | (சூ–209) |
| 6. | புறனடைச்சூத்திரம் | – | 'மொழியாய்த்தொடரினும்' | (சூ–127) |

விரி, வகையிலே சேர்தலால் வேறு சொல்லவில்லை. ஆறு விதமாகச் சொல்லினும், குறிச்சூத்திரம் செய்கைச் சூத்திரம் என்னும் இரண்டனுள்ளே மற்றை நான்கும் அடங்கும்.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: சூத்திரம்** – மேற கூறிய சூத்திரங்கள், **பிண்டம்** – பிண்ட சூத்திரமும், **தொகை** – தொகைச் சூத்திரமும், **வகை** – வகைச்சூத்திரமும், **குறி** – குறிச் சூத்திரமும், **செய்கை** – செய்கைச் சூத்திரமும், **கொண்டு இயல்**

**புறனடை** – இவைகளை அலைவறக் கொண்டு இவைகளின் புறத்து அடையாய் வரும் புறனடைச் சூத்திரமுமாகிய, **கூற்றன** – ஆறு பிரிவை யுடையனவாம், **எ–று.**

பிண்டசூத்திரமாவன, பலதிறப் பொருள்களையும் உள்ளடக்கிக் கொண்டு பொதுப்பட வருவன: அவை **"நன்கியம்புவனெழுத்தே"** என்றாற் போல்வன.

தொகைச் சூத்திரமாவன அப்பலதிறப் பொருள்களையும் வேறு வேறாகத் தொகுத்துச் சொல்வன:– அவை **"பன்னிரு பாற்றதுவே"** என்றாற் போல்வன.

வகைச் சூத்திரமாவன, அத்தொகுத்துச் சொல்லப்பட்டவைகளை வேறுவேறாக வகுத்துச் சொல்வன: அவை எண்ணிலக்கண முதலாக வகுத்தோதிய சூத்திரங்கள் போல்வன.

குறிச் சூத்திரமாவன, இவை உயிர்;இவை ஒற்று; இவை பெயர்; இவை வினை என்றற் றொடக்கத்து அறிதன்மாத்திரையாய் வருவன: அவை **"அம்முதலீ ராறாவி"** என்றாற் போல்வன.

செய்கைச் சூத்திரமாவது, புணர்ச்சி விதி யறிந்து புணர்தலைச் செய்தலும் முடிபு விதி யறிந்து முடித்தலைச் செய்தலு முதலியன:– அவை **"ணனவல்லினம் வரட்டறவும்"** எனவும் **"முதலறுபெயரல தேற்பில முற்றே"** எனவும் வருவன போல்வன.

புறனடைச்சூத்திரங்கள் **"மொழியாய்த் தொடரினும்"** எனவும் **"இதற்கிது முடிபென்று"** எனவும் வருவன போல்வன.

புறன்+அடை=புறனடை; புறத்து அடையாய் வந்தது. புறம்+நடை=புறநடை, வேறுவிதமாகிய நடக்கை எனினும் பொருந்தும்.

ஆறுவகைப்படச் சொல்லினும் குறிச் சூத்திரஞ் செய்கைச் சூத்திரம் என்னும் இரண்டினுள்ளே மற்றை நான்கும் அடங்கும்.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். சூத்திரம்** – மேற்கூறிய சூத்திரங்கள் – **பிண்டம்** – பிண்ட சூத்திரமும், – **தொகை** – தொகைச் சூத்திரமும், – **வகை** – வகைச்சூத்திரமும், – **குறி** – குறிச்சூத்திரமும், – **செய்கை** – செய்கைச்சூத்திரமும், – **கொண்டு இயல் புறனடை** – இவைகளை அலைவறக் கொண்டு இவைகளின் புறத்து அடையாய்வரும் புறனடைச் சூத்திரமுமாகிய, – **கூற்றன** – ஆறுபிரிவை யுடையனவாம். **எ–று.**

பிண்ட சூத்திரமான பலதிறப்பொருள்களையும் உள்ளடக்கிக் கொண்டு பொதுப்படவருவன. அவை நன்கியம்பு வனெழுத்தே என்றாற் போல்வன.

தொகைச்சூத்திரமாவன அப்பலதிறப்பொருள்களையும் வேறு வேறாகத் தொகுத்துச் சொல்வன. அவை பன்னிருபாற்றதுவே என்றாற்போல்வன.

வகைச்சூத்திரமாவன அத்தொகுத்துச் சொல்லப்பட்டவைகளை வேறு வேறு வகுத்துச் சொல்வன. அவை எண்ணிலக்கண முதலாக வகுத்தோதிய சூத்திரங்கள் போல்வன.

குறிச்சூத்திரமாவன இவை உயிர் இவை ஒற்று இவை பெயர் இவைவினை என்றற்றொடக்கத்து அறிதன்மாத்திரையாய் வருவன. அவை அம்முதலீராறாவி என்றாற்போல்வன.

செய்கைச் சூத்திரமாவன புணர்ச்சிவிதியறிந்து புணர்தலைச் செய்தலும் முடிபுவிதியறிந்து முடித்தலைச் செய்தலு முதலியன; அவை ணனவல்லினம் வரட்டறவும் எ–ம், முன்னிலைகூடிய படர்க்கையு முன்னிலை எ–ம். வருவனபோல்வன.

புறன் + அடை = புறவடை, பறந்து அடையாய் வந்தது. புறம் + நடை = புறநடை, (முற்கூறிய விதிக்கு வேறுவிதமாகிய நடக்கை எனினும் பொருந்தும்.

ஆறுவகைப்படச் சொல்லினும், குறிச்சூத்திரஞ் செய்கைச் சூத்திரம் என்னும் இரண்டினுள்ளே மற்றைநான்கும் அடங்கும்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: சூத்திரம்** – சூத்திரங்கள், **பிண்டம்** – (பலதிறப் பொருள்களையும் ஒருங்கு திரட்டிக் கூறும்) பிண்ட சூத்திரமும், **தொகை** – (அப்பலதிறப் பொருள்களையும் வேறுவேறாகத் தொகுத்துச் சொல்லுந்) தொகைச் சூத்திரமும், **வகை** – (அவ்வாறு தொகுத்துச் சொல்லப்பட்டவற்றை வேறுவேறாக வகுத்துச் சொல்லும்) வகைச் சூத்திரமும், **குறி** – (இவை உயிர், இவை மெய் என்பது முதலாக அறிய வருங்) குறிச்சூத்திரமும், **செய்கை** – (புணர்ச்சி முடிபு முதலியவற்றைச் செய்கின்ற) செய்கைச் சூத்திரமும், **கொண்டு இயல் புறன் அடை** – (இவற்றை யெல்லாம்) ஏற்றுக் கொண்டு (இவற்றின்) புறத்து அடுத்து வரும் புறனடைச் சூத்திரமும் ஆகிய, **கூற்றன** – (ஆறு) பிரிவை யுடையனவாம்.

இந்நூலில், பிண்டசூத்திரம், "நன்கியம்புவ னெழுத்தே" என்றாற் போல்வன.

தொகைச் சூத்திரம், "பன்னிருபாற்றதுவே" என்றாற் போல்வன.

வகைச்சூத்திரம், "மொழிமுதற்காரண மாம்" என்றாற் போல்வன.

குறிச்சூத்திரம், "அம்முத லீராறாவி" என்றாற் போல்வன. செய்கைச் சூத்திரம், "ணனவல்லினம் வரட்டறவும்" என்றாற் போல்வன.

புறனடைச் சூத்திரம், "இடையுரி வடசொலின்" என்றாற் போல்வன.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள். சூத்திரம்** – (மேற்கூறிய) சூத்திரங்கள், **பிண்டம்** – பிண்ட சூத்திரமும், **தொகை** – தொகைச் சூத்திரமும், **வகை** – வகைச் சூத்திரமும், **குறி**– குறிச் சூத்திரமும், **செய்கை** – செய்கைச் சூத்திரமும், **கொண்டு இயல் புறனடை** – இவைகளை அலைவறக் கொண்டு இவைகளின் புறத்து அடையாய் வரும் புறனடைச் சூத்திரமுமாகிய, **கூற்றன** – (ஆறு) பிரிவையுடையனவாம். எ–று.

(1) பிண்டசூத்திரமாவன பலதிறப் பொருள்களையும் உள்ளடக்கிக் கொண்டு பொதுப்பட வருவன: அவை "நன்கியம்புவனெழுத்தே" என்றாற் போல்வன.

(2) தொகைச் சூத்திரமாவன அப் பலதிறப் பொருள்களையும் வேறு வேறாகத் தொகுத்துச் சொல்வன: அவை "பன்னிருபாற்றதுவே" என்றாற் போல்வன

(3) வகைச் சூத்திரமாவன அத்தொகுத்துச் சொல்லப்பட்டவை களை வேறு வேறாக வகுத்துச் சொல்வன: அவை எண்ணிலக்கணம் முதலாக வகுத்தோதிய சூத்திரங்கள் போல்வன.

(4) குறிச்சூத்திரமாவன இவை உயிர் இவை ஒற்று இவை பெயர் இவை வினை என்றற் றொடக்கத்து அறிதன் மாத்திரையாய் வருவன: அவை "அம்முதலீராறாவி: என்றாற் போல்வன.

(5) செய்கைச் சூத்திரமாவன புணர்ச்சி விதி யறிந்து புணர்த்தலைச் செய்தலும் முடிபு விதி யறிந்து முடித்தலைச் செய்தலு முதலியன: "அவை ணனவல்லினம் வரட்டறவும்" எனவும், "முதலறு பெயரல தேற்பில முற்றே" எனவும் வருவன போல்வன.

(6) புறனடைச் சூத்திரங்கள் "மொழியாய்த் தொடரினும்" எனவும், "இதற்கிது முடிபென்று" எனவும் வருவன போல்வன

புறன் + அடை = புறனடை, புறத்து அடையாய் வந்தது. புறம் + நடை= புறநடை, வேறு விதமாகிய நடக்கை எனினும் பெருந்தும்.

ஆறுவகைப்படச் சொல்லினும், குறிச்சூத்திரஞ் செய்கைச் சூத்திரம் என்னும் இரண்டினுள்ளே மற்றை நான்கும் அடங்கும்.

## மோசகு பொன்னையா

பலதிறப் பொருளை உள்ளடக்கிச் சொல்லும் பிண்டச் சூத்திரமும், பலதிறப் பொருளையும் வேறு வேறாகத் தொகுத்துச் சொல்லும் தொகைச் சூத்திரமும், தொகுத்துச் சொல்லப்பட்ட வற்றை வேறு வேறாக வகுத்துச் சொல்லும் வகைச் சூத்திரமும், அறிதல் அளவாய்க் குறியிட்டுச் சொல்லும் குறிச்சூத்திரமும், புணர்தல் முடிதல் முதலிய செய்கைகளைக் காட்டி நிற்கும் செய்கைச் சூத்திரமும், அவற்றையெல்லாம் ஏற்று அவற்றிற்குப் புறத்தே அடையாய் நிற்கும் புறனடைச் சூத்திரமும் எனச் சூத்திரங்கள் பகுப்புப் பெறுவனவாம், எ—று. கூறு – பகுப்பு.

இவற்றுள் பிண்டம், தொகை, வகை, புறனடை என்னும் நான்கும் குறியுஞ் செய்கையுமாய் அடங்கும்.

உயிர், ஒற்று, பெயர், வினை என்றிவற்றை அறிதல் அளவாய் உணர்த்தி நிற்பன குறிச்சூத்திரங்கள்; அவ்வாறு அறிதல் அளவாய் நில்லாது முடித்துக் காட்டி நிற்பன செய்கைச் சூத்திரங்கள் என அறிக.

**எ—டு:**

1. நன்கியம்புவ னெழுத்தே – பிண்டச் சூத்திரம்.
2. பன்னிரு பாற்றதுவே – தொகைச் சூத்திரம்.
3. பத்துஞ் சார்பெழுத்தாகும் – வகைச் சூத்திரம்.
4. அம்முத வீரா றாவி – குறிச் சூத்திரம்.
5. தனிக்குறின் முன்னொற் றுயிர்வரி னிரட்டும் – செய்கைச் சூத்திரம்.
6. பழையன கழிதலும் – புறனடைச் சூத்திரம்.

# உரையின் பொது இலக்கணம்

20. பாடங் கருத்தே சொல்வகை சொற்பொருள்
தொகுத்துரை யுதாரணம் வினாவிடை விசேடம்
விரிவதி காரந் துணிவு பயனோ
டாசிரிய வசனமென் றீரே ழுரையே.

பாடம் கருத்தே சொல் வகை சொல் பொருள்
தொகுத்து உரை உதாரணம் வினா விடை விசேடம்
விரிவு அதிகாரம் துணிவு பயனொடு
ஆசிரிய வசனம் என்று ஈர் ஏழ் உரையே

pātam karuṭṭē sol vakai sol poruḷ
ṭokuṭṭu urai uṭāraṇam viṉā vitai visētam
virivu aṭikāram ṭuṇivu payaṉotu
āsiriya vasaṉam eṉṟu īr ēḷ uraiyē

## என்றி பவர் -ஆங்கில மொழிபெயர்ப்பு

### The fourteen requisites of a commentary

Urei, or commentary, should contain the following fourteen particulars, the text; the general scope or purport of the text; grammatical connection or parsing; literal meaning or giving equivalent words; free rendering of the text or paraphrase; illustration by examples; anticipating objections; answering objections; explanatory notes or special remarks; supplying ellipses; determining the meaning of doubtful terms, or giving the opinion of different commentators; determing the meaning between a diversity of opinions; practical application; and textuary proofs.

## மயிலை நாதர்

இ–ள்:– பாடம் சொல்லலும் கருத்துரைத்தலும், [1]சொல்வகுத்தலும் [2]சொற் பொருள் உரைத்தலும், பொழிப்புரைத்த லும், உதாரணங் காட்டலும் வினாத் தோற்றலும், விடை கொடுத்தலும், விசேடங் காட்டலும், விரிவு காட்டலும், அதிகார வரவு

பாட வேறுபாடு:–

1.சொல் வகுத்துரைத்தலும்

2. சொற்பொருளுணர்த்தலும்; சொற்பொருள் விரித்தலும்.

காட்டலும், துணிவு கூறலும், பயனொடுபடுத்தலும், ஆசிரிய வசனங் காட்டலு மென்னும் இப் பதினான்கு பகுதியானும் உரைக்கப்படும், சூத்திரப் பொருள், எ—று.

தொகுத்துக் கண்ணழித்தல் [1]விரித்துக் கொணர்ந் துரைத்தலென்னும் இருகூறும், பொழிப்பு, அகலம், நுட்பமென்னு மூவகையும், எடுத்துக்கோடல், பதங்காட்டல், பதம் விரித்தல், பதப்பொருளுரைத்தல், வினாதல், விடுத்த லென்னும் அறு கூறும், பொழிப்பு, அகலம் நுட்பம், நூலெச்சம், பதப்பொருளுரைத்தல், ஏற்புழிக் காட்டல், எண்ணலென்னு மேழும்,

**சொல்லே சொல்வகை சொற்பொருள் சோதனை**
**[2]மறைநிலை யிலேசெச்ச நோக்கே துணிவே**
**கருத்தே செலுத்தலென் றீரைந்து கிளவியு**
**நெறிப்பட வருவது பனுவலுரையே**

என்னும் இப்பத்தும், [3]சூத்திரந் தோற்றல், சொல் வகுத்தல், சொற்பொருளுரைத்தல், வினாதல், விடுத்தல், விசேடங் காட்டல், உதாரணங் காட்டல், ஆசிரிய வசனங் காட்டல், [4]அதிகார வரவு காட்டல், தொகுத்து முடித்தல், விரித்துக் காட்டல் துணிவு கூறல், பயனொடு புணர்ந்தலென்னும் இப்பதின்முப் பகுதியுமான இம்மத விகற்பமெல்லாம் இப் பதினான்கினுள்ளே அடங்குமெனக் கொள்க.

## சங்கர நமச்சிவாயர்

**எ—னின்,** மேல் காண்டிகையுரை விருத்தியுரை என்றார் அவற்றை உணர்த்துவான் தொடங்கி உரையினது பொது விலக்கணம் **உணர்—ற்று.**

**இ—ள்.:** இப் பதினான்கு வகையான் உரைக்கப்படும் நூற்கு உரை, **எ—று.**

இவற்றுள் **விசேடமாவது:** சூத்திரத்துள் பொருளன்றி ஆண்டைக்கு வேண்டுவன தந்துரைத்தல்.

**விரிவாவது:** வேற்றுமை முதலிய தொக்கு நின்றனவற்றை விரிக்க வேண்டுழி விரித்துரைத்தல்.

---

பாட வேறுபாடு ;

1. விரித்துத்தேர்ந்துரைத்தல்
2. மறைநிலையெச்ச நோக்கே
3. சூத்திரம் வகுத்தல் ஐயந்தோற்றல்
4. அதிகாரவடைவு.

**அதிகாரமாவது:** எடுத்துக் கொண்ட அதிகாரம் இதுவாதலின், இச்சூத்திரத்து அதிகரித்த பொருள் இது என அவ்வதிகாரத்தோடு பொருந்த உரைக்க வேண்டுழி உரைத்தல்.

**துணிவாவது:** ஐயுறக் கிடந்துழி இதற்கு இதுவே பொருள் என உரைத்தல். ஏனைய பொருள் விளங்கிக் கிடந்தன.

இப் பதினான்கும் இவ்வுரையுள் வந்துழி வந்துழிக் காட்டுதும்; ஆங்காங்கு உணர்க.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** பதினான்கு வகை உரை பெறும் சூத்திரங்களெனக் கூறுகின்றது.

**இ–ள்.: பாடம்** – பாடம் சொல்லுதலும், **கருத்தே** – சூத்திரக் கருத்து உரைத்தலும், சூத்திரத்து உட்கோள் உரைத்தல் என்று மாம், **சொல்வகை** – சூத்திரங்களிலும் சொற்களை யெல்லாம் வகுத்து எழுத்துச் சந்தி சொற் சந்தி கூறுதலும், **சொற் பொருள்** – தனித்தனியே பதப்பொருள் உணர்த்தலும் என்னை? "சொற் றொருஞ் சொற்றொறுஞ் துணிபொருள் உணர்த்தல் கற்ற புலவர் கண்ணழி யென்ப,"

**தொகுத்துரை** – பதப்பொருளை யெல்லாம் கூட்டிப் பிண்டமாக்கிப் பொழிப்புரையாக உரைத்தலும்.

**உதாரணம்** – கூறப்பட்ட இலக்கணத்திற்கு இலக்கியமாகிய உதாரணம் காட்டலும், **துணிவு** – இச்சொற்கு இதுவே பொருள் இச்சொற்கு இதுவே இலக்கணமெனத் துணிவு கூறலும், **பயனொடு** – சொற்றொறும் அளாவிய பொருளை யெல்லாம் கூட்டிப் பயனிதுவென உடன்படுத்தலும், **ஆசிரிய வசனம்** – கூடிய இலக்கணத்திற்குச் சரியாக ஆசிரியவசனம் காட்டலும், **என்று ஈரேழுரையே** – என்னும் இப் பதினான்கு பகுதியையும் உரைக்கப்படும் சூத்திரப்பொருள், **எ–று.**

## விசாகப் பெருமாளையர்

**இது,** முன் காண்டிகை விருத்தி என்ற உரைகளைச் சொல்லத் தொடங்கி உரையினது பொதுவிலக்கணத்தைச் சொல்லுகின்றது.

**இ–ள்.: பாடம்** – பாடமும், **கருத்து** – கருத்துரையும், **சொல்வகை** – சொல்லுக்குப் பொருளை வகுத்துரைத்தலும், **சொற்பொருள்** – பதப்பொருளும், **தொகுத்துரை** – தொகுத் துரைத்தலும், **உதாரணம்** – உதாரணமும், **வினா** – வினாவும், **விடை**– உத்தரமும், **விசேடம்** – வேண்டியவைகளைத் தந்துரைத்தலும், **விரிவு** – வேற்றுமைத் தொகை முதலானவை களை

விரித்துரைத்தலும், **அதிகாரம்** – அதிகாரத்தோடு பொருந்த வுரைத்தலும், **துணிவு** – இதற்கு இதுவே பொருளென வுரைத்தலும், **பயன்** – பயனை யுரைத்தலும், **ஆசிரிய வசனம்** – ஆசிரிய வசனங் காட்டுதலும், **என்று** – என்று சொல்லப்பட்ட, **ஈரேழ்** – பதினான்கு வகையாலு முரைக்கப்படும், **உரை** – நூலுக்கு உரை, **எ–று.**

## முகவை இராமானுச கவிராயர்

**இது**, உரையினது பொதுவிலக்கண முணர்த்துகின்றது.

**இ–ள்.: பாடம்**–உரை செய்தற் பொருட்டு எடுத்தெழுதிய மூலமும், **'மன்றுபறித்துண்ணேல்'என்பதை** ''மண்பறித்துண் ணேல்'' எனப் பாடமோதுவாரு முளர் என்றாற் போல்வனவும் பாடவுரை, **கருத்து**–என்பதிதன் கருத்தெனச் சுருக்கி யெழுதுமுறை கருத்துரை, **சொல்வகை** – குன்றியக்கா லென்பது குன்றிக்கா லென விகாரப்பட்டு நின்ற தென்றாற் போலச் சொல்லுக்களைக் குறித்தெழுதுமுறை சொல் வகையுரை, **சொற்பொருள்** – சொல்லுக்குப் பொருளெழுதுமுறை சொற்பொருளுரை, **தொகுத்துரை** – 'மதி மருட்டுஞ் சிறு நுதற் பேரமர்கட் செய்ய வாயைய நுண்ணிடையாய்' என்பதற்கு அறிவினை மயக்குஞ் சிறு நுதன் முதலிய வுறுப்புக்களை யுடையாய் எனத் தொகுத் தெழுதுமுறை தொகுத்துரை, **உதாரணம்** – உதாரணமெடுத் தெழுது முறை உதாரணவுரை, **வினா** – என்னுதலிற்றோ வெனின் எனவும், பொதுப்பாயிர நால்வகைப்படு மென்பாரு முளராலோ வெனின் எனவும் வினாவி யெழுதுமுறை வினாவுரை, **விடை**– இது கருதிற்று எனவும் இது கருதியென்க எனவும், **எதிர்மொழி யெழுதுமுறை** விடையுரை, **விசேடம்** – சூத்திரத்துட் பொருளன்றி அங்கே வேண்டியிருந்தால் பெய்துரைப்பது விசேடவுரை, **விரிவு** – வேற்றுமை யுருபு முதலியன தொக்கு நிற்பின் அவற்றை விரித்தெழுவது விரிவுரை, **அதிகாரம்**– அதிகாரத்தால் வருவிக்கப்பட்டதென அதிகாரத்தொடு பொருந்தக்காட்டி யெழுதுமுறை அதிகாரவுரை, **துணிவு** – சந்தேகப்பட நின்றவிடத்து இதற்கு இதுவே பொருளெனத் துணிந்து எழுதுமுறை துணிவுரை, **பயன்** – இப்படிச் சொன்னதினாலே வந்த பயனிதுவெனக் காட்டி யெழுதுமுறை பயனுரை, **ஆசிரிய வசனம்** – ஆசிரிய வசனங்களை யெடுத்தெழுதுவது ஆசிரியவசனவுரை, **என்றிரேழுரை** – எனப் பதினான்கு வகைப்படும் உரை, **எ–று.**

## கா.கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– பாடம்** (உரைசெய்தற்பொருட்டு எழுதும்) மூலபாடமும், **கருத்து** – (பொருளைச் சுருக்கியெழுதும்) கருத்துரையும், **சொல்வகை** – பதப்பிரிவும், **சொல் பொருள்** – பதவுரையும், **தொகுத்துரை** – பொழிப்புரையும், **உதாரணம்** – உதாரணமெடுத்துரைத்தலும், **வினா** – வினாவியுரைத்தலும், **விடை** – (அங்ஙனம் வினாவியதற்கு) விடையுரைத்தலும், **விசேடம்** – **வேண்டுவன** வற்றைத் தந்துரைத்தலும், **விரிவு** – (வேற்றுமைத்தொக்க முதலியவற்றை)

விரித்துரைத்தலும், **அதிகாரம்** – அதிகாரத்தோடு பொருத்தங் காட்டியுரைத்தலும், **துணிவு** – (ஐயந்தீர இதற்கு இதுவே பொருளெனத்) துணிந் துரைத்தலும், **பயன்** – (இப்படிச் சொல்லியதனால் வந்த) பயன் இதுவென உரைத்தலும், **ஆசிரியவசனம்** – மேற்கோள் காட்டி யுரைத்தலும், **என்று உரை ஈர் ஏழ்** – என நூலுக்கு உரை பதினான்கு வகைப்படும்.

> குறிப்பு :– **'சொல்வகை'** என்பதற்கு, 'குன்றியக்கால்' என்பது 'குன்றிக்கால்' என விகாரப்பட்டது என்று சொற்களைக் குறித்தெழுதுமுரை எனவுங் கூறுவர்.
>
> உதாரணவுரையை மேற்கோளுரை, காட்டுரை, எடுத்துக் காட்டுரை எனவும் வழங்குவர்.
>
> வினாவி யுரைத்தலாவது – 'என் நுதலிற்றோ? எனின்' என வினாவியுரைத்தல்.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: பாடம்** – மூலபாடமும், **கருத்து**–கருத்துரையும், **சொல்வகை** – பதச்சேதமும், **சொற்பொருள்** – பதப்பொருளும், **தொகுத்துரை** – பொழிப்புரையும் , **உதாரணம்** – உதாரணமும், **வினா** – வினாவும், **விடை** – விடையும், **விசேடம்** – வேண்டியவைகளைத் தந்துரைத்தலும், **விரிவு** – வேற்றுமை யுருபு முதலியவை தொக்கு நின்றபின் அவைகளை விரித்துரைத் தலும், **அதிகாரம்** – எடுத்துக்கொண்ட அதிகாரம் இதுவாதலின், இச்சூத்திரத்து அதிகரித்த பொருள் இதுவென அவ் வதிகாரத்தோடு பொருந்த உரைத்தலும், **துணிவு** – சந்தேகிக்க நின்றவிடத்து இதற்கு இதுவே பொருளெனத் துணிந்துரைத்தலும், **பயன்** – இப்படிச் சொல்லியதனால் வந்த பயன் இதுவென உரைத்தலும், **ஆசிரிய வசனம்** – ஆசிரிய வசனங் காட்டுதலும், **என்ற ஈரேழ் உரை** – என்று சொல்லப்பட்ட பதினான்கு வகையாலும் உரைக்கப்படும் நூலுக்கு உரை, எ–று.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். பாடம்** – மூலபாடமும், **கருத்து** – கருத்துரையும், – **சொல்வகை** – பதச்சேதமும், **சொற் பொருள்** – பதப்பொருளும், **தொகுத்துரை** – பொழிப்புரையும், **உதாரணம்** – உதாரணமும், **வினா** – வினாவும், **விடை** – விடையும், **விசேடம்** – வேண்டியவைகளைத் தந்துரைத்தலும், **விரிவு** – வேற்றுமையுருபு முதலியவை தொக்குநிற்பின் அவைகளை விரித்துரைத்தலும், **அதிகாரம்** – எடுத்துக்கொண்ட அதிகாரம் இதுவாதலின் இச்சூத்திரத்து அதிகரித்தபொருள் இதுவென அவ் வதிகாரத்தோடு பொருந்த உரைத்தலும், **துணிவு** – சந்தேகிக்கின்ற இடத்து இதற்கு இதுவே பொருளெனத் துணிந் துரைத்தலும், **பயன்** – இப்படிச் சொல்லியதினால் வந்த பயன் இதுவென

உரைத்தலும், **ஆசிரிய வசனம் என்று** – ஆசிரிய வசனங்காட்டுதலுமாக, **உரை** – நூலுக்கு உரை கூறுதல் ஈரேழு பதினான்கு வகையாம்.

என்றென்னும் மெண்ணிடைச் சொல்லைப் பன்னிரண்டாஞ் சூத்திரத்திற் கொண்டது போலக் கொள்க. பாடம் = பாடாந்தரம்,

"மன்றுபறித் துண்ணேல்" என்பதனை "மண்பறித்துண்ணேல்" என்று பாடமோதுவாரு முளர் என்றாற் போல்வன.

கருத்துரை – என்பதின் கருத்து எனச் சுருக்கியெழுதுமுரை.

சொல்வகை – "தருமஞ்சந்திகடாமரையோன்பதம், கருமஞ்சந்தி கடுப்பவர்வாழ்பதம்" என்பதை – *"தரும் அஞ்சம் திகழ் தாமரையோன் பதம் கருமை மஞ்சு அந்தி கடுப்பவர் வாழ் பதம்"* என்று சொற்களை வகுத்துரைத்தல்.

தொகுத்துரை – நட வாமடி சீ விடு கூ வே வை, நெப் பே வெள வரி ஞண் பொருந்திருந் தின், றேய் பார் செல் வவ் வாழ் கேளஃ கென், றெய்திய லிருபான் மூன்றா மீற்றவும் என்பதற்கு நடமுதல் அஃகீறாகச் சொல்லப்பட்ட இருபத்து மூன்றாகு மீற்றினையுடைய வாய்பாடுகளெல்லாம் என்று சுருக்கிக் கூறுவது.

"மதிமருட்டும் சிறுநுதற் பேரமர்க்கட் செய்யவாயை யநுண்ணிடையாய்" – என்பதற்கு அறிவினை மயக்குஞ் சிறுநுதன் முதலிய உறுப்புக்களை யுடையாய் என்று சுருக்கி யுரைத்தலாம்.

வினா – என்னுதலிற்றோ வெனின் எனவும் வருவன.

விடை – இது கருதிற்று; இது கருதியென்க என வருவன,

விரிவு – வேற்றுமையுருபை விரித்துரைத்தலும், உவமை யுருபை விரித் துரைத்தலும், ***"வினைச்சொல்லிலக்கணம் விளம்பிலளவில்லை, ஆ யினுமைந்தனுளறிந்தடக்குசுவே'*** என்பதில் ஐந்தனுள் என்பதற்கு முதனிலை, தொழிற்பெயர், முற்று, பெயரெச்சம், வினை யெச்சம், என்னும் ஐவகை வினையுள், என்று எண்ணாற் றொகுக்கப்பட்ட தொகைப் பெயரை விரித்துரைத்தலும் பிறவுமாம்.

அதிகாரம், ***"பீலிபெய்சாகாடுமச் சிறுமப்பண்டம், சாலமிகுத்துப் பெயின்"*** என்பது (மயிற்பீலியை ஏற்றிய சகடமும் அச்சுமுறியும், அப் பீலிகள் கனமற்றன என்று மிக அதிக மேற்றப்படின்) ஒட்டலங்கார வகையால் வேறு பொரு ளுரைத்தற்கு மிடங்கொடுப்பது போற் பொதுவகையாய் நிற்பினும் வலியற்றவரென்று கருதி ஒருவன் மிகப் பலருடன் பகைக்கின் அவனிறுதி எய்துவன் என்று அவ்வதிகாரத் தோடியையக்

கூறுதல் போல்வனவாம். *'அல்வழி ஆமா மியாமுற்று முன்மிகா'* என்பதில் மிகாவென்று குறிக்கப் பட்டவை வல்லினங்கள் என்னும் உரையும் அதிகாரத்தொடு பொருந்த உரைக்கப்பட்டதாம்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: சூத்திரம்** – சூத்திரங்கள், **பிண்டம்** – (பலதிறப் பொருள்களையும் ஒருங்கு திரட்டிக் கூறும்) பிண்ட சூத்திரமும், **தொகை** – (அப்பலதிறப் பொருள்களையும் வேறுவேறாகத் தொகுத்துச் சொல்லுந்) தொகைச் சூத்திரமும், **வகை** – (அவ்வாறு தொகுத்துச் சொல்லப்பட்டவற்றை வேறுவேறாக வகுத்துச் சொல்லும்) வகைச் சூத்திரமும், **குறி** – (இவை உயிர், இவை மெய் என்பது முதலாக அறிய வருங்) குறிச்சூத்திரமும், **செய்கை** – (புணர்ச்சி முடிபு முதலியவற்றைச் செய்கின்ற) செய்கைச் சூத்திரமும், **கொண்டு இயல் புறன் அடை** – (இவற்றை யெல்லாம்) ஏற்றுக் கொண்டு (இவற்றின்) புறத்து அடுத்து வரும் புறனடைச் சூத்திரமும் ஆகிய, **கூற்றன** – (ஆறு) பிரிவை யுடையனவாம்.

இந்நூலில், பிண்டசூத்திரம், "நன்கியம்புவ னெழுத்தே" என்றாற் போல்வன. தொகைச் சூத்திரம், "பன்னிருபாற்றதுவே" என்றாற் போல்வன. வகைச்சூத்திரம், "மொழிமுதற் காரணமாம்" என்றாற் போல்வன. குறிச்சூத்திரம், "அம்முத லீராறாவி" என்றாற் போல்வன. செய்கைச் சூத்திரம், "ணனவல்லினம் வரட்டறவும்" என்றாற் போல்வன. புறனடைச் சூத்திரம், "இடையுரி வடசொலின்" என்றாற் போல்வன.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:** பாடம் – (உரை செய்தற் பொருட்டு எடுத்தெழுதிய)மூலபாடமும், **கருத்து** – (இதன் கருத்து இது எனச் சுருக்கி எழுதும் கருத்துரையும், **சொல்வகை** – ('குன்றியக்கால்' என்பது 'குன்றிக்கால்' என விகாரப்பட்டு நின்றது என்றாற்போலச்) சொற்களைக் குறித்தெழுதும் உரையும், **சொற்பொருள்** – பதப்பொருளும், **தொகுத்துரை** – பொழிப்புரையும், **உதாரணம்** – உதாரணமும், **வினா** – ('இஃது என்னுதலிற்றோ எனின்' எனவும், 'பொதுப்பாயிரம் நால்வகைப்படும் என்பாரும் உளராலோ' எனவும்) வினாவியெழுதும் உரையும், **விடையும்** – ('இது நுதலிற்று' எனவும், 'இது கருதியென்க' எனவும் வினாவுரைக்கு) எதிர்மொழி எழுதும் உரையும், **விசேடம்** – வேண்டியவைகளைத் தந்துரைத்தலும், **விரிவு** – வேற்றுமையுருபு முதலியவை தொக்கு நின்பின் அவைகளை விரித்துரைத்தலும், **அதிகாரம்** – (எடுத்துக்கொண்ட அதிகாரம் இதுவாதலின் இச்சூத்திரத்து அதிகரித்த பொருள்

இதுவென) அவ்வதிகாரத்தோடு பொருந்த உரைத்தலும், **துணிவு**– [1]சந்தேகிக்க நின்றவிடத்து இதற்கு இதுவே பொருளெனத்) துணிந்துரைத்தலும், **பயன்** – (இப்படிச் சொல்லியதனால் வந்த) பயன் இதுவென உரைத்லும், **ஆசிரிய வசனம்** – ஆசிரிய வசனங் காட்டுதலும், **என்ற ஈரேழ் உரை** – என்று சொல்லப்பட்ட பதினான்கு வகையாலும் உரைக்கப்படும் நூலுக்கு உரை. **எ–று.**

> 'சொல்வகை' பதச்சேதம் எனவும்; 'சொற்பொருள்' பதவுரை எனவும்; 'உதாரணம்' மேற்கோள் அல்லது எடுத்துக்காட்டு எனவும் வழங்குதலுண்டு.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ–ரை.:** (மூல) பாடமும், கருத்துரையும், சொற்களை வகுத்துரைத்தலும், பதப்பொருளும், பொழிப்புரையும், உதாரணமும், வினாவும், உத்தரமும், (வேண்டியவைகளைத்) தந்துரைத்தலும், (வேற்றுமைத் தொகை முதலானவைகளை) விரித்துரைத்தலும், அதிகாரத்தோடு பொருந்த உரைத்தலும், இதற்கு இதுவே பொருளென உரைத்தலும், பயனை உரைத்தலும், ஆசிரிய வசனம் காட்டுதலும் என்று சொலப்பட்ட பதினான்கு வகையது நூலுக்கு (உரைக்கப்படும்) உரையாகும். **எ–று.**

## கா.நமச்சிவாய முதலியார்

பாடம் – மூலபாடத்தை அன்வயஞ் செய்தலும், **கருத்து** – கருத்துரையும், **சொல்வகை** – சொற்களைப் பிரித்துரைத்தலும், **சொல்பொருள்** – பதவுரையும், **தொகுத்துஉரை** – பொழிப் புரையும், **உதாரணம்** – உதாரணமும், **வினா**– வினாவும், **விடை** – விடையும், **விசேடம்** – (வேண்டியவைகளைத்) தந்துரைத்தலும், **விரிவு** – (வேண்டுவனவற்றை) விரித் துரைத்தலும், **அதிகாரம்** – அதிகாரத்தோடு பொருந்த உரைத் தலும், **துணிவு** – இதற்கு இதுவே பொருளென வுரைத்தலும், **பயன்** – பயனை உரைத்தலும், **ஆசிரிய வசனம்** – மேற்கோள் காட்டுதலும், **என்று ஈரேழ் உரை** – என்று பதினான்கு வகைப்படும் நூலுக்கு உரை.

## மோசசு பொன்னையா

மூல பாடங் காட்டல், கருத்துரை தருதல்,சொன் முடிபு காட்டல், பதவுரை பகர்தல், பொழிப்புரை மொழிதல், எடுத்துக் காட்டுத் தருதல், வினாவுதல், விடை தருதல், கூட்டிச் சொல்லல், விரிவுரை கூறுதல், அதிகாரப் பொருளுக் கேற்ப உரைத்தல், ஐயந் தெளிய வுரைத்தல், பயன்சுட்டி யுரைத்தல், மேற்கோள் காட்டி விளக்குதல் எனப் பதினான்கு வகையாலும் நூலுக்குஉரை வகுக்கப்படும், எ–று.

(20)

## காண்டிகையுரை

21. கருத்துப் பதப்பொருள் காட்டு மூன்றினும்
அவற்றொடு வினாவிடை யாக்க லானும்
சூத்திரத் துட்பொரு டோற்றுவ காண்டிகை

கருத்துப் பதப்பொருள் காட்டு மூன்றினும்
அவற்றொடு வினா விடை ஆக்கலானும்
சூத்திரத்து உள்பொருள் தோற்றுவ காண்டிகை

karuttup patapporuḻ kāttu mūṉṟiṉum
avaṟṟotu viṉā vitai ākkalāṉum
sūttirattu uḻporuḻ tōṟṟuva kāṇtikai

### என்றி பவர் -ஆங்கில மொழிபெயர்ப்பு

## Brief commentary

(There are two sorts of commentaries, viz., *Kandigai* and *Virutti*) The *Kandigai*, or brief commentary, treats on the scope or purport of the text; verbal analysis or interpretation; examples for illustrations; anticipating or proposing objections; answering objections or questions, as may possibly occur.

### ஒப்புமைப் பகுதி

.........சூத்திரம் மொழிப்பொருளே கருத்து உதாரணம்
வினா விடையால்
பெற்ற பொருள்படும் காண்டி....... (சுவாமி.:12:2–3)

ஒப்புமை நூற்பாக்கள்
உற்றது பதப்பொருள் உதாரணம் மூன்றுடன்
கற்றவர் வினாவிடை காட்டுதல் காண்டிம (மாற.அலங்.:21)

### மயிலைநாதர்

இ–ள்.: [1]இவ்விரு வகையானும் வருவன காண்டிகைகள், எ–று.

காட்டாவது – உதாரணம்.

---

பாட வேறுபாடு.:–

1. இவ்வகையான் வருவன

## சங்கர நமச்சிவாயர்

**எ—னின்,** காண்டிகை யுரையாமாறு **உணர் — ற்று.**

**இ—ள்.:** மேற் கூறிய பதினான்கினுள் கருத்துரையும் பதப் பொருளும் உதாரணமுமாகிய மூன்றனையும் உரைத்த லானும், அம் மூன்றனோடு வினா விடை என்னும் இரண்டனை யுங் கூட்டி உரைத்தலானும், சூத்திரத்துள் பொருளை விளக்குவன காண்டிகை உரைகளாம், **எ—று.**

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** காண்டிகை உரையாமாறு கூறுகின்றது.

**இ—ள்.: கருத்துப்** — சூத்திரத்தின் கருத்து இவையெனக் கூறலும், **பதப்பொருள்** — தனித்தனியே பதப்பொருள் உரைத்தலும், **காட்டு** — இலக்கியமாகிய உதாரணம் எடுத்துக் காட்டலும், **மூன்றினும்** — இம் மூவகை உரையினோடுமாம், **அவற்றொடு** — அம் மூவகை உரையினோடும், **வினா விடை ஆக்கலானும்** — வினாவும் விடையும் கூறி ஐந்துரையாகச் செய்தலினாலும், **சூத்திரத்து உட்பொருள் தோற்றுவ** — சூத்திரத்திலுள்ள பொருளெல்லாம் தோற்றப்படுவனவும், **காண்டிகை** — காண்டிகை உரையாம், **எ—று.**

## விசாகப் பெருமாளையர்

**இது,** காண்டிகை யுரையாமாறு சொல்லுகின்றது.

**இ—ள்.: கருத்து** — கருத்துரையும், **பதப்பொருள்** — மதவுரையும், **காட்டு** — உதாரணமும், **மூன்றினும்** — ஆகிய மூன்றனையுஞ் சொல்லுதலாலும், **அவற்றொடு** — அம் மூன்ற னோடு, **வினா** — வினாவும் விடை — உத்தரமும், **ஆக்கலானும்** — ஆகிய விரண்டனையுங் கூட்டிச் சொல்லுதலாலும், **சூத்திரத்துள்** — சூத்திரத்துளிருக்கின்ற, **பொருள்** — பொருளை, **தோற்றுவ** — காட்டுவன, **காண்டிகை** — காண்டிகையுரைகளாம், **எ—று.**

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** நிறுத்தமுறையே காண்டிகையுரை இலக்கணம் உணர்த்துகின்றது.

**இ—ள்.: கருத்து** — கருத்துரையும், **பதப்பொருள்** — பதவுரையும், **காட்டு** — உதாரணவுரையும், **மூன்றினும்** — ஆகிய மூன்றினாலும், **அவற்றொடு** — அம் மூன்றினோடே கூட, **வினாவிடை யாக்கலானும்** — வினாவுரை விடை யுரைகளைக் கூட்டி யுரைத்தலாலும், **சூத்திரத்துட்பொருள்** — சூத்திரத்துள்ளே மறைந்திருந்த பொருளை, **தோற்றுவ காண்டிகை** — வெளிப்படுத்துவன காண்டிகை யுரைகளாம், **எ—று.**

மூன்றினும் எனப் பிரித்தது வினாவிடை இரண்டும் இன்றியும் காண்டிகையுரை வழங்கப்படு மென்பதும், ஐந்துங் கூடி வருவது ஐங்காண்டிகையுரை யென்பதும் தெரிவித்தற்கெனக் காண்க.

## கா.கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– கருத்து** – கருத்துரையும், **பதப்பொருள்** – பதவுரையும், **காட்டு** – உதாரணவுரையும் (ஆகிய), **மூன்றினும்** – இம் மூன்றுவகை உரைகளாலும், **அவற்றொடு** – அம்மூவகை யுரையோடு, **வினாவிடை** – வினாவுரை விடையுரை (என்னும் இரண்டினையும்), **ஆக்கலானும்** – கூட்டியுரைத்தலாலும், **சூத்திரத்து உள்பொருள்** – சூத்திரத்துள் மறைந்திருந்த பொருளை, **தோற்றுவ** – வெளிப்படக் கூறும் உரை, **காண்டிகை** – காண்டிகையுரை எனப்படும்.

குறிப்பு :–

'மூன்றினும்' என வேறுபடுத்திக் கூறியதால் காண்டிகை யுரை வினா விடை யின்றியும் வழங்குமென்றதாயிற்று.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: கருத்துப் பதப்பொருள் காட்டு மூன்றினும்** – கருத்துரையும் பதவுரையும் உதாரணமுமாகிய மூன்றனையுஞ் சொல்லுதலாலும், **அவற்றொடு வினா விடை ஆக்கலானும்** – அம்மூன்றனோடு வினா விடை என்னும் இரண்டனையுங் கூட்டிச் சொல்லுதலாலும், **சூத்திரத்துள் பொருள் தோற்றுவ காண்டிகை** – சூத்திரத்துளிருக்கின்ற பொருளை விளக்குவன காண்டிகை யுரைகளாம், **எ–று.**

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். கருத்துப் பதப்பொருள் காட்டு மூன்றினும்** – கருத்துரையும் பதவுரையும் உதாரணமுமாகிய மூன்றனையுஞ் சொல்லுதலாலும், **அவற்றொடு வினா விடை ஆக்கலானும்** – அம் மூன்றனோடு வினா விடை என்னும் இரண்டனையுங் கூட்டிச் சொல்லுதலாலும், **சூத்திரத்துள் பொருள் தோற்றுவ காண்டிகை** – சூத்திரத்திருக்கின்ற பொருளை விளக்குவன காண்டிகை யுரைகளாம். **எ–று.**

கருத்துப் பதப்பொருள் காட்டு மூன்றினுஞ் சூத்திரத்துட் பொருடோற்றுவ காண்டிகை யென்றும்; அவற்றொடு வினாவிடை யாக்கலானுஞ் சூத்திரத்துட் பொருடோற்றுவ காண்டிகை யென்றும் இருமுடிபாகக் கொள்ளுக. எனவே காண்டிகையுரை **திரயாங்கி, பஞ்சாங்கி** என இரு

வகைப்படுமென்றறிக.

திரய + அங்கி = மூன்றுறுப்புடையது. பஞ்ச + அங்கி = ஐந்துறுப்புடையது.

## பவானந்தம் பிள்ளை

இ–ள். **கருத்துப் பதப்பொருள் காட்டு மூன்றினும்** – கருத்துரையும் பதவுரையும் உதாரணமுமாகிய மூன்றனையுஞ் சொல்லுதலாலும், **அவற்றொடு வினா விடை ஆக்கலானும்** – அம் மூன்றானோடு வினா விடை என்னும் இரண்டனையுங் கூட்டிச் சொல்லுதலாலும், **சூத்திரத்துள் பொருள் தோற்றுவ காண்டிகை** – சூத்திரத்து ளிருக்கின்ன பொருளை விளக்குவன காண்டிகையுரைகளாம். எ–று.

'மூன்றிலும்' எனப் பிரித்து வினாவிடை. இரண்டு மின்றியும் காண்டிகையுரை வழங்கப்படுமென்பதும், ஐந்துக் கூடி வருவது ஐங்காண்டிகையுரை யென்பதுந் தெரிவித்தற்கு என்றார் இராமானுஜ கவிராயர்.

காண்டிகை உறுப்புகள் (1) கருத்துரை, (2) பதவுரை, (3) உதாரணம், (4) வினா, (5) விடை என ஐந்தாம்.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ–ரை.:** கருத்துரையும், பதவுரையும், உதாரணமு மாகிய மூன்றனையும் சொல்லுதலாலும், அம் மூன்றனோடு வினாவும் உத்தரமும் (ஆகிய இரண்டனையும்) கூட்டிச் சொல்லு தலாலும், சூத்திரத்துளிருக்கின்ற பொருளைக் காட்டுவன காண்டிகை யுரைகளாம். எ–று.

'மூன்றினும்' எனப் பிரித்துக் கூறியதனால், வினா விடையிரண்டு மின்றியுங் காண்டிகை யுரை வழங்கப்படு மென்பதும், ஐந்துங் கூடி வருவது ஐங்காண்டிகை யுரை என்பதும் தெரிவித்தற்கெனக் காண்க.

## கா.நமச்சிவாய முதலியார்

**கருத்து** – கருத்துரையும், **பதப்பொருள்** – பதவுரையும், **காட்டு** – உதாரணமும், **மூன்றினும்** – ஆகிய மூன்றனையுஞ் சொல்லுதலாலும், **அவற்றோடு** – அம் மூன்றனோடு, **வினா** – வினாவும், **விடை** – விடையும், **ஆக்கலானும்** – (ஆகிய இரண்டனையும்) கூட்டிச் சொல்லுதலாலும், **சூத்திரத்து** – சூத்திரத்தில், **உட்பொருள்** – உள்ள பொருளை, **தோற்றுவ** – காட்டுவன, **காண்டிகை** – காண்டிகை யுரைகளாம்.

முக்காண்டிகை யெனவும், ஐங்காண்டிகை யெனவும் காண்டிகை இருவகைப்படுமாதலால், 'அவற்றோடு' என இடையே ஒடுக் கொடுத்துப் பிரித்து, 'தோற்றுவ' எனப் பன்மை வினையான் முடித்தார்.

## மோசசு பொன்னையா

கருத்துரை தருதல், பதவுரை தருதல், எடுத்துக்காட்டுத் தருதல் என்னும் மூன்றோடு வினாவுதலும், விடைதருதலும் ஆகிய இரண்டினையும் மேற்கொண்டு சூத்திரத்தின் உட்கிடை யாகிய பொருளை விளக்கியுரைப்பது காண்டிகை யுரையாம், எ–று.

(21)

# விருத்தியுரை

22. **சூத்திரத் துட்பொரு ளன்றியு மாண்டைக்**
**கின்றி [1]யமையா யாவையும் விளங்கத்**
**தன்னுரை யானும் பிறநூ லானும்**
**ஐய மகலவைங் காண்டிகை யுறுப்பொடு**
**மெய்யினை யெஞ்சா திசைப்பது விருத்தி.**

**சூத்திரத்து உள் பொருள் அன்றியும் ஆண்டைக்கு**
**இன்றி அமையா யாவையும் விளங்கத்**
**தன் உரையானும் பிற நூலானும்**
**ஐயம் அகல ஐங் காண்டிகை உறுப்பொடு**
**மெய்யினை எஞ்சாது இசைப்பது விருத்தி.**

sūṭṭiraṭṭu uḻ poruḻ anṟiyum
āṇtaikku inṟi amaiyā yāvaiyum viḻaṅkaṭ
ṭan uraiyānum pira nūlānum
aiyam akala aiṅ kāṇtikai uṟuppotu
meyyinai eñsāṭu isaippaṭu viruṭṭi.

## என்றி பவர் –ஆங்கில மொழிபெயர்ப்பு

## Diffuse Commentary

The *Virutti*, or diffuse commentary, treats not only of the meaning of the text as made known in the foregoing ***Sutram***, but also takes as wider range into things which might suggest themselves as necessary

பாட வேறுபாடு.:–

1. யன்மையாதி யாவையும்

for the understanding of the original; the author giving his own opinion as well as the opinions of others, dispelling all doubts and leaving nothing unsaid.

## ஒப்புமைப் பகுதி

.................... சூத்திரத்தின் பொருளும் பிறநூலாற்
றன்னுரையாற் காண்டியொடு
ஐயகம் அகற்றிடச் சொல்லுவது விருத்தி..... **(சுவாமி.: 12:3–4)**

ஒன்றிய சூத்திரத்து உட்பொரு ளன்றியு
மின்றியமை யாதன புணர்த் திசைத்த ஐந்து
உறுப்புடன் இருதிறத்து உரைஇடனாக மெய்ந்
நிறுததியது ஒன்றெென நிகழ்த்துதல் விருத்தி (மாற.அலங்.:22)

## மயிலைநாதர்

**இ–ள்.:** இவ்விதி [1]யனைத்துமுள்ளது விருத்தியாவது, **எ–று.**

## சங்கர நமச்சிவாயர்

**எ–னின்,** விருத்தியுரையாமாறு **உணர்–ற்று.**

**இ–ள்.:** காண்டிகையுரை போல் சூத்திரத்துள் பொருள் விளக்குதல் மாத்திரையின் நில்லாது, அவ்விடங்கட்கு இன்றியமையாத பொருள்கள் யாவையும் விளங்கத் தானுரைக் கும் உரையானும், ஆசிரிய வசனங்களானும் மேற் கூறிய காண்டிகை உறுப்பு ஐந்தினானும் ஐயந் தீரச் சுருங்காது மெய்ம்மைப் பொருளை விரித்துரைப்பது விருத்தியுரையாம், **எ–று.**

**'சூத்திரத்துட் பொருளன்றியும்'** என்றமையான், மேற் கூறிய பதினான்கு உறுப்புங் கொண்டது விருத்தியுரை என்பது பெற்றாம்.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** விருத்தி உரையாமாறு கூறுகின்றது.

**இ–ள்.: சூத்திரத்து உட்பொருள் அன்றியும்** – நூல் வகைப் பொருள்கோள் வகையாலும் கூறிய சூத்திரத்திலுள்ள பொருளல்லாமலும்,

---

பாட **வேறுபாடு.:–**

1. யனைத்தும் **விருத்தி**

**ஆண்டைக்கு** – அவ்விடத்துச் சொற்களுக்கு, **இன்றியமையாது யாவையும் விளங்க** – இன்றியமை யாதவையாய் உள்ள சொற்கள் எல்லாவற்றையும் விளங்கும் படிக்கு, **தன்னுரையானும்** – தான் கூறிய உரையினாலும், **பிறர் நூலானும்** – பிறர் கூறிய நூலுரையாலும், **ஐய மகல** – தெளிவு பெறும்படிக்கு, **ஐங் காண்டிகை உறுப்பொடு** – காண்டிகை ஐவகை உறுப்பினோடும், **மெய்யினை எஞ்சாது இசைப்பது** – மெய்ப்பொருளினைக் குறைபடாமற் கூறப்படுவது, **விருத்தி** – விருத்தியுரையாம், **எ–று.**

## விசாகப் பெருமாளையர்

**இது,** விருத்தியுரை யாமாறு சொல்லுகின்றது.

**இ–ள்.: சூத்திரத்துள்** – சூத்திரத்திலுள்ள, **பொருளன்றியும்** – பொருளை யல்லாமலும், **ஆண்டைக்கு** – அவ்விடங்களுக்கு, **இன்றி யமையாதி யாவையும்** – இல்லாது நிறையாத வெல்லாப் பொருள்களும், **விளங்க** – விளங்கும்படியாக, **தன்னுரை யானும்** – தானுரைக்கு முரையாலும், **பிறநூலானும்** – ஆசிரிய வசனங்களாலும், **ஐங் காண்டிகை யுறுப்மொடு** – முன்சொன்ன காண்டிகை யுரையின் அவயவமாகிய ஐந்தனாலும், **ஐயமகல** – சங்தேகந் தீர, **மெய்யினை** – மெய்ப்பொருளை, **எஞ்சாது** – குறையாமல், **இசைப்பது**– விரித்துரைப்பது, **விருத்தி** – விருத்தி யுரையாகும், **எ–று.**

சூத்திரத்துட் பொருளன்றியு மென்றதால், முன்சொன்ன பதினான்கு உறுப்புகளையுங் கொண்டு வருவது விருத்தியுரை யென்றதாயிற்று.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** நிறுத்தமுறையே விருத்தியுரை யிலக்கண முணர்த்துகின்றது.

**இ–ள்.: சூத்திரத்துட் பொருளன்றியும்** – சூத்திரத்துள் ளிருந்த பொருளை வெளிப்படுத்துவதன்றியும், **ஆண்டைக்கு** – அவ்விடத்துக்கு, **இன்றியமையா யாவையும்** – இல்லாமற் கூடாத பொருள்களெல்லாவற்றையும், **விளங்க** – தெரியும்படியாக, **தன்னுரையானும்** – தானெழுது முரையினாலும் **பிறர் நூலானும்** – ஆசிரிய வசனங்களாலும், **ஐங் காண்டிகை யுறுப் பொடு** – முன் சொல்லப்பட்ட ஐங் காண்டிகை யுறுப்பைந் தினாலும், **ஐயந் தீர** – சந்தேகந் தீர, **மெய்யினை** – பொருளை, **எஞ்சாது** – குறையாமல், **இசைப்பது விருத்தி** – சொல்லப்படுவது விருத்தி யுரையாம், **எ–று.**

'**சூத்திரத்துட் பொருளன்றியு**' மென்றதனால், மேலே பொதுவிலக்கணமாகச் சொல்லப்பட்ட பதினான்கு வகையுங் கொண்டு நிற்பது விருத்தியுரை யென்பது பெறப்பட்ட

தென்பாரு முளர். அங்ஙனமாயின், காண்டிகைக்குச் சிறப்புவிதி சொல்லி விருத்திக்குச் சிறப்பு விதி சொல்ல வந்தவர் மாட்டெறிந்து அப் பதினான்கும் விருத்தியாகும் எனக் கூற வேண்டும்; அங்ஙனங் கூறாததினாலும், பதினான்கென்பது பொதுவிலக்கண மாதலாலும் அஃதிச் சூத்திரக் கருத்தன்று; 'தன்னுரையானும் பிறர் நூலானு மைங்காண்டிகை யுறுப்போ' டென்றதினால் ஐங் காண்டிகை யுறுப்பின் மேற்பட்டு வருவன வெல்லாம் விருத்தியுரை யென்பதே இதன் கருத்தெனக் காண்க.

## கா.கோபாலாசாரி - தி.கோ.ரங்காசாரி

**உரை :- சூத்திரத்து உள்பொருள் அன்றியும்** - சூத்திரத்திலுள்ள பொருளை வெளிப்படுத்துவதல்லாமலும், **ஆண்டைக்கு** - அவ்விடத்துக்கு, **இன்றி அமையா** - இல்லாமல் பொருந்தாத (அவசியமான), **யாவையும் விளங்க** - எல்லாப் பொருளும் விளங்கும்படி, **தன் உரையானும் பிறநூலானும்** - தனது உரையினாலும் ஆசிரிய வசனங்களாலும், **ஐங் காண்டிகை உறுப்பொடு** - மேற்சொல்லிய காண்டியுறுப்பு ஐந்தினாலும், **ஐயம் அகல** - சந்தேகம் ஒழியும்படி, **மெய்யினை** - உண்மையான பொருளை, **எஞ்சாது** - குறைவுபடாமல், **இசைப்பது** - (விரித்து) உரைப்பது, **விருத்தி** - விருத்தியுரையாம்.

குறிப்பு :-

எனவே, 'கருத்துப்பதப் பொருள்காட்டு' என்னும் மூன்றுறுப்பாலும், அவற்றொடு வினாவிடை கூட்ட ஐந்துறுப்பாலும் வருவன காண்டிகை யெனவும், இவ்வைந்துக்கு மேற்பட்டு வருவது விருத்தியுரை எனவும் கூறியதாயிற்று.

## ஆறுமுக நாவலர்

இ-ள்.: **சூத்திரத்துள் பொருள் அன்றியும்** - சூத்திரத்திலுள்ள பொருளல்லாமலும், **ஆண்டைக்கு இன்றி அமையா யாவையும் விளங்க** - அவ் விடங்களுக்கு இல்லாமல் நிறையாத பொருள்களெல்லாம் விளங்கும்படி, **தன் உரையானும் பிற நூலானும்** - தானுரைக்கு முரையாலும் ஆசிரிய வசனங்களாலும், **ஐங் காண்டிகை உறுப்பொடு** - மேற்கூறிய காண்டிகை யுறுப்பைந்தினாலும், **ஐயம் அகல எஞ்சாது மெய்யினை இசைப்பது விருத்தி** - சந்தேகந்தீரச் சுருங்காது மெய்ம்மைப் பொருளை விரித்துரைப்பது விருத்தி யுரையாம், எ-று.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். சூத்திரத்துள் பொருள் அன்றியும்** – சூத்திரத்துள்ள பொருளல்லாமலும், – **ஆண்டைக்கு இன்றி அமையா யாவையும் விளங்க** – அவ்விடங்களுக்கு இல்லாமல் நிறையாத பொருள்களெல்லாம் விளங்கும்படி, – **தன் உரையானும் பிற நூலானும்** – தானுரைக்கு முரையாலும் ஆசிரியவனங்களாலும், – **ஐங்காண்டிகை உறுப்பொடு** – மேற்கூறிய காண்டிகை யுறுப்பைந்தினாலும், **மெய்யினை** – உண்மைப்பொருளை, **ஐயம் அகல எஞ்சாது இசைப்பது விருத்தி** – சந்தேகந் தீரச் சுருங்காது விரிந்துரைப்பது விருத்தியுரையாம். எ–று.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள். சூத்திரத்துள் பொருள் அன்றியும்** – சூத்திரத்திலுள்ள பொருளல்லாமலும், **ஆண்டைக்கு இன்றி அமையா யாவையும் விளங்க** – அவ்விடங்களுக்கு இல்லாமல் நிறையாத பொருள்களெல்லாம் விளங்கும்படி, **தன் உரையானும் பிற நூலானும்** – தானுரைக்கு முரையாலும் ஆசிரிய வசனங்களாலும், **ஐங் காண்டிகை உறுப்பொடு** – மேற்கூறிய காண்டிகை யுறுப்பைந்தினாலும், **ஐயம் அகல எஞ்சாது மெய்யினை இசைப்து விருத்தி** – சந்தேகந்தீரச் சுருங்காது மெய்ம்மைப் பொருளை விரித்துரைப்பது விருத்தியுரையாம். **எ–று.**

> சூத்திரத்துட் பொருளன்றியும் என்றமையான் மேற்கூறிய பதினான்குறுப்புங் கொண்டது விருத்தியுரை யென்பது பெற்றாம் என்றார் சங்கர நமச்சிவாயப் புலவர். அதனை மறுத்து, அங்ஙனமாயின் காண்டிகைக்குச் சிறப்பு விதி சொல்லி விருத்திக்குச் சிறப்பு விதி சொல்ல வந்தவர் மாட்டெறிந்து" 'அப்பதினான்கும் விருத்தியாகும்' எனக் கூறவேண்டும். அங்ஙனம் கூறாததினாலும் பதினான் கென்பது பொதுவிலக்கண மாதலாலும் அஃது இச்சூத்திரக் கருத்தன்று. 'தன்னுரையானும் பிறர்நூலானுமைங் காண்டிகையுறுப்போடு' என்றதனால் ஐங் காண்டிகையுறுப்பின் மேற்பட்டு வருவன வெல்லாம் விருத்தியுரை என்பதே இதன் கருத்தெனக் காண்க என்றார் இராமானுஜ கவிராயர்.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ–ரை.:** சூத்திரத்திலுள்ள பொருளையல்லாமலும் அவ்விடங்களுக்கு இல்லாது நிறையாத எல்லாப் பாருள்களும் விளங்கும்படியாகத் தானுரைக்கும்

உரையாலும் ஆசிரிய வசனங்களாலும் (முன் சொன்ன) காண்டிகை யுரையின் உறுப்பு ஐந்தனாலும் சந்தேகந்தீர மெய்மைப் பொருளைக் குறையாமல் (விரித்து) உரைப்பது விருத்தியுரையாகும். **எ—று.**

> சூத்திரத் துட்பொருளன்றியும் என்றதனால் 'பாடங்கருத்தே' என்னும் முதற்குறிப்பையுடைய சூத்திரத்துட் சொன்ன பதினான்கு உறுப்புக்ளையும் கொண்டு வருவது விருத்தியுரை என்ற தாயிற்று.இனி, தன்னுரையானும் பிறநூலானும் ஐங் காண்டிகையுறுப் போடென்றதனால் – ஐங் காண்டிகை யுறுப்பின் மேற்பட்டு வருவன வெல்லாம் விருத்தியுரை யென்பதே இதன் கருத்தெனவுங் கூறுப.

## கா.நமச்சிவாய முதலியார்

**சூத்திரத்து** – சூத்திரத்தில், **உட்பொருள் அன்றியும்** – உள்ள பொருளை யல்லாமலும், **ஆண்டைக்கு** – அவ்விடங்களுக்கு, **இன்றி அமையா யாவையும்** – முக்கியமான எல்லாப் பொருள்களும், **விளங்க** – விளங்கும்படியாக, **தன் உரையானும்** – தானுரைக்கும் உரையாலும், **பிறநூலானும்** – ஆசிரிய வசனங்களாலும், **ஐங்காண்டிகை உறுப்பொடு**– (முன்சொன்ன) காண்டிகையுரையின் உறுப்பு ஐந்தனுடனும், ஐயம் அகல – சந்தேகந் தீர, **மெய்யினை** – உண்மைப் பொருளை, **எஞ்சாது** – குறையாமல், **இசைப்பது** – உரைப்பது, **விருத்தி** – விருத்தி யுரையாகும்.

> '**சூத்திரத் துட்பொரு ளன்றியும்**' என்றதனால், முன்சொன்ன பதினான்கு உறுப்புகளையும் கொண்டு வருவது விருத்தியுரை என்றதாயிற்று.
>
> காண்டிகை – (ஐந்து வகையாகக்) கண்டித்து உரைக்கப்படுவது

## மோசசு பொன்னையா

சூத்திரத்தின் உட்கிடையாகிய பொருளல்லாமலும், அவ்வவ்விடங்களில் பொருள் விளக்கத்திற்கு இல்லாமல் தீராத பொருட்கள் அனைத்தையும் தனது விளக்கவுரையாலும், பிறர்நூல் மேற்கோள்களாலும் ஐயந்தீர, மெய்ப்பொருளை முற்றிலுமாக விரித்துத் தெளிவிப்பது விருத்தியுரையாகும், எ—று.

> காண்டிகை உறுப்புக்களோடு ஒன்றும் பலவும் உறுப்புக்களைப் பெற்று வருவது விருத்தியுரையாம் என்பது வெளிப்படை. இத் தெளிவுரையும் விருத்தியுரையே எனக் கொள்க.

# நூலென்னும் பெயர்க்காரணம்

23. *பஞ்சிதன் சொல்லாப் பனுவ லிழையாகச்
செஞ்சொற் புலவனே சேயிழையா -எஞ்சாத
கையேவா யாகக் கதிரே மதியாக
மையிலா நூன்முடியு மாறு.

**பஞ்சி தன் சொல்லாப் பனுவல் இழையாகச்
செஞ் சொல் புலவனே சேயிழையா -எஞ்சாத
கையே வாயாகக் கதிரே மதியாக
மை இலா நூல் முடியும் ஆறு.**

pañsi ṭaṉ sollāp paṉuval iḷaiyākas
señ sol pulavaṉē sēyiḷaiyā -eñsāṭa
kaiyē vāyākak kaṭirē maṭiyāka
mai ilā nūl mutiyum āṟu.

## என்றி பவர் -ஆங்கில மொழிபெயர்ப்பு

## Explanation of the figurative expression-thread

A literary work is called Nul, signifying thread (but here figuratively used), to denote the labour attending the composition of a work, as compared to the spinning of cotton&c. thus, the words are cotton; the composition is twisted thread; the spinning maid that twists the thread represents the learned author; her hand employed is turning the machine is analogous with the author's mouth; and the spindle by means of the relation of which the thread is twisted represents the author's mind; thus the twisting of thread and the writing of a work are analogous.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், நூல் என்னும் பெயர் வருமாறு உணர்–ற்று.

இ–ள்.: இந்த நூல் முடியுமாறு இது ஆதலின், நூல் என்றது உவமவாகு பெயராம், எ–று.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** நூற்குக் காரணக் குறியாமாறு கூறுகின்றது.

**இ—ள்.: பஞ்சதன் சொல்லாப்** – பஞ்சே சொல்லாகவும், **பனுவல் இழையாகச்** – பஞ்சினாற் சேர்ந்த இழையே சொல்லினாற் சேர்ந்த பனுவலாகவும், **செஞ்சொற் புலவனே சேயிழையா** – நூல் நூற்கின்ற சேயிழையே செய்யுள் செய்கின்ற புலவனாகவும், **எஞ்சாத கையே வாயாகக்** – நூல் நூற்பானது குறைபாடில்லாத கையே புலவரது வாயாகவும், **கதிரே மதியாக** – நூல் சேர்க்கின்ற கதிரே புலவரது மதியாகவும், **மையிலா நூல் முடியுமாறு** – அச் சேயிழை நூற்கின்ற நூலே புலவரது நூல் முடியும் முறையாம், **எ—று.**

## விசாகப் பெருமாளையர்

**இது,** நூலென்னும் பெயர் வருமாறு சொல்லுகின்றது.

**இ—ள்.: இதன்சொல்**—இதனது சொல், **பஞ்சா**—பஞ்சாகவும், **பனுவல்**—செய்யுள், **இழையாக**—இழையாகவும், **செஞ்சொற் புலவன்**—செவ்வையாகிய சொல்லுகளை யறிந்த புலவன், **சேயிழையா** – நூற்கின்ற பெண்ணாகவும், **எஞ்சாத**—குறையாத, **வாய்** – வாய், **கையாக** – கையாகவும், **மதி** – அறிவு, **கதிராக** – கதிராகவும், **மையிலா** – குற்றமில்லாத, **நூல்**—இந் நூலானது, **முடியுமாறு** – முடியும்வழி இதுவாகும், **ஆகையால்** – நூலென்றது உவமவாகுபெயரா **மென்றவாறு.**

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** நூலென்னும் பெயர்வந்தவாறுணர்த்துகின்றது.

**இ—ள்.: பஞ்சி** – பஞ்சானது, **தன் சொல்லா** – அவனுடைய வார்த்தையாகவும், **பனுவல்** – நூலகத்துள்ள செய்யுளானது, **இழையாக** – பஞ்சி நூலாகவும், **செஞ்சொற் புலவன்** – செவ்விய சொற்களை ஆராய்கின்ற புலவன், **சேயிழையா** – நூல் நூற்கு மடந்தையாகவும், **எஞ்சாத** – குறையாத, **கை வாயாக** – கை வாயாக நூல் நூற்குங் கை புலவன் வாயாகவும், **கதிர் மதியாக** – நூற்குங் கதிர் புலவன் அறிவாகவும், **மையிலா நூன் முடியுமாறு** – குற்றமில்லாத நூல் முடியுந் தன்மையிது, **எ—று.**

சுட்டுப் பெயர்ப்பயனிலை வருவிக்கப்பட்டது. ஆதலால், நூலென்றது உவமையாகு பெயரெனக் காண்க.

## கா.கோபாலாசாரி - தி.கோ.ரங்காசாரி

**உரை :– தன் சொல் பஞ்சி ஆ** – (நூல் செய்யும்) புலவனது சொல்லே பஞ்சாகவும், **பனுவல் இழை ஆக** – செய்யுளே இழையாகவும், **செம் சொல் புலவனே** – செம்மையான சொற்களை அறிந்த புலவனே, **சேயிழை ஆ** – (நூற்கின்ற) பெண்ணாகவும், **எஞ்சாத** – குறையாத, **வாயே கை ஆக – மதியே கதிர் ஆக** – அறிவே (நூற்கும்) கதிராகவும், **மை இலா நூல்** – குற்றமற்ற (கல்வியென்னும்) நூல், **முடியும் ஆறு** – முடியும் விதமாம்.

குறிப்பு :–

இதனால் 'நூல்' என்பது உவமையாகுபெயரென அறிக. 'பஞ்சு இதன் சொல்' எனப் பிரித்தும் உரைப்பர். ஏகார ஆகாரங்களும், ஆக என்பதும் பிரித்துக் கூட்டி யுரைக்கப் பட்டன.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: தன் சொல் பஞ்சியா** – தன் சொற்கள் பஞ்சாகவும், **பனுவல் இழை ஆக** – செய்யுள் இழையாகவும், **செஞ்சொற் புலவன் சேயிழையா** – செவ்விய சொற்களை அறிந்த புலவன் நூற்கின்ற பெண்ணாகவும், **எஞ்சாத வாய் கையாக** – குறையாத வாய் கையாகவும், **மதி கதிர் ஆக** – அறிவு கதிராகவும், **மை இலா நூல் முடியும் ஆறு** – குற்றமில்லாத கல்வி நூலானது முடியும் வழி இது, **எ–று.**

ஆதலால், நூலென்றது உவமை யாகுபெயரெனக் காண்க.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். தன் சொல் பஞ்சியா** – தன்சொற்கள் பஞ்சாகவும், **பனுவல் இழை ஆக** – செய்யுள் இழையாகவும், **செஞ்சொற் புலவன் சேயிழையா** – செவ்விய சொற்களை அறிந்த புலவன் நூற்கின்ற பெண்ணாகவும், **எஞ்சாத வாய்கையாக** – குறையாத வாய் கையாகவும், **மதி கதிர் ஆக** – அறிவு கதிராகவும், – மை இலா நூல் முடியும் ஆறு – குற்றமில்லாத கல்வி நூலானது முடியும் வழி இது, **எ–று.**

இதனாலும் நூலென்றது உவமையாகுபெயராம். நூன்மாண்பு பெருக்கி முருக்கி மனக்கோட்டந் தீர்க்கும் எனக் கூட்டுக.

## பவானந்தம் பிள்ளை

**இ—ள்.; தன் சொல் பஞ்சியா** – தன் சொற்கள் பஞ்சாவும், **பனுவல் இழை ஆக** – செய்யுள் இழையாகவும், **செஞ்சொற் புலவன் சேயிழையா** – செவ்விய சொற்களை அறிந்த புலவன் நூற்கின்ற பெண்ணாகவும், **எஞ்சாத வாய் கையாக** – குறையாத வாய் கையாகவும், **மதி கதிர் ஆக** – அறிவு கதிராகவும், **மை இலா நூல் முடியும் ஆறு** – குற்றமில்லாத கல்விநூலானது முடியும் வழி இது. எ—று.

'இது' என்னும் சுட்டுப்பெயர்ப் பயனிலை வருவிக்கப்பட்டது.

| | | |
|---|---|---|
| பஞ்சு | = | சொல் |
| இழை | = | செய்யுள் |
| நூற்கும் பெண் | = | கற்ற புலவன் |
| கை | = | வாய் |
| கதிர் | = | அறிவு – நூல் முடியும் வழி |

ஆதலால், நூலென்றது உவமையாகுபெய ரெனக் காண்க.

## கா.நமச்சிவாய முதலியார்

**தன் சொல்** – தனது சொல், **பஞ்சி ஆ** – பஞ்சாகவும், **பனுவல்** – செய்யுள், **இழை ஆக** – இழையாகவும், **செஞ்சொல் புலவன்** – செவ்வையாகிய சொற்களை யறிந்த புலவன், **சேயிழை ஆ** – நூற்கின்ற பெண்ணாகவும், **எஞ்சாத** – குறையாத, **வாய் கை ஆக** – வாய் கையாகவும், **மதி கதிர் ஆக** – அறிவு கதிர் என்னுங் கருவியாகவும், **மை இலா** – குற்றமில்லாத, **நூல்** – கல்வி நூலானது, **முடியுமாறு** – முடியும் வழி (இதுவாகும்).

'ஆக' என்பது 'ஆ' என விகாரமாயிற்று. நூல், உவமவாகுபெயர்.

## மோசகு பொன்னையா

பஞ்சினை மடந்தை தன் கையாலும் கதிராலும் நூலாக்குகின்றாள்; அவ்வாறே, சொல்லைப் புலவன் தன் வாயாலும் மதியாலும் குற்றமில்லாக் கல்வி நூலாக்குகின்றான். இதுவே கல்வி நூல் ஆகும் முறையாகும்,எ—று. **(23)**

24. உரத்தின் வளம்பெருக்கி யுள்ளிய தீமைப்
புரத்தின் வளமுருக்கிப் பொல்லா-மரத்தின்
கனக்கோட்டந் தீர்க்குநூ லஃதேபோன் [1]மாந்தர்
மனக்கோட்டந் தீர்க்குநூன் மாண்பு.

உரத்தின் வளம் பெருக்கி உள்ளிய தீமைப்
புரத்தின் வளம் முருக்கிப் பொல்லா-மரத்தின்
கனக் கோட்டம் தீர்க்கும் நூ ல் அஃதே போல் மாந்தர்
மனக் கோட்டம் தீர்க்கும் நூல் மாண்பு.

uraṭṭiṉ vaḻam perukki uḻḻiya ṭīmaip
puraṭṭiṉ vaḻam murukkip pollā-maraṭṭiṉ
kaṉak kōttam ṭīrkkum nū l akhṭē pōl mānṭar
maṉak kōttam ṭīrkkum nūl māṇpu.

## என்றி பவர் -ஆங்கில மொழிபெயர்ப்பு

### A Nul used to measure timber

As the crookedness of a piece of timber is made straight by the application of *Nul,* a carpenter's line or cord, so the crookedness (ignorance or prejudice) of the mind is removed or made straight by the application of *Nul*, a literary work; therefore, the word Nul, besides signifying thread, is also figuratively used to denote a carpenter's or mason' line or cord.

## மயிலை நாதர்

இ–ள்.: இவ்வாறு நூற்கப்படுதலானும், நூலே போலச் செப்பஞ் செய்தலானும் நூலெனப்படும், எ – று.

நூலென்ற சொற்குக் காரணங் கூறினவெனக் கொள்க.

---

பாட வேறுபாடு.:–

1. மாக்கள்

## சங்கர நமச்சிவாயர்

**எ — னின்,** இதுவும் அது.

**இ — ள்.:** அந் நூல் போல் செப்பம் செய்தலானும் நூல் என்றது உவம வாகுபெயராம், **எ—று.**

புரத்தினது உரத்தின் வளம்பெருக்கி, உள்ளிய தீமை வளமுருக்கி எனக் கூட்டுக. புரம் – உடம்பு, உரம் – நெஞ்சு. பின்பு தீமைவளம் என்றமையான் முன்பு நல்வளம் எனத் தந்துரைக்க. நல்வளம் – அறிவு; தீமைவளம் – அறியாமை.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** இதுவுமது என்றவாறு.

**இ—ள்.: உரத்தின் வளம் பெருக்கி** – மனத்தினது திண்ணிமையாயுள்ள வளத்தைப் பெருக்கி, **உள்ளிய தீமைப் புரத்தின் வளமுருக்கிப்** – பொருந்திய கோளை முதலாகிய குற்றப்பாடு மனத்தினது உடம்பின் வளத்தைக் கெடுத்து, **பொல்லா மரத்தின் கனக்கோட்டந் தீர்க்கு நூல்** – குற்றம் பொருந்திய மரத்தினது கனத்தையும் கோணலையும் நீக்குவது நூலாம்; **அஃதே போல்** – அந்நூல் மரத்தைச் செப்பம் செய்யுமாறு போல, **மாந்தர் மனக்கோட்டந் தீர்க்கும்** – மாந்தரது மனக் கோணலையும் புல்லிய செய்கையையும் நீங்கச் செய்வது, **நூல் மாண்பு** – புலவராற் செய்யப்படும் நூலினது தன்மையாம், **எ—று.**

நூல் போல இதுவும் நூற்கப்படுதலானும் அந்நூல் போலச் செய்யப்படுதலினாலும் நூல் என்பது அடை யடுத்து வந்த உவமையாகுபெயராய குறியாயிற்று.

## விசாகப் பெருமாளையர்

இதுவுமது.

**இ—ள்.:** புரத்தின்—உடம்பினுளிருக்கின்ற, **உரத்தின் வளம்** – அறிவின் வளத்தை, **பெருக்கி**—வளர்வித்து, **உள்ளிய**—நினைக்கப்பட்ட, **தீமை வளம்** – அறியாமையின் வளத்தை, **முருக்கி** – கெடுத்து, **பொல்லா மரத்தின்** –

பொல்லாத மரத்திரனது, **கனக்கோட்டம்** – கனம் பொருந்திய கோணலை, **நூல்** – எற்று நூலானது, **தீர்க்கும்**–நீக்கும், **அஃதே போல்** – அதுபோலவே, **நூல்** – கல்வி நூலானது, **மாந்தர்**–மனிதரது, **மனக் கோட்டம்** – மனத்தினது கோணலை, **தீர்க்கும்** – நீக்கும், **மாண்பு** – அந்நூல் போலச் செப்பஞ் செய்யுமிம் மாட்சிமை யாலும், நூலென்றது உவமவாகுபெயராம், **எ–று.**

## முகவை இராமானுச கவிராயர்

இதுவுமது.

**இ–ள்.: புரத்தி னுரத்தின் வளம் பெருக்கி** – சரீரத்தினது ஞான வளத்தைப் பெருகச் செய்து, **உள்ளிய** – நினைக்கப்பட்ட, **தீமை வளம்** – தீமையாகிய அஞ்ஞான வளத்தை, **முருக்கி**–கொன்று, **பொல்லா மரத்தின்** – கெட்ட மரத்தினுடைய, **கனக்கோட்டம்**–மிக்க கோணலை, **தீர்க்கு நூலஃதே போல்** – போக்குகின்ற எற்று நூலின் அம் மாட்சிமை போலவே, **மாந்தர் மனக்கோட்டம்** – மனிதருடைய மனக் கோணலை, **தீர்க்கும்**–போக்கும், **நூன் மாண்பு**–கல்வி நூலினது மாட்சிமை, **எ–று.**

ஆதலால், நூலென்றது உவமை யாகுபெயராமென்க. பெருக்கி, முருக்கி, மனக்கோட்டந் தீர்க்கும் நூன்மாண் பெனவும்; புரத்தினதுரத்தின் வளமெனவுங் கூட்டுக.

'நூலஃதே போ' லென்ற விடத்து நூலின் அம் மாட்சியே போலவென விரித்துத் தீர்க்கும் நூன்மாண்பு என முடித்துக்கொள்க.

## கா.கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– புரத்தின்** – உடம்பிலுள்ள, **உரத்தின் வளம் பெருக்கி** – அறிவின் வளத்தை அதிகப்படுத்தி, **உள்ளிய** – நினைக்கப்பட்ட, **தீமை வளம் முருக்கி** – அஞ்ஞானத்தின் மிகுதியை ஒழித்து, **பொல்லா மரத்தின்** – கெட்ட மரத்தினது, **கனம் கோட்டம்** – மிக்க கோணலை, **தீர்க்கும் நூல்** – போக்குகின்ற எற்று நூலினது, **அஃதே போல்** – அத்தன்மை போலவே, **நூல் மாண்பு** – கல்வி நூலின் தன்மையும், **மாந்தர் மனம்கோட்டம்** – மனிதரது மனக் கோணலே (மனதின் வேறுபாட்டை), **தீர்க்கும்** – ஒழிக்கும்.

குறிப்பு :- இக்காரணத்தாலும் 'நூல்' உவமையாகு பெயர் என அறிக. இச்சூத்திரம் நூலின் தன்மை உணர்த்தியது எனவும் கூறுவர்.

## ஆறுமுக நாவலர்

**இ-ள்.: புரத்தின் உரத்தின் வளம்பெருக்கி** – உடம்பினு ளிருக்கின்ற ஞானவளத்தை வளர்வித்து, **உள்ளிய தீமை வளம் முருக்கி** – நினைக்கப்பட்ட தீமையாகிய அஞ்ஞான வளத்தைக் கெடுத்து, **பொல்லாத மரத்தின் கனக்கோட்டந் தீர்க்கும் நூல் அஃதே போல்** – கெட்ட மரத்தினது மிகுதியாகிய கோணலைப் போக்குகின்ற எற்று நூலின் அம் மாட்சிமை போலவே, **மாந்தர் மனக் கோட்டந் தீர்க்கும்** – மனிதருடைய மனத்தினது கோணலைப் போக்கும், **நூல் மாண்பு** – கல்வி நூலினது மாட்சிமையானது, **எ–று.**

இதனாலும் நூலென்றது உவமை யாகுபெயராம். நூன்மாண்பு பெருக்கி முருக்கி மனக்கோட்டந் தீர்க்கும் எனக் கூட்டுக.

## வ. குமாரசாமிப் புலவர்

**உரத்தின் வளம் பெருக்கி** – நல்ல வைரத்தின் வளத்தை அதிகப்படுத்தி, **உள்ளிய** – நினைக்கப்பட்ட, – **புரத்தின் தீமை வளம் முருக்கி** – உருவத்தின் (வெளிறாகிய) தீயவளத்தை யழித்து, **பொல்லாமரத்தின்** – ஒழுங்கற்ற மரத்தினது, **கன கோட்டம் தீர்க்கும் நூல்** – கனத்தொடு கோணலையும் தச்சனது எற்ற நூல் நீக்கும், **அஃதேபோல்** – அதுபோல, **புரத்தின் உரத்தின் (நல்) வளம் பெருக்கி** – சரீரத்துள்ளிருக்கின்ற நல்லறிவின் வளத்தை விருத்தியாக்கி, **உள்ளிய தீமை வளம் முருக்கி** – நினைக்கப்பட்டிருந்த அஞ்ஞானவிருத்தியைக் கெடுத்து, **மாந்தர் மனக்கோட்டம்** – மனிதரது மனக்கோணலை, **நூல் மாண்பு தீர்க்கும்** – கல்வி நூலின் மாட்சிமையானது நீக்கும். **எ–று.**

(இவ்வுரை நன்றாயின் அறிஞர் கொள்க).

தச்சர் மரத்தின் வளைவுங் கனமுந் தீர்க்கின்ற எற்று நூல்போல் மாந்தரது அஞ்ஞான விருத்தியைக் கெடுத்து நல்லறிவை விருத்தியாக்கும் என்றவாறாம்.

எற்று நூல்போலிருத்தலானும் சாத்திரத்தை நூலென்றது உவமை யாகுபெயர். தீமை வளமுருக்கியென்று பின் அடை கொடுத்தலினால் முன்வளம் என்றது நல்வளத்தை யென்பது பெறப்பட்டது.

நூலெற்றிக் கோணலைத் தீர்க்கவெட்டி சிறிது வளைவான மரத்தை நேராக்குவது போல சாத்திரமறிவதால் அஞ்ஞானத்தை நீக்கி ஞானத்தை விருத்திசெய் யலாமென்று கல்வியினுபயோக முணர்த்தப்பட்டமையு மிவ்வெண்பாவிற் காண்க. எற்றுதல் – தெறித்தல்.

## வை.மு. சடகோபராமாநுசாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: புரத்தின் உரத்தின் வளம் பெருக்கி** – உடம்பினுள் உள்ள அறிவின் வளத்தை வளர்வித்து, **உள்ளிய தீமை வளம் முருக்கி** – நினைக்கப்பட்ட தீமையாகிய அறியாமையின் மிகுதியை ஒழித்து, **பொல்லா மரத்தின் கனம் கோட்டம் தீர்க்கும் நூல் அஃதே போல்** – கெட்ட மரத்தினது மிக்க கோணலைப் போக்குகின்ற எற்று நூலின் அம் மாட்சிமை போலவே, **நூல் மாண்பு** – கல்வி நூலின் மாட்சிமை, **மாந்தர் மனம் கோட்டம் தீர்க்கும்** – மனிதரது மனத்தின் கோணலைப் போக்கும்; **எ – று.**

இதனாலும், நூல் – உவமவாகுபெயராம். மரம் முதலியவற்றின் கோணலைத் தீர்த்துச் செப்பஞ் செய்யும் எற்று நூல் போல மனத்தின் கோணலைத் தீர்த்துச் செவ்வை செய்வது நூலென்க.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள். புரத்தின் உரத்தின் வளம் பெருக்கி** – உடம்பினுளிருக்கின்ற ஞான வளத்தை வளர்வித்து, **உள்ளிய தீமை வளம் முருக்கி** – நினைக்கப்பட்ட தீமையாகிய அஞ்ஞான வளத்தைக் கெடுத்து, **பொல்லா மரத்தின் கனக் கோட்டந் தீர்க்கும் நூல் அஃதே போல்** – கெட்ட மரத்தினது மிகுதியாகிய கோணலைப் போக்குகின்ற எற்று நூலின் அம் மாட்சிமை போலவே, **மாந்தர் மனக் கோட்டந் தீர்க்கும்** – மனிதருடைய மனத்தினது கோணலைப் போக்கும், **நூல் மாண்பு** – கல்வி நூலினது மாட்சிமையானது. **எ–று.**

இதனாலும் நூலென்றது உவமையாகு பெயராம். 'நூல் மாண்பு பெருக்கி, முருக்கி, மனக்கோட்டந் தீர்க்கும்' எனக் கூட்டுக.

## கா.நமச்சிவாய முதலியார்

**புரத்தின்** – உடம்பினுளிருக்கின்ற, **உரத்தின் வளம்** – அறிவின் வளத்தை, **பெருக்கி** – வளர்வித்து, **உள்ளிய** – நினைக்கப்பட்ட, **தீமைவளம்** – அறியாமையின் மிகுதியை, **முருக்கி** – கெடுத்து, **பொல்லா மரத்தின்** – வளைந்த மரத்தினது, **கனம் கோட்டம்** – மிகுதியாகிய கோணலை, **நூல்** – எற்று நூலானது, **தீர்க்கும்** – நீக்கும், **அஃதே போல்** – அது போலவே, **நூல் மாண்பு** – கல்வி நூலினது மாட்சிமையானது, **மாந்தர்** – மனிதரது, **மனங் கோட்டம்** – மனத்தினது கோணலை, **தீர்க்கும்**– நீக்கும்.

எற்று நூலானது கெட்ட மரத்தின் மிக்க வளைவைப் போக்கும்.

**நன்னூல் உரைவளம்**

**பாயிரம் தொகுதி – 1 முற்றும்**

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

# அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| தமிழர் பண்பாட்டுச் சொற்கோவை-ஒப்பனையியல் | 250.00 |
| தமிழிலக்கியக் குறியீடுகள் அகராதி | 225.00 |
| அரங்கேற்றுகாதை ஆராய்ச்சி | 140.00 |
| பழந்தமிழ் அமைப்பியல் மற்றும் குறியியல் ஆய்வுகள் | 45.00 |
| Essays and Tributes on Tirukkural (1886-1986) | 100.00 |
| இந்தியச் சூழலில் மொழிஇழப்பு ஒரு சமுதாய மொழியியல் பார்வை | 60.00 |
| பழந்தமிழில் அறிவியல் | 45.00 |
| நீறணி பவளக் குன்றம் | 35.00 |
| உலகப் பகுத்தறிவு நீரோட்டத்தில் பெரியார் | 35.00 |
| கலீலியோ முதல் கலாம் வரை | 35.00 |
| குலோத்துங்கன் கவிதைகள் ஒரு கோபுர தீபம் | 60.00 |
| தமிழறிஞர் அடிகளாசிரியரின் சிறுவர் இலக்கியப் பாடல்கள் | 30.00 |
| நாமக்கல் கவிஞரின் தமிழ்ப்பணி | 30.00 |
| ஈழத்தில் கண்ணகி கலாச்சாரம் | 30.00 |
| சிறுபஞ்சமூலம்- ஒரு சமூகவியல் பார்வை | 30.00 |
| மீளும் வரலாறு:அறியப்படாத நந்தனிக் கதை | 40.00 |
| சங்கத் தமிழ் பகுதி 1 | 100.00 |
| சங்கத் தமிழ் பகுதி 2 | 100.00 |
| சங்கத் தமிழ் பகுதி 3 | 115.00 |
| சங்கத் தமிழ் பகுதி 4 | 130.00 |
| சங்கத் தமிழ் பகுதி 5 | 110.00 |
| ம.பொ.சி.யின் வாழ்க்கை வரலாற்று இலக்கியங்கள் | 60.00 |
| தொல்காப்பியம், சங்க இலக்கியம் பதிப்பும் பதிப்பாளரும் | 160.00 |
| இந்தி நாடகப்பனுவல் (ஆடிமாதத்தில் ஒரு நாள்) | 50.00 |
| திராவிட இயக்கத்தில் அன்னை மணியம்மையின் பங்கு | 40.00 |
| பண்பாட்டுப் பார்வையில் திருமந்திரம் | 70.00 |
| காரைக்கால் அம்மையார் பாடல்கள் ஓர் ஆய்வு | 40.00 |
| Freudism in the Novels of James Joyce and T.Jankiraman: A comparative study | 125.00 |
| இலக்கணத்தொகை யாப்பு பாட்டியல் | 290.00 |
| தென்கிழக்கு ஆசியா நாடுகளில் தமிழ்ப்பண்பாடு | 310.00 |
| பதிற்றுப்பத்து மூலமும் ஆராய்ச்சிப்புத்துரையும் | 170.00 |
| தமிழ் மொழிபெயர்ப்பு முன்னோடிகள் | 185.00 |
| மனிதப் புனிதர் கக்கன் | 110.00 |
| மொழிபெயர்ப்பு:ஒரு கவின்கலை | 75.00 |
| மூவர்தமிழ் மூன்று பார்வைகள் | 50.00 |
| காமன்வெல்த் நாடுகளின் கவிதைகள் | 100.00 |
| அறிஞர்கள் பார்வையி ல் பேரறிஞர் அண்ணா | 145.00 |
| அறிஞர் அண்ணா-மொபசான் சிறுகதைகள்-ஒப்பாய்வு | 160.00 |
| இராசேந்திர சோழன் வெளியிட்ட எசாலம் செப்பேடுகள் | 55.00 |
| கடலடியில் தமிழர் நாகரிகம் | 55.00 |
| கடற்பொறியியற் கலைச்சொற்கள் (குறுங்கலைக்களஞ்சியம்) | 150.00 |
| சங்க இலக்கியத்தில் சமூக ஆய்வுகள் | 55.00 |
| படைப்பு நெறிமுறைகள் | 160.00 |
| Sangam Classics: New Perspectives | 165.00 |

---

**681 நன்னூல் உரைவளம் – 1 (பாயிரம் – 1)** **85.00**